# கள்ளம்

தஞ்சை ப்ரகாஷ்

மின்னூலாக்கம்
முரளிதரன்

டிஸ்கவரி புக் பேலஸ்

கே.கே.நகர் மேற்கு, சென்னை - 600 078.
(பாண்டிச்சேரி கெஸ்ட் ஹவுஸ் அருகில்)
Ph: 044-6515 7525 Mobile: +91 87545 07070

"நான் சிந்திக்கிறேன், எனவே, நான் இருக்கிறேன்"

- தெகார்தே

'**கள்**ளம்' உண்மையில் இது ஓர் அபாயகரமான நாவல். ப்ரகாஷ் சிறு பிள்ளைகளைப் போல அபாயங்களைச் சந்திப்பதில் எப்போதும் ஆவல் காட்டுவது வழக்கம். அதனால் தனக்கு கஷ்டம், நஷ்டம் என்று தெரிந்தும் துணிந்து அபாயங்களுடன் விளையாட அவரால்தான் முடியும்.

இக்கதையை நான் படித்தபோது, "பெண்கள் ஏனிப்படி லகுவில் சோரம் போகிறார்கள்?" என்ற கேள்வியை ப்ரகாஷிடம் கேட்டேன். "நீ வளர்ந்த சூழ்நிலையில் இவ்வாறு கேட்கிறாய். ஆனால் சமுதாயம் அப்படி இல்லை. அங்கே இவை நடந்தேறிக் கொண்டுதான் உள்ளன" என்று பதிலளித்தார். அப்போது என்னுடன் பணியாற்றிய எனது தோழி செல்வி, வசந்தாவிடம் நாவலைக் கொடுத்து, "படித்து விட்டு உனக்குத் தோன்றுவதைச் சொல்" என்றார். அவர் தஞ்சாவூர் பூக்காரத் தெரு பகுதியில் வசிப்பவர். படித்து விட்டு "எப்படி பாவா கண்ணால் பார்த்தது போல எழுதி இருக்கிறீர்கள்?" என்றார். ப்ரகாஷ் என்னைப் பார்த்தார். இப்படி இல்லை என்று மறுப்பதற்கு வகையில்லாமல் அவரது படைப்பும் கருத்தும் வலுப்பெறும் விதமாகத்தான் நடப்பும் செய்திகளும் கூறுகின்றன.

பிரகாஷ் தமிழில் எழுத நேர்ந்துவிட்ட கொள்கைச் சங்கடங்கள் என்ற கட்டுரையில், "வாழ்வின் உண்மைகளை இந்தத் தலைமுறைக்கும் அடுத்த தலைமுறைக்கும் அடுத்து வரும் யுகத்துக்கும் எழுதி வைக்கிற வேலையை ரத்தம் கசியக் கசிய செய்து தீர்த்துக் கொண்டேயிருக்கிற ஒரேயொரு பைத்தியக்கார உலுத்தன் தமிழகத்தில் எழுத்தாளன் மட்டுமே!" என்று குறிப்பிட்டுள்ளார்.

இதெல்லாம் பழைய விஷயங்கள், என்கிறீர்களா? "நண்பரே, ஆமாம் ரொம்பப் பழைய விஷயங்கள்தாம். புதுசு

ஒன்றுமில்லைதான். இவை என்றும் புதியதாகவே இருந்து வருகின்றன" என்று தொடருவார்.

ப்ரகாஷின் இனிய நண்பர்களுள் ஒருவர் மருத்துவர் திரு.டாக்டர். செந்தமிழன், நோய்த்தடுப்பு மற்றும் மருத்துவத்துறையில் இயக்குநர் உள்ளிட்ட பல பொறுப்புகளில் பணியாற்றிவர். இவரைப் பற்றி ப்ரகாஷ், "உனக்கு என்ன தெரியும்? திரு.செந்தமிழன் மிக நுண்மையானவர். கவித்துவம் நிறைந்தவர். அவர் படித்துக் கொண்டு இருக்கும்போதே நுண்மையான கவிஞன்" என்று பேசும்போதே கடந்தகால உலகத்திற்குச் சென்று நுகர்ந்த ருசிப்புடன் கூறினார்.

"வேலையின் பளுவால் பாவம் அவர் எதுவும் செய்ய இயலாத நிலை" என்றார். டாக்டர் செந்தமிழன் என்னிடம், ப்ரகாஷ் கள்ளம் நாவலை சிலாகித்து "படித்தீர்களா?" என்று கேட்டார். நான் சற்று அதிர்ந்து, என்ன சொல்வது? என்று தெரியாமல் திகைத்தேன். எனக்குள், 'இது ஒரு நெருடலான நாவலாயிற்றே' என்ற எண்ணம். அவர், "நான் எதிர்பார்க்கவே இல்லை, ப்ரகாஷ் இப்படி எழுதுவார் என்று; எப்படி எழுதி இருக்கிறார். பெண்களின் உள்ளே இருக்கும் ஆற்றலை உணர்ந்து வெளிக்கொணர்ந்து அவர்களைப் படைத்திருக்கும் விதம் அருமை" என்றார். எனக்கோ சரியாகப் புரியவில்லை என்பதுதான் உண்மை. இவர் உண்மையாகத்தான் சொல்கிறாரா, அல்லது கேலி செய்கிறாரா என்று யோசித்தவாறே மௌனமாக இருந்து விட்டேன். அந்த நிகழ்வை ப்ரகாஷிடம் கூறியபோது அவர் என்னை ஆழ்ந்து பார்த்து விட்டு சிரித்தார்.

அன்பு, நட்பு, விசுவாசம் என்பனவெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் ஆண் பெண் கவர்ச்சியின் பாற்பட்டனவாகவே இருப்பதுதான் உண்மை. அவை தனிமனித விருப்பு வெறுப்பின் விளைவாக முடிவுறுவதும்தான் நிகழ்கிறது. ஒரு பயிலரங்கில் பங்கெடுத்துக் கொண்டிருந்தேன். ஒரு பயிற்சியாக, "இந்தப் பிறவியில் நிறைவேறாதவற்றை எண்ணி, அடுத்த பிறவியென்று ஒன்று வாய்த்தால் அவற்றை எப்படியெல்லாம் அனுபவிக்க விரும்புகிறீர்கள்" என்றனர். நானும் கண்களை மூடிக் கொண்டு, 'அடுத்த பிறவியிலும் நானும் ப்ரகாஷும் தம்பதியராகவே வாழவேண்டும். ஆனால் இந்த எழுத்து வேலையை மட்டும் அவர் செய்யக்கூடாது. சராசரி மனிதனாக, நிறைய குழந்தை குட்டிகளோடு கூடியதொரு குடும்பமாக வாழ வேண்டும்' என்று யோசித்தேன். அதையே பிரார்த்தித்தேன். வந்த பின் ப்ரகாஷிடம் இவற்றைக் கூறினேன். அவர் என்ன சொன்னார் தெரியுமா?

'ஏழேழு ஜென்மம் எடுத்தாலும் நான் எழுத்தாளனாகவும்தான் இருப்பேன் என்றார்". "அப்படியானால் எனக்கு இந்த ஜென்மமே போதும் இனியொரு ஜென்மம் வேண்டாம்" என்றேன். நான் இப்படித்தான் ஒரு கலைஞனின் உண்மையான படைப்பாளியின் உளப்போக்கு உள்ளது. கடல் அலைகளின் போக்குக்கேற்ப அலைக்கழிப்புகளுக்கு இசைய பயணிக்கிற படகு போன்றவர்கள் எனலாம். கலைஞர்கள், கவிஞர்கள் கற்பனையில் வாழ்பவர்களாக தோற்றமளிப்பது உண்மைதான். சமுதாய இழுப்பின் சுழற்சியில் சிக்குண்டு அமிழ்ந்து விழுந்து போவதும்கூட இயற்கைதான். இவர்களது செயல்கள் ஒரு கட்டுக்குள் இருப்பதில்லை. ஆனால் கூர்ந்து நோக்கினால், ஆராய்ந்து பார்த்தால், இவர்களது வாழ்க்கையில் ஒரு லயத்தை உணர முடியும். ஆனால், எளிதுமல்ல; 'பரந்தாமராஜூ' கதாபாத்திரம்கூட ஒருவகையில் அப்படித்தான். ப்ரகாஷும், பரந்தாமராஜூக்களும் என்றும் கேள்விக்குரியவர்கள் என்பது எனது கருத்து.

தோன்றியதைப் பகிர்ந்தேன். பகிர்தலுக்கு 'நடுகல்' வெளியீட்டகத்துக்கும், என்னையும் எழுத தூண்டிய நண்பர்களுக்கும், குறிப்பாக 'கள்ளம்' நாவலின் அச்சுப் பிழைகளைச் செப்பனிட்டுத் தந்த திரு.சுகன் அவர்களுக்கும் வாசகர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி.

தோழமையுடன்,

மங்கையர்க்கரசி ப்ரகாஷ்.

# தஞ்சை ப்ரகாஷ் – சில முக்கிய குறிப்புகள்

– சுகன், சௌந்தர சுகன் இலக்கிய இதழ்

தஞ்சை ப்ரகாஷ் ஈரோடு மிஷன் ஆஸ்பத்திரியில் 10.06.1943ஆம் ஆண்டு பிறந்தவர்.

தாயார் மருத்துவர். க்ரேஷ் கார்டன், தஞ்சையில் முதல் பெண் அரசு மருத்துவர். கார்டன் அம்மாவின் மூதாதையர் திருநெல்வேலி சமஸ்தான வைத்தியர் குடும்பம். தந்தையார் எட்வர்டு கார்டன் தஞ்சாவூர் கள்ளர். கலப்புத் திருமணம் செய்து கொண்டவர்கள். கார்டன் மார்க்ஸ் லயனல் ப்ரகாஷ் என்கிற ஜி.எம்.எல். ப்ரகாஷின் துணைவியார் மங்கையர்க்கரசி ப்ரகாஷ்க்கு குழந்தைகள் இல்லை.

சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம், இந்தி, வங்காளம், ஆங்கிலம், உருது, ஜெர்மன் என்று பல மொழிகள் தெரிந்தவர். இரயில்வே துறையில் க்ரைம் ப்ராஞ்சில் சில ஆண்டுகாலம் பணிபுரிந்தார். அந்த வேலை இவரது கலை உள்ளத்திற்குச் சரிப்பட்டு வராததால் அதிலிருந்து வெளியே வந்துவிட்டார். இதழாசிரியர், பதிப்பாளர், வெங்காய வியாபாரி, அச்சகத்தார், பால்கடை முகவர், பிளாக் மேக்கர், இரப்பர் ஸ்டாம்ப் செய்பவர் என்று இருபதுக்கும் மேற்பட்ட தொழில்களைச் செய்தவர். ஒன்றிலும் நிலைக்காமல் இலக்கியமே வாழ்வாக தன் வாழ்வை அமைத்துக் கொண்டவர். தமிழ் முதுகலை படித்தவர்.

இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டதால் தன்னுடைய ஆட்டோ மொபைல் படிப்பை இழந்தவர்.

சும்மா இலக்கிய கும்பல், கதை சொல்லிகள், ஒளிவட்டம், தளி போன்றவை ப்ரகாஷ் நடத்திய இலக்கிய அமைப்புகள்.

பாலம், வைகை, குயுக்தம், சாளரம், தஞ்சை முரசு, வெ.சா.எ. இவர் நடத்திய இதழ்கள்.

சுதா விருது, குமாரன் ஆசான் விருது ஆகியவை இவர் பெற்ற விருதுகள்.

# எழுத்துக்கு முன்னே

இப்படி ஒரு நாவலை நான் எழுதுவேன் என்று இப்போதுகூட நம்ப முடியாமல்தான் இருக்கிறேன். இந்த நாவலை நான் படைக்க எழுத, எனக்கு உந்து சக்தி, நம்பிக்கை, துணை எல்லாமே சுந்தர்ஜி எனும் என் நண்பர்தான். இரண்டு மாதங்கள் உடல்நலம் கெட்டு மருத்துவமனையில் கிடந்தபோதும் என் கையாய், விரலாய் உதவியவன் சுந்தர்ஜி. எழுத முடியாதபடி கையில் கட்டி வந்து பல முறை ஆப்ரேஷன் ஆகி என் கையெழுத்தே விபரீதம் ஆனபோது, திடீரென்று ஒரு நாவலை எழுதும் ஆவல் எழுந்தது. அந்த நாவலைப் பற்றி நானும் சுந்தர்ஜியும், நிறைய கனவு கண்டோம். என்னைவிட, சுந்தர்ஜியும் எனது நண்பர் த.முருகேசனும் இந்த நாவலை நிறைய கனவுடன் கண்டார்கள். இதைவிட பெரிய பேறு என்ன இருக்க முடியும்? படைப்பு என்பதன் பூரணம் இப்படித்தான் பலராலும் ஒரு கலைஞனுக்கு நேரும். உண்மையில் அவர்கள்தான் கலைஞர்கள். நானல்ல. நான் இந்த நாவலைப் பற்றி கனவுகளையும் அவர்களிடம் சொல்லச் சொல்ல அவர்கள் என்னைத் தூண்டிக் கொண்டே இருந்தார்கள். ஆனால் என் கையில் கட்டி எலும்புக்குள் ஊடுருவியது. ஆப்ரேஷனுக்கு நான் தயாராக இருந்தது. தொடர்ந்து பழுப்பதும் அறுப்பதுமாய் சிறு சிறு வெட்டுகளுடன் அறுவை சிகிச்சை தள்ளிக் கொண்டே போய்க் கொண்டிருந்தது. நாவல் மனசில் பூத்து மரமாய் குலுங்கி நின்றது. ஆயினும் கையில் எழுத முடியாத ஏமாற்றம். 'எழுதி என்ன ஆகிவிடப் போகிறது' என்ற சலிப்பும் மிஞ்சவே மனசில் பூத்த மலர்கள் கொட்டிப் போய், மரம் சடலமாய் நின்றது. நானும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டேன். சில வருடங்கள் கழிந்தன. சிகிச்சையில் தப்பி வீடு திரும்பினேன்.

திடீரென ஒருநாள் சுந்தர்ஜி சொன்னான்; "ஏதாவது சொல்லுங்களேன். நான் அப்படியே எழுதிப் பார்க்கிறேன்.

தேறுகிறதான்னு பார்க்கலாமே!" யோசனை என்னவோ நன்றாகவே வேலை செய்தது. சொன்னேன்! சுந்தர்ஜி எழுதினான்! ஆஹா! எழுதுகிற சுகம், பலனோடு அதில் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அது புது அனுபவம். ஆனால் எழுத்து ஒரு கடும் உழைப்பு. தனியே தன்னந்தனியே தூக்கிப் புரட்ட வேண்டிய வேலை! இனிமை தரும் தனிமை! இது உழைப்புடன் இணைந்ததை யாரும் நம்பமாட்டார்கள். கலைஞனின் தனிமை ஆச்சரியமான குரூரம் கொண்டது. எழுதும்போதே படித்து இன்பம் பெறுகிற அனுபவம் சுந்தர்ஜி என்கிற என் அன்பனால் எனக்கு சித்தித்தது–எழுதுகிற போதே அதை ரசிக்கிற ரசிகனை அவன் சந்தோஷத்தை எனக்குப் பற்ற வைத்துக் கொள்ளும் எரியும் தீயின் சந்தோஷத்தை அனல் கக்கும் ரகசியம் புரிந்தது . இந்த நாவலை நான் சொல்ல அவன் எழுதிய போதினில்தான்.

இந்த 'கள்ளம்' நாவல் எழுதிய காலமெல்லாம் நான் கற்றேன். இப்போது இந்த நாவலுக்கு நானும் அந்நியன்; கள்ளம் நாவல் ஒரு புது வழி! இதில் மேம்போக்கான பார்வை நேர்வது யாருக்கும் சகஜம். எனவே நானும் உங்களைப்போல், மூன்றாவது அல்லது நான்காவது களத்தில்தான் நிற்கிறேன். இந்த நாவல் எனக்குப் புதுசு! புதிய பாதை, சோதனை என்றுகூடத் தோன்றுகிறது. நான் முன்பே எழுத நினைத்த ஒரு பிரம்மாண்டமான நாவலின் முதல் அத்தியாயம்தான் இந்த கள்ளம். எங்கள் தஞ்சாவூர் மண்ணில் அன்னியப்பட்டுப்போன பலதரப்பட்ட ஜனங்களின் வாழ்வின் போக்கை இந்த நாவலில் சொல்லி இருக்கிறேன். மிக பிரம்மாண்டமான ஒரு வாழ்வின் – ஜனங்களின் மூலை முடுக்கு இந்த நாவல்! தஞ்சாவூரில் இதே நாவல் எப்போதும் விபரீதமாய் புதுவதாகிக் கொண்டேயிருக்கிற ஜீவிதத்தை விமர்சனம் செய்ய எனக்கோ, தமிழின் எந்த கொம்பனாகிப்போன விமர்சகனுக்கோ முடியாது என்கிற பயங்கரமான உண்மையைத்தான் கள்ளமாக நான் எழுதியிருக்கிறேன். என்னைப் பொறுத்தவரை வாழ்க்கை வேறு. இலக்கியம் வேறு என்று நம்பமுடியாதவன் நான்! என் இஷ்டம்போல் வாழ்க்கையை அமைக்க முடியும் என்று நம்புகிறவன் நான். ஆனால் கனவுகளை வாழ்க்கை ஆக்கிவிட முடியாது என்பது நிதர்சனமான பின்னர்தான் எழுத வந்தேன்.

தஞ்சாவூர் பாணி ஓவியம்தான் இன்றைய ஓவியக்கலை வளர்வதற்கு மூலகாரணம் என்பது பலர் அறிந்தும், வெளிச் சொல்லாதது. இது என் சொந்த ஊர் பெருமை அல்ல! சோகம்!! பிற்காலத்தில் ரவிவர்மாவும், பத்மினியும், ஷெர்கிலும், இந்த ஓவியப் பாரம்பரியத்தைத்தான் வளர்த்துக் கொண்டு வெற்றி

அடைந்தார்கள். தஞ்சாவூரை ஆண்ட மராட்டிய மன்னர்கள் காலத்தில் அதற்கு முன் ரெகுநாத நாயக்கன் காலத்திலும் தஞ்சைக் கலைகள் இருட்டடிக்கப்பட்டபோது, வடக்கிருந்து வந்த ராஜூக்கள் என்ற வைணவர்கள் தஞ்சை ஓவியக் கலையுள் தங்கள் ஆந்திர சாயலை கலந்து தஞ்சையிலிருந்த ஒரு பாரம்பரியத்தையும் சேர்த்து ஒருவிதமான ஓவிய சித்திரப்பட மரபை உருவாக்கினார்கள். மராட்டிய +தெலுங்கு+ தமிழ்= கலவையான இந்த ஓவியச் சிற்பங்கள் தமிழ்நாடு முழுவதும் தஞ்சாவூர் ஆர்ட் பெயிண்டிங் என்ற பெயரில் பிரபலம் அடைந்தது, ராஜா ரவிவர்மாவின் ப்டங்கள் இந்தியாவெங்கும் பிரபலம் அடைந்தது போல, தஞ்சாவூர் சித்திரப்படம் என்ற பெயரில் பிரசித்தி எய்தின. நான் எனது குழந்தைப் பருவத்தில் இவர்களுடன்தான் தஞ்சாவூர் அரண்மனை வீதிகளில் விளையாடிக் கொண்டிருந்தேன். தெலுங்கு எங்கள் வீட்டுக்குள் பேசப்பட்ட மொழியாய் இருந்ததால் ராஜூ பெண்களின் உறவு எனக்கு உடனே கிடைத்தது. ராஜூக்கள் ஒவ்வொருவரும் கலைஞர்களாக இருந்தார்கள். வீடுகள் முழுவதும் ஓவியச் சாலைகள்போல் இருந்தன. இந்த சாலைகள்தான் என் கலைப் பள்ளிக்கூடங்களாக அமைந்தன. இந்த சித்திரப்பட கலைஞர்களின் வாழ்க்கையை எனது "கள்ளம்" சொல்கிறது. அப்பட்டமாக அந்த வாழ்வைச் சித்திரிப்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. அது இன்னும் குரூரமானது. அசிங்கமான உள்ளடக்கம் கொண்டது. அவற்றை வாங்கிக் கொள்ள தமிழ் தயாராக இல்லை. காரணம் தமிழின் போலித்தன்மை. தஞ்சை சித்திரப்படக் கலைஞர்களில்–அரண்மனை புறாக்களாகிப் போன பெண்களில் ரூபாய்க்குக்கூட விற்கப்படும் தாழ்ந்த ஜாதிப் பெண்களில்–தஞ் சாவூர் இடிசல் அரண்மனைக் குப்பை கூளங்களில்–இனியும் சாக மறுக்கும்–வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதர்களின் பேராசைதான் இந்த 'கள்ளம்' நாவல். இல்லாத புனிதத்தை இவர்கள் வாழ்வில் பெய்து, மனிதாபிமானம் கொள்ள வைப்பதோ, ஆண், பெண் ரகசியங்களின் திரை நீக்கி உண்மை காண்கிற சத்தியத்தேடலோ எனக்குக் கிடையாது. லேசில் இணக்கம் ஆகாத ஒரு தமிழ் வாழ்க்கையை இங்கே அப்படியே சொல்லி இருக்கிறேன். பிடிபடுவதும் புரிபடுவதும் உங்கள் பாடு! தஞ்சாவூர் சித்திரப்படம் இன்று வெளிநாட்டு கட்டிடங்களில்–அமெரிக்கா, ஜெர்மனி, ப்ரான்ஸ் போன்ற நாடுகளில் ('க்ராப்ட்') கைத்தொழில் கலை என்றும், பயன்கலை என்றும் மிகப் பெரும் வரவேற்பையும் பணத்தையும் வாரிக் கொடுத்துக் கொண்டிருந்தாலும்கூட, தஞ்சாவூரின் இடிந்த அரண்மனைச் சுவர்களின் இடிந்த மூலைகளில்

அவர்கள் குடும்பங்கள்–அவர்கள் வாழ்க்கைகள்–நொறுங்கிப் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்து, எரிந்து அடங்கிப் போனவன் நான். இந்தக் கண்ணாடி கொலாஜ் ஓவியங்கள், கண்ணாடி ஓட்டுப் படங்களான கேவலங்கள் ஆகி அதன் கலை இழந்து, விலை இழந்து, தெருவுக்கு வந்துவிட்டதைப் பார்த்து வயிரெரிந்தவன் நான்! இந்த ஜாதிப் பெண்கள் நாசமாகி தெருப்புழுதிப் பெண்களாகிப்போன கதையை இந்த நாவலில் நானும் சேர்த்து அழ வரவில்லை. எந்த கலையினாலும் மனிதனுக்கு லாபத்தைவிட பலவீனம்தான் எந்தக் காலத்திலும் 'நேரும் என்பதைத் திட்டவட்டமாக அறிந்து அதற்காகவே புதிய கலை வேண்டுமென்று விரும்புகிறவன் நான்! இந்த நாவல் "கள்ளம்" புராதனம் பேசி ஒரு குறிப்பிட்ட ஜாதியாரின் வாழ்வை சித்திரித்து கலை வியப்பெய்தும் புதுப்படைப்பின் பழங்கதை அல்ல! இன்றும் வாழ்ந்து கொண்டும் புழுத்துப் போய்க் கொண்டும் எவ்வளவு கேவலமானாலும் மேலும் வாழ்ந்து கொண்டிருக்கும் துணிச்சல்காரர்களான கலைஞர்களின் எதிர்காலம் இந்த நாவல்!! தஞ்சாவூரின் கலைகள் பலவும் வாழ மறுத்து மரணம் அடைந்து கொண்டிருக்கிறது. கலைகள் மரணம் பெறும்! எந்தத் தத்துவமும் மரணிக்கும். காலத்தை, நம்பிக்கைகளைச் சிதைத்து மறு உருக்கொள்ளும் மொழியும், இலக்கியமும், கவிதையும் வேறு எதுவும் இதுக்கு விதி விலக்கல்ல!

'கள்ளம்' இன்றைய கலைஞன் ஒருவனின் கள்ளம். வாழும் தந்திரம். கனவல்ல நிஜம்! தஞ்சாவூர் என்ற பழைய தலைநகரைச் சுற்றிலும் இது போன்ற பழைய கனவுகள் நிஜமாகிக் கொண்டிருக்கின்றன. இதை நம்ப இலக்கியவாதி கொஞ்சம் சஞ்சலப்படுவான் என்பது எனக்குத் தெரியும். தஞ்சாவூர் தலையாட்டி பொம்மை செய்கிற சாதாரண (Craft) தொழில் கலைஞனும்கூட. இடிந்து நொறுங்கும் வாழ்விலிருந்து நீந்தி புதிய முட்டையை உடைத்து சிறகடித்து மேலே உயரும் மனிதர்களை, அவர்களின் கள்ளத்தை அவை இரண்டையும் ஒரே நேரத்தில் நிரூபணம் செய்கிறது இந்த நாவல். தஞ்சாவூர் சித்திரப்படம் என்ற பெயரில் நலிந்து நாசமாகிய பழைய வரலாற்றை நான் எனது நாவலில் சொல்ல வரவில்லை. அந்தச் சோகத்தைப் பேசவில்லை என்ற என் நண்பனுக்கு எனது பதில் 'கள்ளம்' என்பதே! இத்தகைய வாழ்க்கையை இப்படிக் காண்பது என்பது இலக்கியத்தில் மட்டுமே சாத்தியம். வரலாற்றில்கூட ஏன் விஞ்ஞானத்தில்கூட சாத்தியம் இல்லை என்பதை உணர்ந்தவர்களுக்கு மட்டுமே இந்த படைப்பு சாத்தியம் ஆகும்.

இந்த நாவலின் பல மனிதர்களும் வாழ்ந்தவர்கள், வாழ்ந்து கொண்டிருப்பவர்கள், அவர்கள் எல்லாருக்கும் நான் யார் என்று தெரியும். அவர்களை நான் வெளிப்படுத்தி பகிரங்கப்படுத்திவிட்டதாக அந்தப் பெண்கள் யாரும் என்னிடம் சண்டைக்கு வரமாட்டார்கள். காரணம், அவர்கள் போலிகள் அல்ல! இரத்தமும் சதையுமாய் வாழ்ந்து போராடிக் கொண்டிருக்கும் சாதாரண மனுஷ்யர்கள்! இலக்கியம் படித்த பலருக்கு வேண்டுமானால் இவர்களை அறிந்து கொள்வதில் சிரமம் இருக்கலாம். ஆனால் வாழ்வு மறுபடியும், மறுபடியும் எரிந்தும் (எரிய மறுக்கும்) அழிந்து சாம்பலாக ஆனாலும், மண்ணில் சாரமாய் நீண்டு நிற்கும் இவர்களை, புதியதாய் மலரும், இந்த மனிதர்களை மீண்டும் மீண்டும் நானாகி உவக்கிறேன். இவை புனிதங்கள் அல்ல!

கள்ளம் ஒரு எதிர்காலக் கற்பனை அல்ல! எதிர்காலம் மட்டும்தான் அது. இவை இப்படித்தான் இருக்கும் என்பதைச் சொல்ல நான் கூட தேவை இல்லை. ஒரு சில ஜாதிப் பெயர்களையும் மொழிச் சொற்களையும், இந்த நாவலில் காணும் சிலருக்கு வருத்தம் நேர வேண்டாம். உங்கள் வழிகளை நீங்கள் தீர்மானிப்பதுபோல் இவர்கள் தங்கள் கள்ளங்களை ஒளிக்காமல் தீர்மானித்தவர்கள் என்பதையும், தங்கள் நிஜ இலக்கினை அவர்களாகவே அடைவார்கள் என்பதையும் எனக்கே கற்றுத் தந்தது. இந்த கள்ளம். அடுத்தது சுந்தர்ஜி என்ற கலைஞன்! அவனையும் நான் இனங்கண்டேன்! (அவனது கையெழுத்தில்!) இதற்கான அநுபூதியை இங்கே சொல்ல முடியாவிட்டாலும் வேறு ஓர் இடத்தில் எழுதி வைப்பேன்!!

'ஒரே தரம்' என்ற எனது பெரிய நாவல் ஒன்றில் ஒரு அத்தியாயமாக மட்டும் வர இருந்த இந்த 'கள்ளம்' என்ற வாழ்க்கையை காலத்தின் தேவையைக் கருதி தனி நாவலாக எழுதி எடுத்து விட்டேன் என்பதும் எனக்கு வருத்தமில்லை. காரணம், இந்த உருவம் இன்றைக்கு நித்தியம். இனியும் உருவாகும் என்பதைச் சொல்லிக் கொள்ள வெட்கம் இல்லை.

'தஞ்சாவூர் சித்திரப்படம்' என்பது ஓவிய உலகில் பெரிய புதுமையோ கலை வெற்றியோ அல்ல என்பதைப் புரிந்து கொண்டுதான் இந்த நாவலை எழுதி இருக்கிறேன். வெறும் (Craft work) தொழில் முறை கலைதான் என்பதை புரிந்து கொண்டுதான் இவற்றைச் சொல்ல வந்திருக்கிறேன். நான் எழுதி இருக்கும் கலைஞன். நேற்றைய கலைஞன் அல்ல! இன்றும் வாழ்ந்து நாளையும் வாழப் போகும் மனிதன். எனவே அதன் பாதை

உங்களுக்கு மட்டும் என்பதை இங்கே சொல்லி வைக்கிறேன் முன்கூட்டியே!

தஞ்சாவூர் சித்திரப்படக் கலை இன்று அழிந்தே போய்க் கொண்டிருக்கும் அதே முகூர்த்தத்தில், அவர்கள் உயிர்த்தெழுந்து கொண்டிருக்கிறார்கள், வேறு வேறு ஜாதிகளில் என்ற வாழும் உண்மையைச் சொல்லவே இந்த முயற்சி! இவை யாவும் வாசகனுக்கு நான் சொல்லும் குறிப்புகள்தான். முழுவதும் சொல்லமுடியாது. இந்த நாவலில் வரும் என் சிநேகிதி கருப்பு அறிவாள். இதை உலகெங்கும் சொல்ல நான் வெட்கப்படவில்லை. அவளோவெனில் வெட்கமுறுவாள்; வேதனை அடைவாள் என்றாலும் அவள் மேலும் உன்னதமாய் வாழ்ந்து காட்டுவாள் என்பதும் என் நாவலுக்கு சாட்சியாய் நிற்கும். எப்போதும் எனக்கு உரமாகும்.

இந்த நாவலில் வரும் ராஜூக்கள் பலரும் எனக்கு துணை! ராமச்சந்திர ராஜூ என்கிற எனது நெடுநாளைய நண்பர் தஞ்சாவூரில் வாழ்ந்து கொண்டிருக்கும் மிச்ச சொச்சமான ராஜூக்களின் தெலுங்கை இந்த நாவலுக்குச் சொல்லித் தந்து சரி பார்த்து இலக்கணமான என் தெலுங்கை தஞ்சையில் வழங்கும் மிச்ரத் தெலுங்காய் மாற்றிக் கற்றுத் தந்து, இந்த நாவல் முழுவதையும் வாசிக்க கேட்டு வாழ்க்கை நிதர்சனத்தை எனக்கு உதவியவர் ராமச்சந்திர ராஜூ! இந்த வாழ்க்கையின் சாட்சி பூதமான பழம் கலைஞர்கள் பலர். அந்தக் கலைஞர்களையும் எல்லாம் கடந்த 20 ஆண்டு காலத்துக்குமேல் எனக்கு அறிமுகம் தந்து அவர்கள் வீட்டுக்குள் உலவ அதிகாரம் தந்தவர்கள். அவருக்கு என் நன்றியைத் தெரிவிக்க வழிதான் தெரியவில்லை. எனக்கு அவரும் அவருக்கு நானும் இந்தச் சத்தியங்களுக்குத் துணை மற்றும் சமீபத்தில் மறைந்த சிற்பக் கலைஞர் குப்புசாமி ராஜூ, அவர் தந்தை சாரங்கபாணி ராஜூ மற்றும் அவரது சகோதரர் குடும்பங்கள், எல்லாருக்கும் நான் கடமைப்பட்டவன். என் குழந்தை பருவத்தில் ராஜபாளையத்தில் அவர்களின் வாழ்க்கையையும் தெலுங்கையும் அதிர்ஷ்டவசமாய் வாழ்ந்த எனக்கு சில வருடங்களில் ராஜூ வீடுகளில் உயர்ந்த ஸ்தானம் கொடுத்த ரொம்ப தீவிரமான ஆசார குடும்பங்கள். எனக்கு அறிமுகமான காயத்திரி, அவள் வீட்டுச் சம்பந்தமான ராஜபாளையத்து தெலுங்கு, நான் பார்த்த அவர்களின் ஏராளமான சிற்பங்கள், ஓவியங்கள், பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள வைர ஓவியங்கள் ஆகியவை இந்த கலைக்குப்பின்னால் அமைந்து கிடக்கும் வாழ்க்கையை எழுத சித்திரங்களும் சிற்ப கதை வேலைகளுமே என்னைத் தூண்டின.

இவை இன்று எத்தனை பேருக்கு போய்ச் சேர்ந்து உயிரிட போகின்றன என்பதை வாசகர்களே நிரூபிக்க வேண்டிய களம் இது. நாவலின் இந்த நாவலை எழுதும் போதே இந்த பாத்திரங்கள் சில என்னிடம் முரணின. நிஜ உலகு வேறு–இலக்கிய உலகு வேறல்ல; ஒன்றுதான் என்பதை என் பொட்டில் அறைந்து எனக்கு சொன்ன அவர்களையும் நன்றி கூறி வணங்குகின்றேன்.

இந்த நாவலை எழுதும்போது எனக்கு பலவகைகளிலும் துணையாய் இருந்த சுந்தர்ஜி! இந்த நாவலுக்கு அப்பால் எழுத இருந்த பிரமாண்டமான என் உலகத்தை, முழுவதும் நான் அரசினர் மருத்துவமனையில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த வேளையிலும் 'ஒரே தரம்' முழுவதும் வாய்மொழியாகவே கேட்டு ரசித்து என்னை தலைக்குமேல் கொண்டாடிய சுந்தர்ஜி., த. முருகேசன் ஆகிய இருவரையும் என்னால் மறக்க இயலாது. இந்த நாவலை எப்படியாவது வெளியிட வேண்டும் என்றுவிடாது முயற்சி செய்து என்னையும் ஒரு பொருட்டாய் மதித்து நாவலை வெளியிட பல விதமான முயற்சிகளை எடுத்துக் கொண்டு சாதித்த தேனுகா ஸ்ரீநிவாஸன் அவர்களுக்கும், எனது முயற்சியை வெளியிட திடமான முயற்சியையும் கலாபூர்வமான கடமையையும் ஏற்ற திரு. பாலாஜி அவர்களுக்கும், எனது பொறுப்பு இன்மையை எப்போதும் சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கும் எனது பதிப்பகம் சவுத் ஏசியன் புக்ஸ் நிறுவனத்துக்கும் எனது மனம் நிறைந்த நன்றிகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் செய்யும் எல்லா ஆகத்தியங்களையும் பொறுத்துக் கொண்டு, நான் இழுத்த இழுப்புக்கெல்லாம் வந்து கொண்டிருக்கும் என் மனைவி மங்கையர்க்கரசியையும் என் எழுத்துக்கு உறுதுணையாய் இருக்கும் என் தங்கை கண்மணி ஜெயந்தியையும் நான் இழுத்த இழுப்புக்கு எல்லாம் ஈடு கொடுத்து என் எழுத்தாகி நிற்கும் ஜோதி மாஷாவையும், என் நண்பர்கள் உயரமான மனிதர் இளங்கோ, எனது உற்ற உறவான கவிஜீவன், மீ.ரவிச்சந்திரன், நான் எழுதும் எல்லாவற்றிலும் குறையும் நிறையும் காணும் 'நக்கீரன்' விஜயகுமாரையும், எனது எழுத்தை உண்மையாகவே போற்றிக் கொண்டிருக்கும் சுந்தர சுகன் அவர்களையும் என்னை வாய் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கும் கவிஞர் நா. விச்வநாதனையும், நான் எதை எழுதினாலும் என்னிடம் முன்னுரை எழுதி கேட்டுக் கொண்டு இருக்கும் உறவினர் சி. எம். முத்து, புத்தகன்–சிங்காரத்தையும், நற்பண்போடு பழகும் எனது நண்பர் கோ. நா.பெரியசாமி அய்யாவையும், என் எழுத்தாக

கனவு கண்டு கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கும் கவிஞர் கா. விஜயராகவன் என்கூடவே பயணம் செய்யும் நட்சத்திரன், எனக்கு பல இடையூறுகளில் இரவும் பகலுமாக இருந்து உதவிய மன்னார்குடி புதுக்கோட்டை சுமதியையும் என் எழுத்தாக பல காலம் வாழ்ந்த பரமி என்கிற பரமேஸ்வரியையும், எனது வெற்றிகளை தன் வெற்றிகளாக கருதும் எனது நண்பர் மைனா என்கிற பாபுவையும் முகம் சுழிக்கப் போகிற பல நண்பர்களையும் 'கள்ள'த்துடன் சேர்ந்து வாழ்த்துகிறேன். மனம், மொழி, வாக்கு, காயங்களால் எல்லோரையும் வணங்கி மகிழ்கிறேன். தானே முன்னுரை தந்த பால்யகால நண்பர் டி. வஜ்ரவேலுவையும் ஈன்றெடுத்த தாய், தந்தை, குரு எல்லாரையும் பாதம் படிந்து வணங்குகிறேன். இவர்கள் எல்லாரும் இந்த நாவலின் கரணபூதர்கள் என்பதால் இவர்கள் சம்பந்தமில்லாமல்தான் இருப்பதாய்த் தோன்றுவார்கள்.

அன்புடன்,

**தஞ்சை ப்ரகாஷ்**

# 1

'ஹோ'வென்றடித்த காற்றில் உதிர்ந்தது துளிபடலம். அவன் முகத்தில் உதிர்ந்தது மராட்டிய உப்பரிகை மண். இருட்டுக்குள் எந்தவிதத் தயக்கமும் இல்லாமல் கால் சலங்கை ஜல்லிட நடந்து வந்த 'பாபி'யின் கால்களில் வழக்கமில்லாத வழக்கமாய் இடறிற்று, பரந்தாமராஜூவின் கால்கள். அப்போதும் உதிர்ந்தது விதானத்துப் புழுதி. துள்ளிக் குதித்தபடி யாரது? யாரது?' என்று குனிந்தாள் பாபி. அது காலை நேரம்தான். அரண்மனைதான், எல்லாம் பழசுதான். புழுதிதான், நூற்றாண்டுகள்தான், உதிர்ந்தன எல்லாம். பாபிக்கு இந்த புத்தியெல்லாம் கிடையாது. அவள் காலில் இடறியது இன்னதென்று தவித்து குனிந்தாள். ஒரு ஆம்பளை, அவளுக்கு ஆம்பளை புதிசில்லை. சொல்லப்போனால் பத்து வருஷமாய் விதவிதமாய் ஆம்பிளைகளின் வாசனை. முதலில் மராட்டி, அப்றம் பிராமணன், அப்றம் தமிழன் அப்றம் எவனெவனோ, இந்தத் திமிர்தான் அவளுக்கு மீதி. காலை வைத்த இடம் தொடை. ஆம்பளைத் தொடை. இடுப்புப் பையிலிருந்து நெருப்புப் பெட்டியைக் கிழித்தாள். சுடர்ந்தது வெளிச்சம். இல்லாத வௌவால் பீ வாசனை எங்கும் படர்ந்தது போலிருந்தது. அவளுக்கு நாறாது. தீக்குச்சி வெளிச்சத்தில் இடிந்த அரண்மனைச் சுவர்கள் சிதிலமாகி உதிர்ந்த நூற்றாண்டுச் சுண்ணம் சுவர்களின்

நான்கடி கனம் மழையில் பாசி படர்ந்தது. வெயிலில் அதுவே உலர்ந்து, கறுத்து, மழையின் ஈரத்தால் மீண்டும் பாசி பூத்து, மீண்டும் பசுமை படர்ந்து மெத்தையிட்டு, வெளிறிய சுவர்கள், இடுக்குகள், நூற்றாண்டுகள் பழசாய் பல இனத்தையும் கண்டு, மிதியுண்டு, புழுதியாகிப்போன அரண்மனைக் கற்றளித்தரை, அவள் கை சுட்டது. இன்னொரு தீக்குச்சியைக் கொளுத்தினாள். அவன் முகம் தெரிந்தது. ஸ்பரிசத்திலேயே ஆணென்று புரிந்த அவளது உள்ளுணர்வை அவளே உணர்ந்து வியந்தாள். அவனை அவளுக்குத் தெரியும். அவன் மராட்டி அல்ல. தமிழன். அது மட்டும் நிச்சயம். பயமில்லாமல் அவன் சட்டையைப் பிடித்து உலுக்கினாள். "ரேய், கோனே, நவ்கறிதை–யார் றாது? பெரிய தொந்தரவாய்ப் போச்சு, இதூ அரண்மனை தெரியாதூ, இங்க வந்து வுளுந்து கெடக்கே? ஜம்னா... ஜானா..."

உள்ளே இருந்து பதில்லை. திடீரென்று உள்ளேயிருந்து வெளவால் பறந்துபோனது. பெரிய வெளவால். விளக்குள்ள அறையில் நடப்பதுபோல் சாதாரணமாகப் பக்கத்தறைக்கு நடந்தாள் பாபி. பெரிய பித்தளைக் கங்காளங்கள். அவள் உயரத்துக்கு, காது வளையங்கள், பெரிய அண்டா மாதிரி புராதனமான ராஜா காலத்துப் பாத்திரங்கள், நாலு பேர் சேர்ந்தாலும் நகர்த்த முடியாத அளவுக்குக் கனமான பித்தளைக் கங்காளங்கள், இடிந்த அரண்மனையின் சுவர்களின் விரிசல்கள் வழியே ஒழுகிய தண்ணீர் கங்காளங்களில் நிரம்பியிருந்தது. தண்ணீரைக் கைகளில் ஏந்தி அள்ளினாள் பாபி.

அவன் முகத்தில் விசிறி அடித்தாள். முன்னைக்கு இருட்டு அவளுக்கு இப்போ பழகியிருந்தது. இருட்டிலும் அவன் முகம் தெரிந்தது. தண்ணீரைத் தெளித்ததும் கிளம்பியது சாராய நெடி. அவன் சட்டையெல்லாம் ஊறியிருந்த சாராயம், காய்ந்திருந்த முறுகல் நனைந்து கிளம்பிய நெடி அவள் மூக்கைத் துளைத்தது. அவன் முனகினான்.

"கோ நே ஆப்?"

அவள் குரலுக்குப் பதில் கிடைக்கவில்லை. மற்றொரு தீக்குச்சியை உரசிக் கொளுத்தி மாடப்பிறையில் தன்னிச்சையாய் நீட்டினாள் பாபி. அந்தப் பழைய மாடத்திலிருந்த கல் விளக்கில் இருந்த விளக்கெண்ணைத் திரி மங்கலாகப் பற்றிக் கொண்டது.

இருண்ட மராட்டிய அந்தப்புரம்! அந்தமங்கலான ஒளியில் நூற்றாண்டுகளை விழுங்கி ஏப்பமிட்ட உதரவிதானம்

குடல்மாலைபோல் காட்சியளித்தது. வளைவு வளைவான மண்டபத்தின் விதானங்கள்! ஒருவிதமான இருட்டுக் கலந்த சிவந்த ஒளியில் ஏளனமாய் அவளைப் பயமுறுத்தியது போலிருந்தது.

பாபி பயப்படுகிறவளில்லை. கோலாப்பூரிலிருந்து திரும்பியும் தஞ்சாவூருக்கே அவள் துரத்தப்பட்டபோதும் புருஷன் வீட்டில் அடித்து நொறுக்கப்பட்டபோதும், கொளுத்தப்பட்டபோதும் அவள் பயப்படவில்லை. தன்னந்தனியாக மராட்டிய மாநிலத்திலிருந்து இந்த தஞ்சாவூர் இடிந்த மராட்டிய அரண்மனைக்கு ஓடி வர இங்கே என்ன கொட்டி வைத்திருக்கிறது?

வரத்தான் வந்தாள். இப்போது அவளுக்கு யாரிடமும் பயமில்லை. அரண்மனை என்னவோ அரண்மனைதான்.

இவன் யார்? இங்கு வந்து விழுந்து கிடக்க?

அவள் களைத்திருந்தாள். இரவு முழுவதும் இரண்டு அரசியல் தடியர்களின் ஆண்மையற்ற அங்க சேஷ்டைகளுக்கு, குறட்டுப் பிடுங்கல்களுக்கு, ரவிக்கையையும், பாவாடையையும், அவிழ்த்துப் போட்டு திரும்பவும் கட்டிக்கொள்ள அவளுக்கு ரெண்டு டம்ளர் ஃபாரின் விஸ்கி விடியும் மட்டும் உதவியது. இப்போது பாபிக்கு இவன் ஒரு பிரச்னையில்லை. அரண்மனை என்னவோ இருநூற்று அறுபது ஏக்கர் நிலத்தில் பரந்து கிடந்தது உண்மைதான். இப்போது இவன் குடித்துப் புரண்டு கிடக்க உதவியதென்னவோ பாபியின் அரண்மனை முடுக்கு ஒன்றுதான்.

காலால் அவனை உதைத்தாள்.

"ரேய் எழுந்திரு! இது அரண்மனை தெரியுமில்ல, இங்கு வந்து கெடக்க, ஆம்பளையக் கூப்பிடுவேன். எழுந்து வெளிய போ, ச்சீ, என்னடா எளவாப் போச்சு. க்யா தக்கிர்..."

மறுபடியும் உள்ளே நோக்கிக் கத்தினாள். அவன் எழுந்து உட்கார்ந்து கண்களைப் பிசைந்து கொண்டு பாபியை நிமிர்ந்து பார்த்தான்.

ஒரு தஞ்சாவூர் சித்திரப் படம்போல் எதிரே நிமிர்த்தி, தங்க ரேக் ஒட்டிய பவானியம்மன் சிலைபோல் பாபி கண் விழித்துப் பார்த்தாள். அவன் சுவற்றில் வசதியாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"ரேய்! எந்திரிச்சிப் போ. இது மராட்டியவுங்க வீடு! அரண்மனை! எனக்கு வேல இருக்கு"

"எனக்கு வேலை இல்ல! ஆளு இல்ல! யாரும் இல்ல! உனக்கெல்லாம் இருக்கா?" எகத்தாளமாய்க் கேட்டான் அவன்.

கையில் கல் விளக்கை ஏந்தி இந்தத் திமிர் பிடித்தவன் யார்? என்பதுபோல் அவனைக் குனிந்து பார்த்தாள் பாபி. பாபி இன்னும் ராத்திரி கட்டிய சேலையை மாற்றவில்லை. சதங்கையை அவிழ்க்கவில்லை. இடம் வலமாக அவள் உடம்பைச் சுற்றியிருந்த பழைய டாக்கா மஸ்லின் ஜரிகைச் சுங்கடி சேலை. நெற்றியில் தொங்கிய நெற்றிப் பட்டம், ஜரிகை சுட்டி, புருவத்துக்கு மேல் தீட்டிய நீல மைலாஞ்சி, காக்காய்ப் பொன் மினுக்கும், கறுப்புப் பென்சிலால் வரைந்த இமைகளும், புருவங்களும், புருவ மத்தியில் படர்ந்த கரும்பட்டு முடிகளும், புருவத்துக்கு மேலாக மினுங்கும் குஜிலிப் பொட்டும், மாவிலையும்! புருவத் தோரணமும், அவன் கண்களை இமைக்காமல் பார்க்க வைத்தன. ஒரு விதமான அயலலங்காரம் அவனை மறுபடி மறுபடியும் அயர வைத்தது. மஸ்லின் சேலைக்குள்ளே அவன் கண்கள் ஊடுருவின. கண்கள் விரிந்தன. ஆச்சர்யத்தால் அகன்றன. இடுப்பில் பாவாடையை வளைந்து கவ்வியபடி சாவிக் கொத்தோடு கூடிய காசிக்கட்டு தங்கச் சங்கிலி வளைந்து பிறைபோல் அவளது பிருஷ்டத்தைச் சுற்றி மலையைக் கவியும் ஆறுபோல் சுற்றிச் சுழன்றுபோனதே தவிர இடுப்பு என்று ஒன்றைக் காணோம். கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டான். மறுபடியும் பார்த்தான். இடுப்பில்லாத பெண்களுண்டா என்ன?

"ரேய்! என்னப்பா! எந்திருச்சுப் போன்னு சொன்னல்ல. இது ராத்ரி இல்ல. விடிஞ்சாச்சு. போய்த் தொல! இது அரண்மனை மராட்டியவுங்க வீடு. அந்தப்புரம்! பார்த்தாக் கொன்னுடுவாங்க! ஆம்பளைங்க வரக்கூடாது! போ போ"

இல்லாத இடைக்கு மேலே இருந்தது அவனை அச்சுறுத்தியது. கண்களுக்கு முன்னே புத்தம்புது தஞ்சாவூர்ச் சித்திரப் படமொன்று உயிர் பெற்றெழுவதுபோல் ஆச்சர்யம். அவளுக்குப்பின்னால் பீடமும், சந்திரப்ரபையும் கிளியும் மேகமும்தான் இல்லை, வானத்தில் பறக்கிறது மாதிரி! அவள் பூவில் உட்கார்ந்திருக்கிறது மாதிரி! நீரில் மிதக்கிறது மாதிரி, மெத்தையில் சாய்ந்து மார்பை நிமிர்த்தியபடி! எத்தனை படங்கள் உருவாகி உருவழிந்து போய்க் கொண்டிருக்கின்றன. அவனுக்குத் தெரியும்.

"எழுந்திரின்னா எந்திரிக்கமாட்ட! வஸ்தாத வுட்டு தொரத்தினாதான் தெரியும்" அவள் கத்தினாள்.

அவன் அயரவில்லை.

"நீ யாரு?" என்றான் சாவாதானமாக.

இப்பொழுது அவன் கண்கள் சாதாரணமாக அவளைப் பார்க்க முடிந்தது. கல்விளக்குப் பொரிந்தது. கொஞ்சம் சுலபமாக எரிந்தது.

"நாம் பாபி! நீ யாரு? எங்கியோ பாத்த மாதிரி இருக்கு!"

"எங்கியும் பாத்துருக்கமுடியாது! பாக்கறதுக்கு என்ன இருக்கு? எம்பேரு பரந்தாமராஜூ"

"என்ன ராஜூவா?"

"ஆமாம். ராஜூதான். ஆனால் நாங்க ராஜா இல்லை. இது ஜாதிப் பேரு."

"நாங்க ராஜாதான்! நீ எந்திரிச்சுப் போ"

"போ... போங்றியே! இது என்ன ஓங்க வூடா?"

"வூடுல்லாம பின்னக் காடா? போப்பா நீ, இது மராட்டியவுங்க அரண்மனை. தெரியும்ல. இங்க இருக்காத. குடிச்சுட்டுப் பொறள்றதுக்கா எடம்"

"இது என்ன இடிஞ்ச மண்டபமால்லருக்கு. பொறாப்பீ வாசன மூக்கப் பிக்கிது. இதப் போயி வூடுங்கற. லைட்டாக் கொளுத்தி வச்சிகிட்டு விடுஞ்சிருச்சுங்ற. நீ யாருன்னு கேட்டா பாபீங்ற. நீ என்ன ஜவஹர்லால்நேருவா?"

"அடேய்யப்பா, தூக்கந் தெளிஞ்சு போச்சா? எங்க தலமேல ஒக்காந்துகிட்டு என்ன அரட்டல் உருட்டல், அய்யாவுக்கெந்த ஊரு? ஓம் மூஞ்சிய பாத்தா எஞ்சீயோ பாத்தா மாதிரியிருக்கு. ஆனா எங்கன்னுதான் தெரியல"

அவளாகவே நடந்து சென்று சுவர் மாதிரி இருந்த இடத்தில் எதையோ தள்ளினாள்! கரகரவென்று சப்தம். ஏதோ இடிந்து விழுகிற மாதிரி எங்கும் பொடிபடலம் எழுந்தது. பழைய மக்கிய ஈரவாடை தூர்த்துக் கொண்டு வெளிச்சமும் காற்றும் அகண்டாகாரமாய் எங்கும் நுழைந்தது. எட்டு ஆள் உயரக் கதவொன்று பிளந்து திறந்து கொண்டது. பரந்து என்கிற பரந்தாமன் முழு உருவமும் பார்க்கத்தான் அவள் நகர்த்த முடியாத கதவை நகர்த்தித் திறந்தாள். பாளம் பாளமாக இடிந்து விரிசல் பாய்ந்து செல்லத்தக்க அகன்ற மாடிப்படி! ஒன்று வரிசையாகத் தெரிந்தது.

பரந்தாமனை பாபி நன்றாகப் பார்த்தாள். சாராயத்தில் ஊறிக் காய்ந்துபோன அழுக்குச் சட்டையும், கிழிசல் சஃபாரிப் பேண்ட்டும், அழுக்கோடி புழுதி புரண்ட கலைந்த பரட்டைத் தலைமுடியும், சிவந்த அகன்ற விழிகளும் அவனை ஒரு பரதையாகவே காட்டின. அச்சப்படாமல் தலையைக் குலுக்கியபடி அவளையே... அவளையே பார்த்தபடி, அவளுக்குப்பின்னால் இருந்த சுவற்றில் நாலாள் உயரத்திற்குத் தீட்டப்பட்டு, நூற்றாண்டுகளால் விழுங்கப்பட்டு முழுக்கவும் சிதிலமாகிப் போகாமல் வரைவரையாய் பாசி படிந்திருந்தும் இன்னும் வர்ணங்கள் பூராவும் செத்துவிடாமல் இருந்த மராட்டியர் கால தஞ்சாவூர்ச் சித்திரப்படம் அவனை ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது

“ஆங் ஞாபகம் வந்திரிச்சு! ஏய்யா! நீயி கோயிலுக்கு வர்ணமடிக்கிற ஆளுதான, ஒன்னப் பாத்திருக்கேன் நான்! சரிதான?”

“செத்த நகரு! ஆஹா. படத்துக்குள்ற ஜாதிய எப்படிக் கொண்டு போயி நொழச்சான். அப்பா, இந்தப் படத்ல ஆடுற பொண்ணு நிச்சயம் மராட்டியப் பொண்ணுதான்! ஆமா ஒனக்கு ஆடத் தெரியுமா?”

“ரேய்! நா என்னா கேக்றேன். நீ என்னா சொல்ற. துஷ்டன்! வெளிய போடா”

“இந்த படத்துல ஆடுற பொண்ணு ஒங்கம்மாவாத்தான் இருக்கும். இல்லன்ன ஒங்க பாட்டியாக்கூட இருக்கலாம். நீ கூட ஆடுவேன்னுதான் நெனக்கிறேன். ரொம்ப நேரமா நீ இருட்டுக்குள்ள ஜல்ஜல்ன்னு நடந்தது எனக்கு ஞாபகமிருக்கே. செல பேர் ஆடவே வேணாம்; அசைஞ்சாலேபோதும். உன்னப் பாத்தா எனக்கப்படித் தோணுது! தப்பா நெனக்கலேன்னா ஒங்கம்மாவ நாம பாக்கணும்”

“அம்மாவப் பாக்கணுமா? எங்கம்மாவப் பாக்கணும். பாட்டியப் பாக்கணும்னு கேட்ட மொத ஆளு நீதாம்யா, வர்றவன்லாம் என்னத்தாங் கேக்றான். நீ எம் பாட்டியக் கேக்ற.”

“கொஞ்சந் திரும்பிப் பாரேன். இந்த செவுத்ல வெறுங் கண்ணாடிய வெட்டி மினுமினுன்னு ஒட்டி படம் பண்ணியிருக்கானே. அதுல நீ இருக்க, ஒங்கம்மா இருக்கா. ஒங்க பாட்டிகூட இருக்கா. சொல்லப் போனா நானும்கூட இருக்கேன்.”

“க்ராக்கு, சரியான க்ராக்கா இருப்ப போலிருக்கே. ஏன் ஒங்கம்மாள மட்டும் அதுல காணுமாக்கும். எனக்கு நேரமாச்சுய்யா.

இப்படி ஓங்கிட்ட பேசிட்டிருக்றத எங்க ஆளுஹ எவனாவது பாக்கணும் மல்கம்பத்துல தூக்கி வச்சு வாளப்பட்டையாலயே சாத்திப் புடுவானுங்க. மூணு நாளு மூர்ச்சையாக் கெடக்கணும். மல்கம்பந் தெரியுமாய்யா ஓனக்கு?"

"ஏந் தெரியாது? யேய்! நானுந் தஞ்சாவூருதான். சின்னப் புள்ளையா இருக்கப்ப நானும் மல்க்கம்பத்ல ஏறிச் சுத்தியிருக்கேன். அதுனாலதான் இந்தச் சாராயத்துக்கும் கஞ்சாவுக்கும் இந்த ஒடம்பு தாங்கி நிக்கிது."

"ரேய், அமார் மிராட்டி ஹை?"

"நாந்தாஞ் சொன்னனே ராஜூன்னுட்டு, அதுக்குள்ற மறந்திட்டியா? எங்கப்பா பேரு மீனாச்சி ராஜூ, பெரிய புடுங்கி ஓவியரு, பாரீஸ்ல வருஷத்துக்கு ரெண்டு வாட்டி ப்ரைஸுல்லாம் வாங்கிட்டு வருவாரு. எங்கம்மா பேரு லோசனா, எனக்கொரே தங்கை, செத்துப் போய்ட்டா, நாம் பெய்ன்ட்ரு, நீயே சொன்னல்ல கோயிலுக்கு வெள்ளையடிக்கறவன்னு".

அவன் கண்கள் மேலும் சிவந்தன.

"அடப்பாவி, மீனாச்சி ராஜூ பையனா நீயி! பெரிய்ய எடத்துப் புள்ளதான். ரொம்பத் திட்டிட்டேன். மன்ச்சிக்கோ பா, 'ராஜா சத்ரத்'ல போன வாரம் பார்ட்டி நடந்தது. நாங்கூடப் போயிருந்தேன். ஓங்கப்பா படத்த வெள்ளக்காரவுங்கல்லாம் ஓஹோன்னு பேசி மாலையில்லாம் போட்டாங்களே. நீயி இப்டிக் குடிச்சுட்டு குமிஞ்சு கெடக்க, என்ன புள்ளப்பா நீயி, ஜட்கா புடிச்சுட்டு வரச் சொல்லவா? வூட்டுக்குப் போலாமா? ஓங்கப்பா ஓவியம் எல்லாம் வயிரமால்ல வச்சு இழைப்பாரு. ஒவ்வொரு படமும் அண்ணக்கிரண்டு லக்ஷம், மூணு லக்ஷம்னு கொடுத்து அள்ளிக்கிட்ல போனான் வெள்ளைக்காரன்லாம். அவரு புள்ளங்குற நம்ப முடியல. இந்த ஆட்டம் போடுற. கஞ்சா வேற அடிப்பியா யென்ன?"

'இல்லாத' இடுப்பிலிருந்து ஜரிகைப் பட்டுப் பை ஒன்றை உருவி "வடயம் போடுறியா?" என்றபடியே பட்டுப் பையிலிருந்து முக்கோண வடிவில் வெள்ளி ரேக் ஒட்டிய வாசனை வடயம் (பீடா) ஒன்றை எடுத்து அவன் வாயருகே நீட்டினாள். அவள் சரசம் அவனுக்கு அருவருப்பையும் எரிச்சலையும் தந்தது. அவள் வியாபாரம் தொடங்குவது, அவன் அருவருப்பை மேலும் கிளம்பியது.

"நீ யாரு?" என்றான் மீண்டும் அர்த்தமில்லாமல்.

"நீயி சரியாத்தாஞ் சொன்ன, நாங்க அரண்மனைல ஆட வந்தவுங்கதான். இருநூறு வருஷத்துக்கு முன்னால் கொங்கணில்லிருந்து எங்களப் புடிச்சாந்தாங்களாம். இப்ப எங்களுக்குக் கொங்கணி தெரியாது. தஞ்சாவூர்ல கொண்டு வந்து நட்டுவாங்கம் வெச்சாங்கன்னு எங்கம்மா சொல்வாங்க. எங்க பாட்டியும் ஆடுமாம். பெரிய வூட்டுப் புள்ள கேக்ற, ஓங்கிட்டச் சொன்னா என்ன? என்ன ஒனக்குப் புடிச்சிருக்கா?"

"ச்சீ, ஒனக்கு ஆடத் தெரியுமான்னு கேட்டதுக்கா இதல்லாம் சொல்ற. ஒனக்குப் பின்னால இருக்குற படத்த ஒரு தடவ திரும்பிப் பாரு. எங்க தாத்தாவோ, இல்ல அவரோட அப்பாவோ, யாரோ எங்க ராஜூக்குள்றதான் யாரோ பண்ணுன படமிது. இது வெறும் படம்ன்னு நெனக்காத. இது எங்க வம்சத்து உசிரு. வெறுங் கண்ணாடித் துண்டுல்ல... எங்கப்பன் பாட்டன் ரத்தம். இதுக்கெல்லாம் சாவே இல்ல. இந்தப் படம் ஒழிஞ்சாலும், இடிஞ்சு உதுந்தாலும் எங்க உயிரு ஒரு கிண்ணத்து வெளிச்சம் அடுத்த கிண்ணத்துக்குன்னு தவ்வித்தவ்வி வந்துருக்கு. ஓங்க அம்மா ஆட்டம் ஒனக்கு வர்லியா? பரவால்ல, ஓங்கம்மா ஒடம்பு ஒனக்கிருக்குன்னு எங்க ரத்தம் இந்தப் படத்லருந்து பேசுது! பைத்யம்னு நெனைக்காத. ஒனக்கு ஆடத் தெரியலன்னும் ஒளறாத! எனக்கு நிச்சயமாத் தெரியும். நீ ஆடமுடியும்! ஒனக்கு அது ஒன்னோட ரத்தத்தோட கலந்திருக்கு. என்ன எல்லாரும் க்ராக்குங்கிறாங்க, எங்கப்பாவப் பெரிய மன்ஷங்கறாங்க. அவரு பெரிய கலைஞராம். புடுங்கி, பொட்டிக்குள்ளாற ட்ரேஸிங் பேப்பர்ல ஊர்ப்பட்ட சாமி படம். கை வேற, காலு வேற, தலை வேற, ஒடம்பு வேற, வரைஞ்சு வெச்ருக்கும். எடுத்து ஒட்ட வக்ய வேண்டியதுதான். பெரிய்ய கலைஞராச்சே! ஓங்கிட்ட ஒளர்றேன். ஒனக்கு ஒரு எளவும் புரியாது. அரண்மனைல இந்த மாறி படமெல்லாம் பாத்திருப்பியே. இந்தப் படமெல்லாம் எழுதறதுல்ல. அப்டி அப்டியே பண்றது. மனசு நெனைக்கும், கை பண்ணும், எங்கப்பா பெட்டில முண்டம் முண்டமா கெடக்குற சாமில்லாம் தலைவேற கால் வேறயா ட்ரேஸிங் பேப்பர்ல முன்னூறு நானூறு வருஷத்துக்கு முந்தி எங்க பாட்டையா, அவ்வா, அவ்வான்னா தெரியுமா? தமிழ்ல பாட்டி! எல்லாம் வடக்க எஞ்சேருந்தா வரஞ்சு எடுத்தாந்தது. அந்தக் காலத்து பொண்ணுங்க கை, காலெல்லாம் அது. அதுக்கு உயிரில்லேன்னு நெனைக்காத. ஒண்ணொண்ணா எங்கப்பா எடுத்து கலாய் சுண்ணாம்பும் வஜ்ரமும் சேத்துக் கொழப்பி கெட்டியாப் பூசி மேட மாதிரி மெத்துமெத்துன்னு பண்ணின படச்சட்டம் நடுவுல இந்த ட்ரேஸிங் பேப்பரால கோடு

இழுத்து அடிப்படம் தயாராக்னா அப்றம் கண்ணாடி ஒட்டு வேலதான? அப்புறமா வயிராம வச்சு இழைப்பாரு. மரகதம் ரத்னம்., புளூ ஜாகர், புஷ்பராகம்! நகைக்கெல்லாம் நகை, சாமி ஓடம்பெல்லாம் பட்டு! ஜரிஹ! ஜரிஹைக்கெல்லாம் நெஜத் தங்க ரேக்கு! ஒட்டிப் பலமாசம் வேல செஞ்சாகணும். அது ஒரு மாதிரி பைத்யம். எனக்கு அந்த பைத்யம் புடிக்கல்ல. அதான் எங்க 'நாயனா'வுக்குப் புடிக்கல்ல. படிக்கப் போட்டாரு. படிப்பு நல்லா ஏறுதுனு. படிச்சுக் கிளிச்சு உத்தியோகம் பாப்பேன்னு எங்கப்பாரு! நாயனா! உருட்டி மெரட்டிப் பாத்தாரு. உம் பேரென்ன சொன்ன? பாபியா? பாபின்னா அண்ணிம்பாங்க! எல்லாருக்கும் அண்ணியா நீ? ஒனக்கொரு பேரு வக்கிறேன். பாபினி தெலுங்குல பாபின்னா சின்னக் குட்டின்னு அர்த்தம். எனக்கு உன்னப் புடிச்சிருக்கான்னு கேட்டல்ல? உன்னப் புடிக்கல்ல. ஆனா உன்னோட இடுப்பெங்க காணும்? இடையில்லாம மேலுங்கீழுமா எப்டி இருக்க தெரியுமா நீ? உனக்கே தெரியாது. எனக்கே இப்பத்தான் தெரியுது. ராத்திரி எங்கப்பாவோட சண்டை போட்டு, அந்த சரளா முண்டச்சி என்னத் தொரத்திட்டா. எனக்குத் தலைய வலிக்குது. ரொம்ப வலிக்குது. இந்த சாராயம் இருக்கா? கெடைக்குமா? காசு குடுத்துறலாம்"

"பேச வுட்டா பேசிட்டே இருப்ப போல்ருக்கே. கொஞ்ச நேரம் இரு, வர்றேன்" உள்பக்கமாகத் திரும்பி விலகாத இருட்டுப் பகுதியில் இருண்ட படிக்கட்டுகளின் வழியே பாபி துள்ளி ஓடியது. அவனுக்கு கொலுசுச் சத்தம் மட்டும் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தது. மறுபடியும் ஒளி வெள்ளத்தில் மிதந்த அந்தத் தஞ்சாவூர்ச் சித்திரப் படத்தை மறுபடியும் கூர்ந்து நோக்கினான் பரந்தாமராஜூ.

பத்துப் பன்னிரண்டு அடி உயரம், ஒரு ராஜ தர்பார் காட்சி! நீண்டிருந்தது. சுற்றிலும் பாட்டம் பாட்டமாக முகம் பார்க்கும் கண்ணாடி அறுத்து ஒட்டியிருந்தது. நூற்றாண்டுகளாக உதிராதது வியப்பு. நீல கெட்டிக் கரை சில்க் ஜரிகை! எல்லாம் நிஜமான துணி சேலை. எழுதுகிற ஓவியமில்லை. உடம்பு மட்டும்தான் ப்ரஷ். பெய்ன்டிங்! அற்புதமான கற்பனை, அந்தக் காலத்தை அப்படியே துணியாலும் நகையாலும் பட்டாலும், பவிசாலும் ஓவியமாக்க என்ன கற்பனை இருந்திருக்க வேண்டும் இவர்களுக்கு? சரபோஜி மஹாராஜா நடுவில் உட்கார்ந்திருக்கிறார். அவருடைய உடம்பா தெரியும். ராஜான்னா என்ன உடம்பா? ஆடை ஆபரணாதிதானே. படம் பண்ணின ராஜூக்கள் நகையாலேயே

ராஜாவை இழைத்திருந்தார்கள். ராஜா உடம்பெல்லாம் வைரம். படம் என்னமோ நாட்டியக்காரியைப் பற்றியதுதான். ஆனா நாமே படத்துக்குள்ளாற இருக்க மாதிரி ஏர் வ்யூ ஆங்கிள் கொடுத்து ட்டைம் ஸ்பேஸ் காலப்ரமாணம் தெரியிறா மாதிரி ஓர்த்துல வாத்யக்காரவுங்க தபலா, டோலக், பஞ்சமுஹ வாத்யம், துந்துபி எல்லாம்! தங்க ரேக்காலயே ஒட்டியிருக்காரு ராஜூ. நாட்யத்தோட வேகம்! வெலாஸிடி பவர்! ஏன் ஸாரங்கியோட சிட்டா ஸ்வரம் இதோ கேட்குது! ஜல் ஜல் ஜல்... அவ கால்கள் மின்னல் வேகத்துல முன்னும்பின்னுமாச் சித்திரம் வரையுது. தரையில ஒரு நாஹபந்தம், கால்கள் பாம்பாகி நாஹபந்தமாம்! புணையிது! இந்தப் படத்துல சுத்திலும் உள்ள மேகம், அரண்மனை உப்பரிகைக்கு வெளில இருக்குற வான மேகம், அதுல நனைஞ்சு தெரியிற மழைக்கால நிலா... எல்லாத்தையும் இந்தப் படத்த வரைஞ்ச ஓவிய ராஜூ இந்த இடிஞ்ச சுவர்ல இப்படி மழை அறுத்தோட குத்துக்குத்தா குப்பல்குப்பலா பாசிபடர்ந்து இருட்டிப் போகும்னு நெனச்சிருப்பாரா! ஹே ராஜூ! நீ எந்த ராஜூ? எங்கப்பா மாதிரி நீயும் பிரதி எடுக்கிற போலிக் கலைஞனா? முன்னோர்களோட பாதைய சொந்தப் பாதையாப் போடாம சுயமாக் கலையாக்காம எழுதினத ஒட்டி ட்ரேஸ் எடுக்கிற எங்க நாயனாவா நீங்களும்? இல்ல, நிச்சயம் இல்ல. பாத்தவொடனே பளபளன்னு தங்க ரேக்கும், வைரமும் டாலடிக்குற தஞ்சாவூர் சித்திரம் படத்துல வெளிநாட்டுக்காரன் என்னத்தக் கண்டான்? இந்த மாதிரி படம் பண்றது அவனுக்கொண்ணும் புதுசுல்ல. கட் க்ளாஸ் பெய்ன்டிங் அவனுக்கு ரொம்பப் பழய சரக்கு. இத்தாலில, வாட்டிகன்ல, கண்ணாடிக் கொலாஜ் ஓர்க் அவனும் நூற்றாண்டுகளாச் செஞ்சுதான் இருக்கான். ஆனா தஞ்சாவூர் கண்ணாடிச் சித்திரப்படம் சமாச்சாரமே வேற. ஆஹா என்னா மாதிரிக் கற்பனைய்யா அதெல்லாம். தஞ்சாவூர் கண்ணாடிச் சித்திரப் படத்தோட மாஸ்ட்டர் ப்பீஸ்! கடல்ல மிதக்கிற ஆலிலை! அதில் படுத்திருக்கற கோகுல கிருஷ்ணன் படம்! யாரு மனசவிட்டாவது போயிருக்கா? நெனச்சவுடனே மனசுக்குள்ள புகுந்து தஞ்சாவூர்ச் சித்திரப்படமா எந்திரிச்சு நிக்கிதே. கால மடக்கி கால்ப் பெருவிரலை வாயில வச்சு குண்டு குண்டுன்னு இருக்கிற எங்க ராஜூக் கண்ணனை யாராவது இந்த நூற்றாண்டிலும் மறக்க முடியுமா. யஸோதா கண்ணன்! வெண்ணை தின்னும் கண்ணன்! இரண்டு பக்கங்களிலும் பாமா ருக்மணி மடியில் அணைத்துத் தழுவிக் கொண்டு இருக்கிற கண்ணன்! எல்லாக் கண்ணன்களிலும் ஒரு ராஜூ ஜாதி சாயல்.

இது சரிதானா? எங்களுக்குத் தெரியாது. ஆனா ராஜூங்க பண்ற தஞ்சாவூர்ச் சித்திரப் படங்கள்ல எல்லா ஜாதி ஜனங்களையும் அப்டி அப்டியே சித்திரம் பண்ணிக் கண்ணாடி ஒட்டி வைரத்தால எழச்சிருக்காங்க. இதோ இந்தப் படத்துல பாரேன்! பாபி ஆடுறா, பாபியோட அம்மா! பாட்டி! அவுங்க பாரம்பர்யமே! எனக்கு ஏன் இப்டி புத்தி போகணும். எங்க நாய்னா பண்ற படத்தை ஊரே தலக்கிமேல வச்சுகிட்டுக் கொண்டாடுது. ஆனா எங்க நாயனாவுக்கு என்னப் புரியலயாம். நீ படமா வரையிற? நீ பண்ற தஞ்சாவூர்ச் சித்திரப் படத்துல எங்கம்மாவத்தான் வரையவரைய்யான்னு சொன்னா அவருக்குக் கோவம் வருது. திரும்பித் திரும்பி அதே கண்ணன்! குண்டுக்காலு குண்டுக் கை முஷ்டிக் கை! பெரிய பெரிய ப்ருஷ்டம்! வர்ற பொண்ணுங்களை ராஜூ பொண்ணுங்களாவே பெரிய பெரிய முலை, ப்ருஷ்டம், ஸ்தனபாரங்கள், குடங்கள், பெரிய கொண்டை வண்டி வண்டியா நகை வயிரம்னு! ஒரு அம்சமாவது சுயமா வரைஞ்சதில்ல. நீ என்னா ஓவியன்! நீ என்னா கலைஞன்? வேறென்ன கேட்டேன்? இதாங் கேட்டேன்.

நான் வரையறதெல்லாம் படமில்லியாம். முழுசு முழுசா மனுஷங்க! பார்வதி! பரமேஸ்வரன்! கோபிகாஸ்திரீகள்! ச்சி ச்சி! இதத்தவுற வேறெதாவது சாபமுண்டாய்யா ஒனக்கு? கோவில்ல இருக்குற நடராஜர் விக்ரஹம்! அதக் காட்டினா மேலக் கண்ணாடி ஒட்டுவ, மூஞ்சி கிஞ்சில்லாம் ரசக் கண்ணாடி ஒட்டி நடராஜ விக்ரஹத்துக்கெல்லாம் கழுத்துல நகையைப் பூட்டி தொங்கவுட்டு அந்த சாமிக்கும் ஒரு தெலுங்குல ராஜூக் களையை உண்டாக்கிடுவ இருநூறு, இருநூத்தம்பது வருஷ குடும்ப சொத்தா இதத் தானடா பண்ணிட்ருக்கீங்க. இதக்கேட்டா வூட்டுக்கு வராத! பொறுக்கிப் பயல்னு திட்டுவ.இந்த சரளாவ வுட்டு திட்டச் சொல்லி விரட்டுவ, அவ ஒரு தேவுடியா! ஒனக்குன்னு கெடச்சா, இதல்லாம் ஓங்களுக்குப் புரியல்லடா, எவனுக்குப் புரிஞ்சிருக்கு? ஓங்க கலையெல்லாம் ரொம்பப் பழசு! ஒஸ்த்தி! ஒத்துக்கறேன். ஆனா ஓங்ககிட்ட ஒண்ணுமில்ல. அப்பம் பாட்டங் கட்ன வூடு! இதோ என் எதுர மழைல கரைஞ்சு கெடக்குற தஞ்சாவூர்ச் சித்திரப் படம் அற்புதமான கலை! ஆனா யாருக்குப் புரியும்? புரிஞ்சு என்ன ஆகணும். பசி, பசி எங்க பாத்தாலும் இடிஞ்சு கெடக்கிற தஞ்சாவூர் அகழ் மேடு, தூந்து கெடக்குற பீரங்கி மேடை, தஞ்சாவூர் அரண்மன, அரண்மனயாம் இது, குட்டிச்சுவரு, கழுதைகூட நிக்க இல்ல, எங்க பாத்தாலும் தஞ்சாவூர் ஜனங்க அடிச்ச மூத்திரம், சாணிமேடு! வௌவாப்பீ! அரண்மனயாம்,

பெரிய கலையாம்! வெள்ளக்காரனும் இப்படிப் பைத்தியம் புடிச்சுப் பாயப் பிறாண்டுவானா? இந்தப் பீத்தலைப் பாக்கறதுக்கு ட்டூரிஸ்ட் பஸ் நூறு அம்பதுன்னு வருது! மாடமாளிகையும் வௌவாப்பீ கொட்ற கூட கோபுரத்தையும், சுத்தியும் மூத்திர நாத்தம் அடிக்குற சரஸ்வதி மஹால் லைப்ரரியும் பாத்துட்டு 'ஹா'ன்னு வாயப் பொளக்க இன்னைக்கும் ஜனங்க, எங்கப்பா மாதிரி, வெள்ள வெளேர்னு ஜிப்பா! ஜவ்வாது! புனுகு! ப்பாரீன் ஸ்மெல் ஸென்ட் எல்லாம் வீசிகிட்டு தும்பைப் பூ மாதிரி வேஷ்டி! கழுத்துல் நவரத்ன மாலை! மழமழன்னு சுத்தமா ஷேவ் பண்ணின கன்னம்! கலைஞனில்லியா! நிகுதிகுன்னு வழவழுன்னிருக்க வேண்டாமா? தஞ்சாவூர் சாயல்ல செவேல்னு வாயில்லாம் வெத்தல போட்டு, பன்னீர்புகையிலையை அதக்கி புளிச்புளிச்னு அப்பப்ப எச்சத் துப்பிகிட்டு கைல ப்ரஷ்! மணிக்கணக்கா மாணவ மாணவிகள் சூழ தனி ரூம்ல தஞ்சாவூர் சித்திரப்படம் ப்ராடக்ட் பண்ற ஃபாக்டரி, மாசத்துக்குப் பத்துப்படம்! சீடர்கள் பண்ற படம் வேற! இல்லஸ்ட்ரேட்டட் வீக்லீல படமா புடிச்சுப் போட்டு A.S ராமன், M. கிருஷ்ணன், பர்க்ளி இன்னும் எவெனெவனோ! ஆஹா! என்னமாப் புடுங்கியிருக்கீரு! கிளிச்சுப்டீங்க! எப்டி இந்தப் படத்த எழுதினீங்க? ஒரு பயலாலெயும் முடியல்லியே! அடடான்னு பத்திரிகை பூராவும் புலம்புவாங்க.

நாங் கேக்ற ஒரு கேள்விக்கு இவங்களால பதில் சொல்ல முடியுமா?

ஏன்டா? நடராஜனையும், ஆலிலைக் கண்ணனையும் இன்னும் எத்தன யுகத்துக்கும் விக்கப் போறீங்க? ஒங்களுக்கு சொந்தப் புத்தி கிடையாதா? ஆயிரம் வருஷத்துக்கு முந்தி ஒரு கலைஞன் நெஞ்சை உரிச்சு ஊத்துன வடிவம்டா நடராஜன், காலைத் தூக்கி ஆடறதெல்லாம்! ஆலிலைக் கண்ணனா? இன்னும் கொஞ்ச நாள் தான்டா உங்க பொட்டல் எல்லாம் வெளிய தெரிஞ்சு போடும். வெளிநாட்டில் விக்க இனிமே என்ன இருக்கு சொந்த சரக்கு? எங்கப்பன் கில்லாடி. கண்ணனையே குப்புறப்படுத்திருக்கிற கண்ணன், நெளிஞ்சு படுத்திருக்கிற கண்ணன்னு மாத்தி மாத்திக் கண்ணாடி ஒட்றாரு. ஏமாந்துகிட்டே இருப்பானா? யோகமெல்லாம் வித்தாச்சு, காமசூத்ரத்தை எல்லாம் கூறு போட்டாச்சு, யோகாசனம், ப்ராணாயாமம், மந்திரம், தந்திரம், திமிலு, ஓம் எல்லாம் வியாபாரம் பண்ணியாச்சு, இனிமே என்ன இருக்கு? இந்த பாபி இருக்காளே அவ தேவலை. அவளுது சொந்த சரக்கு, அவ விரும்பி அவளே குடுக்கிற அவ. எங்கப்பன் இதவிடக்கேவலம். பாபி தங்கம் இன்னிக்குதாம் பாத்தேன்.

உடனே புரிஞ்சுகிட்டா 'தேறாத கேஸ்'ன்னு குடிக்காதன்னு சொல்லல, வேலைல இருக்கிறியா? சம்பாரிக்கிரியா? காசு குடுக்கிறியா? கல்யாணம் பண்ணி சோறு போடுவியா? வெச்சுக் காப்பாத்துவியா? எதுவும் கேக்கல்ல. ஒண்ணே ஒண்ணுதாங் கேட்டா என்னப் புடிச்சிருக்கா!

பான் போட்றியா! (வடயம்) வாசனை வெற்றிலைப் பாக்கு...

பாபி கிட்ட எனக்கு ஒண்ணு பிடிக்கல. அதுதான் அவ கிட்ட கிட்ட வந்து பேசுறது. எங்கியோ போனா இன்னுங் காணும். இஞ்ச வந்து ஏன் விழுந்தேன்? விழுந்ததுல முழங்கால்ல அடிபட்டு ரத்தம் கசியுது, எரியுது. தலைவலி வேற. எங்க போய்த் தொலைஞ்சா? இருநூறு மில்லியாவது வேணும். கொண்டாருவாளா? இடிஞ்ச அரண்மனை, எங்க வீடு இருக்கும்? இதுல வீடென்ன? எல்லாமே வீடுதான். ஒரு காலத்துல எல்லா அறையிலும் விளக்கெரிஞ்ச இடம், இப்பப் பகல்லயும் இருண்டு கெடக்கு. எங்க பார்த்தாலும் லஸ்தர் விளக்கும், கொத்துக் கொத்தாத் தொங்குன இடம், இப்போ புழுதிக் காடாக் கெடக்கு. எங்க பாத்தாலும் குழி குழியா இறங்குது. பொறை பொறையா படிப்படியா சின்னச் சின்ன அறைகள். எங்க பாத்தாலும் இருட்டு, உச்சி நேரத்துலையும் இருட்டு. இதுதான் பாபியோட தஞ்சாவூர் அரண்மன. ராஜால்லாம் இருக்கிற இடம் இன்னும் உள்ள போகணும். சின்ன வயசுல நாயனாவோட இஞ்ச வந்துருக்கேன் "ஊர்கே உண்ட்றா" அப்போது என்னை மிரட்டிக் கொண்டே வருவார். ராஜா வூட்ல சாப்புடுவோம் (அரண்மனைல) எனக்கு இப்பவும் அது வூடுதான். பாரம்பரியமா நாங்க வேல செஞ்ச இடம்; நானும் நாயனாவும் செவுத்து மேல ஏறிப் பரண்லருந்து பெய்ண்ட் பண்ணுவோம். எல்லாம் கதை ஓவியம், ராத்திரி பகலா உட்கார்ந்து கண்ணாடி அறுப்போம். முகம் பாக்குற கண்ணாடி மேலருந்து கீழ பாத்தா இடிஞ்ச அரண்மனயெல்லாம் தெரியும். இடிஞ்சாக் கட்டமாட்டாங்க. அங்கங்க இருக்கிற பொம்மையிலயும், கதைலயும் அப்பப்ப வர்ணம் பூசுவாங்க. காசு குடுக்க மாட்டாங்க. சோறுதாம் போடுவாங்க. ராஜ சாப்பாடு நாலடிப் பித்தளைத் தாலம், நடுவுல மேடா சுத்தில குழியா இருக்கும். பளபளன்னு கண்ணாடி மாதிரி மினுங்குத் தட்டு. நெய்யைக் கைல ஊத்திக் குடிக்கச் சொல்லுவாங்க. அப்பா சர்ன்னு உறிஞ்சுவாரு. இருவத்தஞ்சுவகை! கறி, கூட்டு, பட்டை சாதம், தயிர், மாம்பழம், பக்ஷணம், அவுங்கவுங்க வேலைக்குத் தகுந்த சாப்பாடு. தட்டைப் பார்த்தாலே தெரியும்! என்னா வேலைன்னு? அப்பா சிற்பி, ஓவியர், ராஜா ஸ்நேகம் ரொம்ப, வேலை முடிஞ்சா

ராஜா "மீனாக்ஷி ராஜூ, அபாரமா பண்ணிட்டேடா! உன் கை யாருக்கு வரும்" அப்டின்னு பாராட்டுவாரு. தட்டிக் கொடுப்பாரு. அப்பக்கூட நாயனாவை ராஜா இப்டித் தூக்கி வுடுவாருன்னு எனக்குத் தெரியாது. 'லாவேல்லி'ன்னு ஒரு இத்தாலியன் வந்தான் மஹாராஜாவையெல்லாம் பார்த்தார். தஞ்சாவூர் சித்திரப் படத்தைப் பண்றதுக்குக் கத்துக்கணும்னான். ஏற்கனவே அவன் ஆர்ட்டிஸ்ட். தஞ்சாவூர் பாணி சித்திரங்கள் அவனுக்கு ரொம்பப் பிடிச்சிருச்சு. ராஜா ராஜூகிட்ட கத்துக்கண்ணு நாயனாகிட்ட அனுப்பிச்சாரு. ஆறு வருஷம் எனக்கும் அவனுக்குமாதான் சிக்ஷை நடந்தது. மூணே வருத்துல லாவேல்லி தஞ்சாவூர்ப் பாணியைக் கத்துக்கிட்டான். ஆறாவது வருஷம் நாயனாவுக்குப் போட்டியாயிட்டான். ஆறு வருஷத்துக்கப்புறமும் எனக்குத் தஞ்சாவூர் பாணி வர்ல. அதென்ன தஞ்சாவூர்ப்பாணி! மசுரு ஓவியம்! ச்சீ—ஒருத்தன் ஒருத்தன் முதுகு சொறியறது. வேறென்ன? ஒரே மாதிரிக் கண்ணன்! கண்ணை முழிச்சுக்கிட்டு, வெரல ஆட்டிக்கிட்டு! எத்தனை வருஷமா அதே ஆல இலைல படுத்துக்றது? வேற வேலையே இல்லியா? இதோ என்னால அதுமுடியாது. ஒவ்வொருத்தனுக்கும் பகிரங்கமா அவனவன் கான்வஸ்ல ஏதாவது புதுசு பண்ணியாகணும். இல்லேன்னா பேசாம கம்ப்யூட்டர்ல குடுத்துறலாம். லட்சக் கணக்குக் அது பண்ணிப்புடும். மண்டை எரிந்தது. வாய் உழட்டியது. ஆய்யோபோதும், பேசிப் பேசி எனக்கு நானே உளறி...

பரந்தாம ராஜூ தனது வலது கையை இரண்டு விரல்களைத் தொண்டையுள் செலுத்தினான். ஒவ்வ்! கடகடவென்று வாந்தியாயிற்று. தொண்டைக் குழிக்குள் இருந்து நேற்று மதியம் சாப்பிட்ட சாதம் அத்தனையும் ஜீரணமாகாமல் கொதுக் கொதுக்கென்று கீழே விழுந்தது. மார்பு மூச்சு தாங்கமுடியாமல் முனகியது. கீழிருந்த படிக்கட்டு வழியே யாரோ ஏறி வரும் சப்தம், பரந்தாம ராஜூவுக்குக் கேட்டது திரும்பிப் பார்த்தான்.

பாபிதான். பாபியின் பின்னால் இன்னொரு பெண் ஜம்கி சாரி உடுத்தியிரு.ந்தாள். பட்டுதான். அவள் ஜம்னா, அவள் கையில் ஒரு தாலம்.

"ராஜூ, இது ஜம்னா, உன்னைப் பாத்துக்குவா. உப்மா சாப்பிடு, சா குடி ரெண்டும் இதோ இருக்கு. வேற எதுவும் வேணும்னா ஜம்னா குடுப்பா. இஞ்ச யாரும் வரமாட்டாங்க. இதோ படியேறி மேல போனீன்னா மஹல், கட்டில், மெத்தை, எல்லாம் இருக்கு. யாரும் இருக்க மாட்டாங்க. பயப்படாதே; அவசரமா ஃபோன்ல

கூப்ட்டாங்க. ரய்ல்வே கெஸ்ட் ரூம்ல யாரோ வந்ருக்காங்க. அவசியமாப் போகணும். நீ போய்டாத. எப்டியும் சாயங்காலம் வந்துறேன். ராத்ரி ஒன்னோடதான். இப்டியே கிளம்பிடாதே. உங்கப்பாக்கு தெரிஞ்சுதுன்னா என்னத் திட்டுவாரு. ஆறு மணிக்குள்ள வந்துடுவேன். உள்ளயும் சொல்லி இருக்கேன். எதுவும் வேணுன்னா ஜம்னாட்டக்கேளு. நான்தான் ஜம்னா, ஜம்னாதான் நான்! வரட்டுமா? கார் வந்தது காத்துக் கெடக்கு."

அந்த மராட்டிய இடிந்த பாதைகளின் வழியே வெளிச்சத்தின் ஆழத்தில் சதங்கை லேசாக ஒலிக்க மறுபடியும் மறைந்துபோனாள். பாபி அவன் பதிலுக்கு அவள் காத்திருக்கவில்லை.

பரந்தாமராஜூ நிமிர்ந்து ஜம்னாவைப் பார்த்தான். அவன் முன்னால் முக்காலியை நகர்த்தி வைத்தாள். அவள் மறு கையில் ஜரிகையால்பின்னிய விசிறி, அவள் கண்களை நிமிர்ந்து பார்த்தான் பரந்தாம ராஜூ. சாந்தம், எந்த வித அச்சமும் இல்லாத பரிவு நிறைந்த முகம். கழுத்தில், கறுப்பும் பொன்னிறமுமான மராட்டிய மணிச்சரடு. இரண்டு வயது பாபியைவிடக் குறைந்தவளாக இருக்கலாம். ஆனால் வேலைக்கார ஜன்மம்! தஞ்சாவூர் அரண்மனையில் உத்யோகம், பாபியைவிட பத்து வயது முதியவளாக லேசாக முன் தலை நரைத்து, வெளுத்து, தொங்கவிட்ட மார்புகளுடன் ஒரு கல்யாணமாகாத கிழவியாய் ராஜசேவகம் செய்து கொண்டிருக்கிற ஒரு ஏழைபெண். ஒரு விதமான அடிமை. பரந்தாம ராஜூவின் கண்கள் கண்ணீரில் சோர்ந்தன. பெண் எந்தக் காலத்திலும் அடிமைதான். எந்த நாட்டிலும்தான். எந்த யுகத்திலும்தான். ஜம்னாவைப் பற்றிய வரலாறு பரந்தாம ராஜூவுக்குத் தேவையில்லை. ஒரே மூச்சில் 'சா'வை உறிஞ்சிவிட்டுச் சாப்பிடாமலே எழுந்திருந்தான்.

"என்னாங்கோ சாப்ட்லீங்களா? பாபி வையும். சாப்ட்ருங்கோ."

"அவகிட்ட நாங் கேட்டது சாராயம்"

"இதோ இருக்கே" விரலை நீட்டினாள் ஜம்னா.

கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான் பரந்தாம ராஜூ. முக்காலியின் காலத்தின் நடுவில் ஒரு கிண்ணம் அதில் கெட்டியாகப் பாயஸம் போன்ற வெள்ளையான திரவம்.

"பாயாஸா?" என்றான் பரந்தாம ராஜூ.

லேசாக சிரித்தாள் ஜம்னா. கீழே அவனருகே உட்கார்ந்தாள். பாயாஸை எடுத்து அவன் உதட்டருகே முழங்கால் படியிட்டு

நீட்டியபடியே, "சாப்டுங்கோ இதுகிட்டே. சாராயம் விசுக்கி, கஞ்சா ஒண்ணும் பண்ணமுடியாது. மேலே மேலே போவேண்டியத்தான். இது மராட்டி ராஜாங்க சாப்ட்றதா, இப்போ நீங்க"

பரந்தாம ராஜூ அவளையே உற்றுப் பார்த்தான். நூற்றாண்டுகள் அவனோடு பேசின சுருக்கம் விழுந்த ஏராளமான மடிப்புகளின் சுருண்ட கறுப்புப் பாவாடை அழுக்குப் படிந்த பூப்போட்ட பழைய வெள்ளை நூல்புடவை! முக்காடு, கை விரல்களில் எல்லாம் அழுக்கு. அவளுடலில் இருந்தொருவிதக் க்ராம்பு வாசனை, தொடர்ந்து வேலை செய்து வேலை செய்து வெளுத்த தேய்ந்த கை கால்கள். காரணமில்லாமலேயே அவன் கண்கள் கலங்கியது. மீண்டும் சுவற்றில் இருந்த தஞ்சாவூர்ச் சித்திரப் படத்தைப் பார்த்தபடி அவள் நீட்டிய பாயாஸை ஒரே மூச்சில் உறிஞ்ச முயன்றான் பரந்தாம ராஜூ. பாயாஸ் பயங்கரமான பானம். அவனுக்குத் தெரியும். சாதாரணமாக எழுந்து ஒன்றும் ஆகாதவன்போல் இரண்டு மூன்று அடி எடுத்து வைத்து அந்த இடிந்த சுவர் வழியாக வெளியே சுவர்களிடையே நடந்தான் பரந்தாம ராஜூ. கடைசியில் ஒரு தப்பு செய்தான். அவளாலும் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அந்தத் தப்பு ஜம்னாவை அப்படியே பிடித்து நெஞ்சோடு இறுக்கி சுவருடன் சாய்த்து தலை எரிந்தது! அவளைக் காரணமில்லாமல் எந்த வித ஈடுபாடும் இல்லாமல், அலங்கோலமாக பல இடங்களில் முத்தமிட்டான். சுவர்களுக்கிடையே நடந்தபோது இந்த வேலைக்காரப் பெண் அவனை மீண்டும் எதிர்பார்த்து அதே இருளில் நின்று கொண்டிருந்தாள்.

# 2

தூர்ந்து கிடந்த அரண்மனையின் இடிபாடுகளுக்கிடையே வளைவு வளைவான ஆஜார மண்டபத்தில் நாற்றத்தையும், அரண்மனையின் ஒரு பாகத்தை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிற அரசு வேளாண்மை அலுவலகங்கள், மறுபுறம் சரஸ்வதி மஹால்! உலகப் புகழ் பெற்ற நூலகம், போர்டு. எதிரே ஒரு காலத்தில் யானைகள் கட்டிக் கிடந்து பிளிறிக் கொண்டிருந்த இடம், இப்போது தீயணைக்கும் படை மோட்டார்கள், சிவப்பு சிவப்பாக. வெளியில் தெரிய தீயணைக்கும் படை ஆஃபீஸ்! மறுபுறம் மூத்திர நாத்தம் குடலைப் புரட்டும் அரண்மனை வாயில். முனிசிபால்ட்டிகாரர்கள் காலையில் தெளித்து சுகாதார இலாகா அடித்த கால்ஷியம் பொட்டாஷியம் பர்மாங்கனேட் மருந்து நெடி, எங்கும் மராட்டிய, நாயக்க, இஸ்லாமிய ஆங்கில அரசுகள் அரசோச்சிய புழுதிமேடுகள்! கண்கள் கூச வெளியே வந்து நின்றான் பரந்தாம ராஜூ. கண்ணெதிரே நீண்டு வெறுமையாய்க் கிடக்கும் குதிரை லாயங்கள், தஞ் சாவூர் மக்களின் மலஜல உபாதை தீர்க்கவென்றே, பாதிக்கட்டடம் மண்ணுக்குள் புதைந்து நாயக்கர் பெருமை சொல்லும் தூபக்கால் மண்டபங்கள், அதை ஒட்டினாற்போல் வெஸ்ட் போலீஸ் ஸ்டேஷன்.

பாயாஸ் அதன் வேலையை ஆரம்பித்திருந்தது.

இரண்டு கால் பெருவிரல்களிலும் நெருப்புப் பொறி சிதறுகிறது. அடி வயிற்றில் கடல், மூளை மேட்டுப் பகுதியில் கடல் பற்றி எரிகிறது. எரியும் கடல் தெரியுமா? அதுதான் பாயாஸ். உணவுக்குழாயின் வாய்க்கால்கள் அனலோடை, வாய்க்கால்களாய் உடலெங்கும் பரவ க்ராம்பு, கசகசா, மராட்டி மொக்கு, லவூர் கபீர், தனியா மஸாந்து, லவங் எல்லாம் கலந்த கடல் அம்பர் வாசனை! ஏப்பம்! அப்பப்பா... சுழற்றுகிறது. உலகம் சுழல்கிறது. புரிகிற ஒரே நேரம் லகரி எங்கே போகிறது? அதுதான் தெரியவில்லை. பசி தனக்கு மட்டுமா? அதோ கோட்டைச் சுவரோரம் குடிசைகள், அரண்மனை உட்புறங்களிலும் அரசு ஆஃபீஸுகளின் கேவலமான போர்டுகள், எல்லோரும் வேலைக்குப் போய்க் கொண்டிருக்கிற காலை நேரம், சாரி சாரியாக இளம் மாணவிகள்! அவர்கள் பச்சைச் சிற்றாடை! வெள்ளைப் பாவாடை; ஸ்கூல் யூனிஃபார்ம்கள்! வாத்திச்சிகள், அவர்களின் பூ வைத்த கொண்டைகள், வயதுக்கு மீறிய அலங்காரங்களின் அலங்கோலங்கள்! திருப்பத்தில் ராஜா மராட்டா ஹைஸ்கூல்! ஆஜார வாயில் இடிந்து கிடக்க தமிழக அரசு இன்னொரு பக்கம் இடித்து வாசலும் வழியும் உண்டாக்கி இருக்க! காலம்தான் எத்தனை கோலங்கள் செய்திருக்கின்றன?

“ஏமிராதீ! இட்லி சேஸ்த்துன்னாவு, மீரு நான்னா அடுகுத்துனே உன்னாரு. செடி யொயிந்தீரா, அந்த்தா செடி போயிந்தி” தெலுங்கு அவன் பிறந்ததிலிருந்து அவனைத் துரத்தி வரும் பிசாசு. எத்தனை இனிமை அதில்தான், அம்மா! தன்னு கன்னத்தல்லீ என்னைப் பெற்ற தாயே எங்கிருக்கிறாய்? அம்மா! லோசனா, எத்தனை அழகு, பாயாஸின் தீ நெற்றி மேட்டில் தீப்பந்தம் சுழற்றும். இந்த நேரத்திலும்கூட பரந்தாம ராஜூவின் ஞாபகம் அவன் அம்மாவை பேய்போல் அடர்ந்து சுழன்றது. காலை பத்துமணி இருக்குமா? அழுக்கு சஃபாரி பேன்ட்டில் கையை விட்டுக் கொண்டு நிமிர்ந்து வானத்தை நோக்கி நிமிர! ‘அம்மா’ சுள்ளென்று வெயில் பரந்தாம ராஜூவின் கண்கள் எனும் சாளரத்தின் வழியே பாயாஸின் நெருப்பில் கலந்தது.

கண்கள் கரித்து தூசி இருண்டது. எதிரே யார்? தெரியவில்லை. தடுமாறியபடியே கோட்டை வெளியே வந்தான் பரந்தாமராஜூ. நடந்தான், எதிரே பார்த்து நடக்கவில்லை. பாயாஸின் நெருப்புப் பந்தம் சுழலச் சுழல தஞ்சைத் தெருக்களில் ஓயாது நடந்தான். பரந்தாம ராஜூ. அவனுக்கொன்றும் தெரியவில்லை. தெருவில்

கும்பகோணம் நோக்கிப் பாயும் பஸ்கள், காவிரிக் கரையை நோக்கிப் போகும் மணல் லாரிகள், ரிக்‌ஷாக்கள், ட்ரக்குகள், பாதசாரிகள், காலை நேர நெருக்கடி, கீழவீதியின் முனை திரும்பியபோதும் ஒன்றின்மீதும் மோதிக் கொள்ளாமல் ரோட்டின் குறுக்கே நடந்து சர்க்கஸ் புரிந்தான். வாகனாதி வண்டிகள் தப்பின. கொண்டிராஜ பாளயம் முடுக்கு, கண்களை கசக்கி விட்டுக் கொண்டு அந்தப் பூர்வபிரதேசத்தை அளந்தான் பரந்தாம ராஜூ. அவன் முன்னோர்கள் கோலோச்சிய இடம். விஜய நகர சாம்ராஜ்யம், பாமினி சுல்தான்களால் சிதறடிக்கப்பட்டபோது விசால ஆந்திரப் பிரதேசத்திலிருந்து வாழ்க்கை தேடி ஓடிவந்த கலைஞர்களான ராஜூ ஜாதியினருக்கு அடைக்கலம் தந்த இந்தக் கொண்டி ராஜபாளையம் ராஜூக்களால் உருவாக்கப்பட்டதை அவன் எப்படி மறப்பான்? இருநூற்றம்பது வருஷங்கள், தெலுங்கு ஒன்றுதான் மிச்சம்! இன்னும் நாயக்க அரசர்களுக்கும்,பின்னர் மராட்டிய அரசர்களுக்கும், ராஜூக்கள் வேண்டியிருந்தது. அழகான சுதை வேலைகள்! மரச்சிற்பங்கள், கோவில் வாஹனங்கள்! ராஜாக்களின் ஆசனங்கள்! அரியணை பீடங்கள் கோவில் அலங்காரங்கள்! அரண்மனை விதானத்து சித்ரமண்டபமணி வேலைகள்! பொன்காலிழைத்துப் பட்டால் மூடி வைரத்தாலும் ரத்னத்தாலும், மரகதத்தாலும், இழைத்துச் செய்த தஞ்சாவூர் அரண்மனைச் சித்திரப் படங்கள்! இவற்றையெல்லாம் தஞ் சாவூருக்கு அர்ப்பணம் செய்து கலைமயமாக்கிய ராஜ சிற்பிகளான ராஜூக்கள் எல்லாம் எங்கே? நூறு நூற்றைம்பது குடும்பங்கள் சுதந்திர இந்தியாவின் விடுதலையில் பசியில் பட்டினியில் சிக்குண்டு சிதறின. தஞ்சாவூர்ச் சித்திரப்படம் குப்புற விழுந்தது. யாருக்கும் அந்தக் கலைகள் இனி வேண்டாம். ராஜூப் பெண்கள் கூலி வேலைக்குப்போனார்கள். பொய்க்கால் குதிரை செய்து கொடுக்கச் சிலர் ஒதுங்கினார்கள். இடம்மாறி, திசைமாறி அடித்த, காலப்புயலின் பசிவேகச் சூளையில் வேறு ஜாதியாகி ஓடிப்போனவர்களையும், நவீன காலத்தின் தோரணைக்கு ஈடுகொடுக்க முடியாமல் பட்டினியால் விலக்குண்டுபோன குடும்பங்களையும், பரந்தாம ராஜூவின் கண்களின் எதிரே நடந்த பசி வேள்வியில் பொசுக்குண்டுபோன ராஜூக் குடும்பங்களையும் இன்னும் பயத்துடன் நினைவு கூர்கிறான்.

பாயாஸின் வெறி தணிய, இன்னும் மூன்று நான்கு மணி நேரங்களுக்குமேல் ஆகலாம். அதுவரை என்ன செய்வது? ஜம்னா கசந்தாள். அவள் நினைவு ஏன் வர வேண்டும்? மரப்பாச்சி போல

மெலிந்த ஆனால் உறுதியான உடல்; கட்டித் தழுவ வேண்டிய அவசியமே இல்லாமல் அவன் வளைத்ததும் வளைந்த அவள் உபசாரம்; ரொம்பத்தான் கசந்தாள்.

அம்மாவைத் தவிர அவனுக்கு ஸ்பரிஸ சுகம் இதுவரை யாருமில்லை. அப்பா மீனாக்ஷி ராஜூவின் செக்ரட்ரி சரளா, அவளையும் அவன் தொட்டதில்லை. அடுத்து லல்லு என்கிற லலிதா–நட்ராஜனின் (ஃப்ரெண்ட்) தங்கை–அவள் தொடுவதுண்டு. பயந்து தொட்டதில்லை. விரும்பித் தொட்டால் என்ன ஆகுமோ? என்ற பயம், பரந்தாம ராஜூவுக்கு முதல் பெண் அனுபவம் இப்படியா? ஓர் அழுக்கு வேலைக்காரப் பெண்ணிடமிருந்து? இது பெண் அனுபவமில்லை. பாபியிடமிருந்து ஒருவேளை லல்லுவைவிட மோசமாக வெளிப்படலாம். அல்லது ஜம்னாவைவிடவும் தெளிவாக உயிருடன் துடிக்கலாம். ஜம்னா! நீ எந்த நூற்றாண்டுப் பெண்? ஹா... எந்த நூற்றாண்டிலும் எந்த சாகஸக்காரிகளிலும் என் அம்மாவும், ஜம்னாவும் கலந்துதான் இருப்பார்கள் போலிருக்கிறதே. அசிங்கம்தான். ஆண், பெண் உறவு முண்டமாக, முழுசாக, நிர்வாணமாகக் கலக்கிற மிருகச் சேர்க்கைதான். ஜம்னாவிடம் பாபியின் சுகமில்லை. சாகஸம் இல்லை. வியாபாரம் இல்லை. ஆனால் வாழ்க்கை எனும் வேசி பரந்தாம ராஜூவை உறிஞ்சித் தள்ளியிருக்கிறாள். உடம்பை அருவருப்புடன் பார்த்தான் பரந்தாம ராஜூ. தலைக்குள்ளே இருந்து இருண்டு திரவமாய் தலையின் இருபுறமும் வழிவதுபோல் இருந்தது. ஜம்னாவை அணைத்தபொழுது, அவளது உடம்பின் வியர்வையும், க்ராம்பு மணமும் வேலை செய்து கெட்டிப்பட்டுப்போன எதற்கும் தயாராயிருந்த அவளது உடம்பின் கடுமை அவளது மார்புகளில் இல்லை. அணைத்தபோது சில்லிட்டு அவைகள் தொங்கலிட்ட வெறுமைகளாக அவனைக் கூச வைத்தது. கையில் அணைத்துக் கவ்வி அவளை முத்தமிட எது தூண்டியது? அம்மாவைத் தவிர, அவன் யாரையும் முத்தமிட்டதில்லை. அதனாலேயே ஜம்னா கசந்தாள்.

ஜம்னாவின் உடலில் இரண்டு நூற்றாண்டுகளைப் பரந்தாம ராஜூ அணைத்துக் கொண்டிருந்தான். தஞ்சாவூர் அரண்மனையில் இடிபாடுகள்போல் அவளும் அவனுடன் இடிந்துதான் விழுந்தாள். விழுந்துதான் நைந்தாள். எத்தனை எஜமானர்கள்?! கோலாப்பூரிலிருந்து ராணியுடன் வந்த சோடியர்களுடன் இந்த இருபத்தோராம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும்! அவள் தாசியாகவே வந்தாள். முப்பது நாற்பது பெண்களுடன் வந்த அவளை இந்தத்

தஞ்சாவூர் மண் எவ்வகையிலும் பாதிக்கவில்லை. அரண்மனைச் சேவகம் என்ற பெயரில் அடிமைத் தொழில்! உத்தரவாதமில்லாத சம்பளமில்லாத கொத்தடிமை. கொத்தடிமைக்குகூட ஒரு எஜமானன் உண்டு. தஞ்சாவூர் அரண்மனையில் ராஜா இப்போது இல்லை. ராஜாக் குடும்பங்கள் பேர் சொல்லிக் கொண்டு பழைய அரண்மனையின் தஞ்சாவூர்ப் புழுதியில் கோரமாக ஆளில்லாத இண்டு இடுக்குகளில் அரண்மனைப் பூச்சிகளாய் வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஜம்னாவைப் பார்த்ததும் இந்த எண்ணங்களெல்லாம் பரந்தாம ராஜூவை கருகருவென்று அறுத்துச் சுட்டன. ஜம்னா மாதிரி எத்தனை பெண்கள்? இன்றும் அவர்கள் அந்த இடிந்த அந்தப்புரங்களில் சேடிகளாகவே வாழ்ந்து கொண்டு இருந்தது பரந்தாம ராஜூவுக்குத் தெரியும். அம்மா! நன்னுகன்ன தல்லீ! லோசனா!–உன்னையும் என் அப்பா–இந்த அரண்மனையின் ஓர் உப்பரிகையிலிருந்து தானே அள்ளிக் கொண்டுபோனார். அரண்மனையில் ஏதோ ஒரு மூலைப் புழுதியில் ஜம்னாவாக மரப்பாச்சிபோல் கைபட்டுக் கைபட்டுக் பளபளத்துப் பின்னர் அழுக்குப் புரண்டு மூலையில் நூற்றாண்டுப் புழுதியில் நீயும் ஜம்னாவாகிப் போயிருக்க வேண்டியவள் தானே? ஒருநாள் அரண்மனை அந்தப்புரத்தில் பவானியம்மன் பூஜை விக்ரஹத்தின் பீடம், சந்ரப்ப்ரபை, ஊஞ்சல், எல்லாம் தஞ்சாவூர் சித்திரப்பட பாணியில் சிற்பம் செய்ய வந்த மீனாக்ஷி ராஜூவின் காதில் மாட்டியப் பேச்சுக்களுக்கிடையில் ஒலித்த ஓர் இனிமையான தெலுங்குப் பெண் குரல் ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. விதானத்தில் வைத்தை இழைத்து இழைத்து வேலை செய்து கொண்டிருந்த ராஜூ திரும்பிப் பார்த்தார்.

தெலுங்கில் மராட்டியப் பேச்சுக்கு பதில் சொல்லிக் கொண்டிருந்தாள் ஓர் இளம் பெண். மராட்டிய பெண் பாய் சாஹிப்கள் அவளைச் சுற்றி உட்கார்ந்து நீ யார்? எங்கிருந்து வர்ற? என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அம்மா! நன்னு கன்னதல்லீ! நீ தானே அது–அரண்மனையிலிருந்து திருவிடை மருதூருக்குப்போனபோது அங்கே முப்பது வருஷங்களாக இருந்த திம்மராஜூ என்கிற ஒருவரின் மகளாம் நீ. அவரும் சுதை வேலைக்காரர்–சிற்பி. திம்மராஜூ திடீரென்று வைசூரியில் மரணம் எய்த அரண்மனைச் சொத்தானாள் லோசனம். ஒரு மயிரிழை பிசகியிருந்தால் அம்மா நன்னு கன்னதல்லீ! நீயும் ஜம்னாவாகி காலையிலிருந்து மாலை வரை பாயாஸுக்கு கசகசா அரைத்து

க்ராம்புச் சாற்றில் ஊற வைத்துக் கடல் அம்பரின் மணத்துடன் நீயும் என் அணைப்புக்கு வந்திருப்பாயோ! ஜம்னா! நன்னு கன்னதல்லீ தாயே!

எதிரே வந்த சைக்கிள் ஒன்றில் வயிற்றில் மோதுண்டு பக்கத்திலிருந்த அகண்ட சாக்கடையின் பாலத்தின்மேல் ஐயோ! என்று விழுந்தான் பரந்தாம ராஜூ. உயர்ந்து நின்ற கோட்டைச் சுவருக்கும், அகன்ற தார் ரோட்டுக்கும் இடையில் கோட்டைச் சுவரோரமாக செங்கற்களால் கட்டப்பட்ட அகன்ற சாக்கடை! ஹோவென்று பாய்ந்தது சாக்கடை நீர். ஆங்காங்கே வளைவாக பாலத்தின்மேல் பீடம் கட்டியிருந்தது. ஒரு பீடத்தின்மேல் கிடந்தான் பரந்தாம ராஜூ. கண்களில் பொறி கலங்கியது. புட்டத்தின் வலி, எழுந்து நிற்கப் பத்து நிமிஷங்களாயின. வயிற்றைக் கைகளால் தடவியபடி சுரீரிட்ட வெயிலில் தள்ளாடியபடி கொண்டிராஜ பாளையத்தின் நடுத்தெருவான சந்தில் திரும்பினான்.

யாருக்கும் அவனைத் தெரியவில்லை. இருபுறமும் நகரும் வீடுகள், தான் நடப்பதாகப் பரந்துவுக்குத் தெரியவில்லை. ஒரு காலத்தில் இங்கெல்லாம் ராஜூக்கள் குடியிருந்தார்கள். வீடுகளின் இருபுறமும் மாடிக் கட்டடங்கள். சுதை வேலையால் எங்கும் ஒரு பழைய காலத்தின் கார்வை ஒலிக்கக் கேட்டான். இந்தப் பழைய சிலைகளெல்லாம் அவனை நோக்கி கெக்கலி கொட்டின. ஒவ்வொரு வீட்டிலும் இரண்டிரண்டு பெண்களை அணைத்துக் கொண்டு சிரிக்கும் முகப்புக் கிருஷ்ணர்கள்–கிருஷ்ணர்களின் மூஞ் சிகளிலெல்லாம் இன்றும் ஒரு ராஜகளை–(ராஜூகளை)–ஜாதி இல்லையாம்! இந்தக் கிருஷ்ணன்களெல்லாம் கிருஷ்ண ராஜூக்கள்தான். இல்லை என்று சொல்ல முடியுமா? ஆனால் எல்லோரும் இல்லை என்றுதான் சொன்னார்கள். வீடு முகப்புகளிலிருந்து ராஜூ ஜாதி பொம்மைகள் மீண்டும் சிரித்தன. ஒன்று சிவராஜூ, இன்னொன்று லக்ஷ்மி ராஜூ, இன்னொன்று நரசிம்ம ராஜூ, மெல்லிய சாரங்கியின் அழுகுரல் கபஸ... கபஸ...மேல் ஸ்தாயீ அழுகுரல். அம்மா நன்னு கன்னதல்லீ! செப்பு; நீவு செப்பம்மா! நேனு செப்பினதி அபத்தமுகதா! இதந்தா பொம்மலு காது! அந்த்தா மனுஷுலே–வளைவு வளைவான 'கொத்திக்' சுவர். அதன் விளிம்பில் கைப்பிடிச் சுவரை ஓர் கையால் அணைத்தபடிக் காற்றில் கூந்தல் அலை அலையாய்ப் பறக்க பரந்தாம ராஜூவை நோக்கியபடி 'ராரா! நான கண்ணா சொம்மு! நா கனகமு! "யாரது? நல்லீ அம்மா!" பரந்தாமராஜூ

நடுவீதியில் நின்று மாடி விளிம்பை நோக்கியபடி! "ராவம்மா! நன்னு கன்னதல்லீ!"

"யாரது? பரந்துவா? அடப்பாவி! நீயாப்பா? என்ன எளவு இது? உங்கப்பா இருக்க இருப்புக்கு இப்டி நீ தெருவச் சுத்தி வரியேப்பா? ஒஞ்சட்டையும், ஒம்மூஞ்சியும், ஒத்தாடியும்! சிச்சிச்சி... சேரி! உள்ற வா நட்ராஜன் இன்னும் வல்ல, நீ பாட்டுக்கு ரோட்டுல நின்னுக்கிட்டு மானத்தப் பாத்துட்றிக்கியே. நம்ம வூடு தெரியலிய்யா. அல்லது வழி புரியில்லியா".

"இல்லம்மா! நான் வந்து கொஞ்சமா போதை போட்ருக்கேன். பாயாஸ். கொஞ்சந் தலை எரியுது. மறந்து இஞ்ச வந்துட்டேன்! வந்து... போறேன்!"

"உன்னோட வேலையே இதானே. ஓங்கப்பா இது சொல்லி சொல்லி இத்துப்போனாரு. நின்னா நெடுஞ்சொவரு. விழுந்தாலும் நெடுஞ்சொவருன்னு! போனாப்போன இடம். வந்தா வந்த இடம். என்னாப்பா நீயி! இதுல கஞ்சா வேற, நட்ராஜனும் சொல்லிச் சொல்லி வருத்தப் படறான். லல்லு அழுவுறா, லல்லுவுக்கு உம்மேல எவ்ளோ ப்ரியம் தெரியுமோ? லல்லு... லல்லூ... இங்க பாரு யாரு வந்துருக்கிறதுன்னு! என்னா கோலத்துல வந்திருக்கு பாரு!"

"லல்லு இருக்காளா என்ன!"

"உக்காரு தம்பி! காப்பி கொண்டாரேன். நேரமாச்சு... ட்ரெஸ் பண்ணிட்டிருக்கேன்ல... வர்ரேனே!"

பரந்தாம ராஜூ நெஞ்செரிய, உடல் பதற, ஒரு நீண்ட ஏப்பம்விட்டான். பஞ்சடைந்த கண்கள் லேசாக ஒளிவிட்டன. சுற்றிலும் பார்த்தான். சிறிய பழைய வீடு. ராஜூ வீடுகளுக்கே உரித்தான உயரம் குறைவான வாசல்கள்! கதவுகள்! சட்டம்! இட பெரிய கண்ணாடிக்குள்ளிருந்து நீலப்பட்டுக் கடலில் மிதக்கும் ஆலிலைக் கண்ணன். இரு புறங்களிலும் பெரிய பெரிய கிளிகள், கிளிகள் உடலெங்கும் தஞ்சாவூர்க் கண்ணாடி ஓட்டு வேலை அபூர்வமாய் இருந்தது. வாசல்களில் திரைபோலத் தொங்கும் மணிச்சரங்கள். அதிலும் உருவங்கள்! மான்! மயில்! லல்லுவின் அபூர்வமான வேலை! சிவப்புச் சிமிண்டுப் பால் ஊற்றிப் பளிங்காகத் தேய்த்த தரை! அதிலும் லல்லுவின் கோல பெயின்ட் சித்திரங்கள்! சுவரோரமாக மேஜையில் டி.வி! டி.வி.யின் மேலேயே கேஸெட், ட்ரான்ஸிஸ்டர், பக்கத்து அலமாரியில் புஸ்தகங்கள்போல் அடுக்கிய கேஸெட்டுகள்.

பளிச்சென்று உள்ளே வந்தாள் லல்லு என்கிற லலிதா. கான்வென்ட் யூனிஃபார்ம். பதினெட்டு வயசுக்கு தோற்றம். பதினைந்து வயது மீறாது.

"வாங்க, எப்ப வந்தீங்க. எப்படி வந்தீங்க! எங்களையெல்லாம் இன்னும் ஞாபகம் இருக்கு போலருக்கே. அண்ணா இல்ல, அம்மா கிட்டப் பாத்துப் பேசினீங்களா? கான்வென்ட் பஸ் வந்துரும்"

குளித்து உலர தளரப்பின்னி எட்டு பிரிவு பின்னல் போட்டு நீளமாகவிட்ட ஒற்றைப்பின்னல். அரை இணுக்கு மல்லிகைப்பூ (கான்வென்ட்டில் பூ வைக்கக் கூடாதாம்.)

"என்ன பாக்கறீங்களாம்?"

"சும்மாதான்."

செயினை வாயில் கவ்வி விளையாடினாள். வாசலில் போய் நின்று தெருவில் இரண்டு பக்கமும் பார்த்தாள். லல்லுவின் அம்மா வந்து காப்பி டம்ளரை மேஜைமீது வைத்து விட்டு "எப்டி இருக்கீங்க தம்பி! வேலை திகைஞ்சுதா?" என்றாள்.

"வேலை என்னம்மா! அவ்ளோ சுலபமாக் கெடைச்சுடுமா? சிபாரிசு! படிப்பு! பணம்! புகழ், எல்லாம் இருந்தாலும் கிடைக்குமா? வேற என்னமோ வேணும். அது எங்கிட்ட இல்ல, நாயனாவும் நானும் கொஞ்சம் மனஸ்தாபம்! தெரியுமே! எப்பவும் மனஸ்தாபந்தான்! பொறந்ததுலேர்ந்து!"

"என்னமோ தம்பி! நட்டுவும் ரொம்பக் கவலைப்பட்றான்! லல்லு எப்பவும் ஓங்க பேச்சுத்தான். நானும் வேண்டிகிட்டே இருக்கேன்! நீங்களும் மாரியம்மன்கிட்ட வேண்டிக்குங்க! வரப்ரசாதி அம்மன்!"

பரந்தாம ராஜூ சிரித்தான். பாயாஸ் தரை இறங்கிவிட்டது. லல்லுதான் காரணம். லல்லு விசித்திரம்.

"காப்பியச் சாப்பிடுங்க. உள்ற கை வேலையா இருக்கேன், லல்லு நீ போகல்ல"

லல்லு உள்ளே வரும்போது நடராஜனின் அம்மா உள்ளே போனாள்.

"பஸ் இன்னும் வர்லேம்மா! பஸ் வந்தாலும் நான் போப்போறதில்லை"

உள்ளேயிருந்து 'ஏன்டி' என்று பதில் வந்தபோது லல்லு அவனையே உற்றுப் பார்த்தாள். லல்லுவின் கண்களில் அசுர பலம் தெரிந்தது. இவள் சின்னப் பெண்ணா என்ன?

"ஏன்டீன்னு கேக்றேனில்ல. காதுல வுழுதா என்ன?" அம்மா.

"நான் போகலேன்னாப் போகலதான்" மகள்.

"ஒனக்கு கட்டை துளுத்துப் போச்சு. ஓங்கண்ணன் வரட்டும்."பின்னர் உள்ளிருந்து அம்மாவிடமிருந்து சப்தமும் இல்லை.

"அண்ணா நைட் ட்யூட்டியிலிருந்து இப்பக்கி வராது. உங்கள மாதிரியே குடிக்கிது. செலப்போம் வந்தாலும் வந்துடும்" லல்லு

"வரட்டுமே இப்ப என்ன?" என்றான் பரந்து.

"நீங்க ஏன் இப்டி இருக்கீங்க?"

"எப்படி?"

"இப்படித்தான்" அவன் பத்து இருபது நாள் தாடியைக் கன்னத்தை, வியர்த்த சட்டையை, கிழிசலை, மார்பின் முடிச்சுருள்களைத் தடவினாள்.

அவ்வளவுதான், என்ன மாயம் இது. பாயாஸ் மறுபடியும்! ஆனால் இம்முறை வாயில் வழியாக அல்ல. அவள் விரல்களின் வழியாக உச்சி ஏறியது.

"ஷேவ் பண்ணக்கூடாதா? எதுக்கு இந்த பாகவதர் க்ருதா? சட்டை எல்லாம் மாத்தி, குளிச்சு சுத்தமாக இருக்கக்கூடாதா? B.A வரைக்கும் படிச்சிருக்கீங்களே! ட்ரிம்மா ட்ரெஸ் பண்ணக் கூடாதா?"

"..."

"சுத்தமா அழகா இருந்தா தப்பா?"

"..."

"பரட்டைத் தலை, புழுதி சட்டை, முழங்கால் வரைக்கும் செம்மண்! கிழிஞ்ச பேண்ட் இதல்லாம் வேணும்னுதானே அசிங்கமாத் திரியறீங்க"

"..."

"ஒங்களை எனக்குப் புடிக்கவேயில்லை"

நீண்ட நேரத்துக்குப்பின் பரந்து வெடித்தான்.

"என்ன எதுக்கு ஒனக்குப் புடிக்கணும். புரியவேயில்லையே. ஆமா ஒன்னப் பார்க்க எனக்குப் பயமாருக்கு"

"இங்கே ஓங்கள எனக்குப் பிடிக்காதுன்னு சொன்னேன்" அவள் கண்கள் சிவந்து முத்துத் துளிகள் உதிர்ந்தன. பயந்து அல்ல. உரத்து விழுந்தன. நட்டுவின் தங்கை 'இன்னொசென்ட்' என்கிறார்கள். இந்தக் கான்வென்ட் குட்டிக்கு ஒன்றும் தெரியாதாம். நாயனா சொல்றார். 'லல்லு இஸ் டிவைன்' சமீபமா அவர் இங்லீஷ்! ஃப்ரென்ச் எல்லாம்விட்டடிப்பார்! லல்லு ஒரு படைப்புடா! ஓவியம்னா ரொம்பப் புனிதம்! அப்பா ஓர் அபூர்வமனா ஓவியர்தான். ஆனா அவரு கலைஞனா? அவரு சொல்றாரு. லல்லு குழந்தையாம். நான்கூடத்தான் இன்னொசென்ட். ஆனா லல்லு மாதிரி இன்னொசென்ட் மாடல் இல்ல. அவள் வயசுல அவளுக்குத் தெரிஞ்சுருக்குற ஆம்பளை! பொம்பளை! எனக்குத் தெரியுமா? உங்களுக்குத் தெரியுமா? பதினைஞ்சு வயசுல நான் பம்பரம் விடுவேன். நீஞ்சி டைவ் அடிப்பேன். புளியம்பழம் உலுக்கி ஆத்து மடுவுல மீன் புடிச்சு, கவுண்டி எடுத்துக்கிட்டு ஒவ்வொரு தோப்பா பசங்களோட குருவி அடிச்சுப் போவேன். நடு ரோட்ல பிள்ளையார் பந்து அடிச்சுப்ட்டு குறுக்கே வர்ற பஸ்ஸைத் தாண்டி ரோட்லயே டைவ் அடிப்பேன். ஒரு குட்டி பின்னாலயும் சுத்துனது கெடையாது. அந்த மூஞ்சியே எனக்கில்லியே. இந்த ராசி இல்லேன்னு பசங்களே சொல்லுவாங்க.

"உங்கள எனக்குப் பிடிக்கலேன்னு எத்தனை தடவை சொல்றது? ஏன் அப்டியே பட்டிக்காட்டான் எதையோ பாக்கற மாதிரிப் பாக்கறீங்களாம்" பலமாக மறுபடிக் காதில் விழுந்தது. மறுபடி உலுக்குகிறாள். அவளா இன்னொசென்ட்? அப்பா வரைகிற அமைதியான இயற்கைக் காட்சிகள்! தெய்வீகமான பெண்கள்! உயர்ந்த உணர்ச்சிகளைச் சித்திரிக்கிற ராமன்! கிருஷ்ணன்! முருகன்! சீதை! லக்ஷ்மி! அற்புதமான நிழல்கள்! நிஜங்கள் போலவே ஏமாற்றும் நிழல்கள்! லல்லு மாதிரி. ஆனால் லல்லு முழுதான பெண் சாதாரணம்! மிருகம்! தந்திரம் நிறைந்த எதிர்த்துத் தாக்காமல் பின் வாங்குகிற, எந்த ஆபத்திலும் நுழைந்து வெளி வந்துவிடுகிற, தனக்கு வேண்டியதை மட்டும் உறிஞ்சி எடுத்து விடுகிற, ரொம்ப இளமையான, அழகான, என்னை மட்டும் ஏமாற்றமுடியாத சாதாரணம்!

நட்டு ஒரு தடவை சொன்னான்.

“பரந்து நீ எந் தங்கையைக் கட்டிக்கிறியாடா?” அவன் அம்மா ஒரு தடவை சொன்னாள். “தம்பிக்கு ஒரு வேலை மட்டும் கெடைச்சிட்டா நம்ப லல்லுவைக் குடுத்துடலாம் இல்லியாடா!”

அப்பா சொன்னார்: “அவனுக்கா? லல்லுக் குட்டியையா? உருப்பட்டாப் போலதான். ஒரு வேல செய்யத் துப்புல்ல. கல்யாணம் ஒண்ணுதான் இதுக்கு பாக்கி.”

பரந்துவின் பதில் “எனக்கு வேலையும் வேண்டாம். ஏன்னா கல்யாணமும் எனக்கு வேண்டாம்.”

லல்லு ரொம்ப இன்னொசென்ட்தான். எப்டி? ஒண்ணுந் தெரியாத மாதிரி இருந்து காட்றதுல லல்லு மட்டுமில்ல. எல்லாருமே ஏதாவதொண்ணா இருந்து காட்றதுல தெளிவாத்தான் இருக்காங்க. தேவைன்னா எல்லாருக்குமே இன்னொசென்ட்டா இருந்து காட்டத் தெரியும். அப்பா அப்பா மாதிரி இருக்கார். அம்மா இருந்தா அம்மா மாதிரி ஆடுவா. நல்லவேளை. அம்மா போயாச்சு. நட்ராஜன் நண்பன் மாதிரி நடிக்கணும்னு நான் ஆசைப்படலே. யாரும் அவுங்க அவுங்க மாதிரியே இல்ல. லல்லு லல்லு மாதிரி இல்ல. மிருகம் மாதிரி இருக்கா. அப்பாகிட்ட நானும் மகனா இல்ல. ஏன்னா என்னால அப்டி வேஷம் போட முடியாது. அப்பா எழுதின ஓவியங்களை ஓவியமா நான் பாக்கலை. ஏன்னா அந்த ஓவியமும் வேஷம் போட்ருக்கு. அதெல்லாம் க்ராஃப்ட் (Craft) ஆர்ட் இல்லை. அப்பா! அவர் வேஷம் அவருக்கே புரியல்லியா! ச்சீ! எதுக்கு இத்தனை பொய் வேஷம். முகமூடி. லல்லுக்குட்டி நிர்வாணமாத்தான் என்னெதிரே நிக்கிறா. அவரோட படங்களெல்லாம் எனக்குக் குப்பை. உலகப் புகழ் பெற்ற ஓவியராம். நிஜம் அவருக்குத் தெரியலேன்னா பரவாயில்லை. அவர் கலைஞர். நிஜம். அவருக்கு உறைக்காமப் போகாது. நிஜம் தெரியும்போது என்னைப் புரியும். லல்லு மாதிரி அவரும் இந்த மண்ணோட மண்ணா தஞ்சாவூர்ல வெளைஞ்ச சரக்கு. லல்லு அசரமாட்டா. தொடர்ந்து வேட்டையாடுவா. ஒரு தொழுவத்துல கட்டியடிக்கப் பாக்குறா. என்னெ சிரைச்சு வழுவழுப்பாக்கப் பாக்கிறா லல்லு! என்னை எழுதித் தள்ளும் ஒரு குமாஸ்த்தாவாக மாதம்–தேதி எண்ணி உப்புப்புளி மிளகாய்க்காக நெளியும் புழுவாக்கப் பார்க்கும் என் நாயனா. லல்லு! உங்கம்மா! டேய் நட்ராஜா! என்னை மூலையில் கட்டியடித்து குட்டி போட வைக்கப் பார்க்கிற உன் அம்மா! அடேய்! என்னைத் தன் சிறகால் மேலெழும்பிப் பறக்கடிக்கும் என்னோட கனவுகளும், தன் வேகங்களோடு காலத்தோடு பறக்கும் நானும் பிரிய முடியுமா?

நட்ராஜா! நான் இருட்டில் பறக்கிற பறவை. இருட்டுக்குள்ளே... உள்ளே... ஒளியை அலகால் பிரித்தெடுக்க ரத்தம் கக்கிப் பறக்கிற கரும்பறவை.!

அம்மா! நன்னு கன்னதல்லீ! கருமையாக ஒரு புள்ளியாக என் நெஞ்சில் கார் மழையாக, கடும் கறுப்பு இருட்டாய் மிஞ்சி இருக்கும் உன்னைத்தவிர வேறு எனக்கென்று என்ன இருக்கிறது? பசி!!!

என்னைச் சுத்தமாக்கப் பார்க்கிறியா? லல்லு? வெள்ளை வெளேர் என்ற என் தோலைப் பார்க்க வேண்டும். ஒரு முடி இருக்கக்கூடாது. மழமழா! நல்ல வேலை! சம்பளம்! பிழைப்பு! அப்பா சிபாரிசில் ஃபாரீஸில்கூடக் கிடைக்கலாம். சம்பளத்துடன் வந்தால் நான் உங்களுக்கு! என் அழுக்கு எனக்குப்போதும்.! அப்பாவுக்கு இந்திய வறுமை! யோகம்! தத்துவம்! செக்ஸ்! காம சாஸ்த்ரம்! ராமஜெயம்! தாந்த்ரீகம்! ப்ரான்ஸிலும் கேனஸ்ஸிலும் பரிசு வாங்கினால் மட்டும்?அவருக்கு என் கதை புரியாது. என் கவிதை தெரியாது! அவர் ஓவியர் என்றால் நான் ஓவியன்! சிற்பி! கவிஞன்! மூன்றும்! என் எழுத்து புரியாதாம். நான் எழுத்தில் வரைந்த ஓவியங்கள் புரியவில்லையா? என் புதுக்கவிதை தலையெழுத்தாய்! சாஸ்த்ரீயமான ஓவியராச்சே? புரியுமா? சகுந்தலை புரியும்! மோனாலிஸா புரியும்! மோஹினி புரியும்! டாவின்ஸிகூடப் புரியும்! என்னைப் புரியுமா? நான் எழுதுகிற கதைகள்! அச்சாகிற புதிய சிறு பத்திரிக்கைகள் அடித்தளமே இல்லாத என் தலைமுறையின் கஷ்டங்கள்! எங்களுக்குள் படர்ந்த உங்கள் வியாதிகளினின்று கிடைக்காத சுகங்கள்! எங்களுக்கேயான தாகங்கள்! அடி லல்லூ! நீ எங்கள் தலைமுறையல்லவா? உனக்குமா நான் புரியவில்லை. புரியாது. நீ பெண். அதிலும் மோஹம். அப்பா எழுதுகிற ஓவியம்போல் அபூர்வமான கலவையும், தஞ்சாவூர்ச் சித்திரப்படம் நீ! தங்கமும் வைரமும் இழைத்து நுணுக நுணுக அவர் தீட்டும் நுண்மையும் வர்ணங்களின் அபூர்வக் கலவையும், கற்பனையும் போல லல்லூ! அடி லல்லூ! நீயும் எல்லோருக்கும் உகந்தவள், லல்லுவின் இளமையும், அழகும், வடிவும், வாளிப்பும் மாதிரி உங்கள் தஞ் சாவூர் சித்ரப் படம். லல்லூ எனக்குப்போதுமா? வெறும் அழகும் பெண்மையும்? அப்பன் பணம் தர யோசிக்கிறார். படிக்க வச்சாராம். சோறு போட்டாராம். லல்லுவுக்கு என்மேல் ஒரே 'இது'வாம். லல்லூ நீங்கள் அணிகிற சேலைகள், உங்களுக்குச் சுமையாக இல்லையா? நகைகள்? நீங்கள் உங்கள் புராதானக்

கோயில்களிலும், சுவாமிகளிலும், ஓவியங்களிலும் செதுக்குகளிலும், உங்கள் மார்புகளின் சதைகளைக் காலங்காலமாய் பிதுக்கிக் காட்டி, கண்களைக் குத்திட வைக்கும் மார்புக் கச்சு, இடை உத்தரீயம்–மேகலை–ப்ரேஸியர்ஸ்–பபிள்கம்–மாராப்பு வளைந்து வளைந்து உங்களை பொதுவாக்கிக் காட்டுகிற இந்த அசிங்கங்களை நீங்களே ஒத்துக் கொண்டு உங்கள் உடம்புகளைப் பிதுக்கிக் காட்டி குடும்பத்துக்குள்ளும், வெளியிலும், பாதையோரங்களிலும் நீங்கள் திரியவில்லையா? பெண் உடையென்று ஒன்றை அணிந்தாலே அது பெண்ணாக மட்டும் உருக்கொள்ளும். விசித்திரத்தை நீங்கள் ஏன் மறந்தீர்கள்? இவைகளையெல்லாம் உங்களாலேயே களைய முடியாது என்று நீங்கள் ஏன் உணரவில்லை? எப்படி மூடிக் கொண்டாலும் பெண்ணென்ற பெருவெளி காலச்சுடரில் தெரிந்து கொண்டேதான் இருக்கும் என்பதை என் அப்பா தன் ஓவியங்களில் ஏன் மறுக்கிறார்?

"உங்களை எனக்குப் பிடிக்கவேயில்லை"

உனக்கு மட்டுமில்லையடி! நெருங்கினால் உங்களில் யாருக்கும் நான் தாஸனாக இருக்கமுடியாது. ஐ ஹேட் வுமன்ஃபோக்... முகமூடி இல்லாத ஒருத்தியாவது எங்கள் தலைமுறையிலேயாவது காண முடியுமா? எங்கும் மிஞ்சி இருப்பது பசி–வறுமைக் கோட்டைத் தாண்டிய நாடுகள்–எங்கள் சஞ்சலங்கள் வெறும் ஓவியத்தோடு நிற்காது! சிற்பத்தை உடைத்துச் சதுராடும் ஓவியத்தைக் கிழித்து, நூலாக்கும், கவிதையை எரித்து, கனலாடும் கனவை எரித்து, நிஜமாகும். நிஜத்தை எரித்து உண்மையைப் பிளக்கும்.

சத்யம்–தீ–அதை நோக்கிய பயணம்–நட்ராஜா! இது உனக்குப் புரியுமா? என் கதை லல்லுவுக்கு மட்டுமில்லை. உனக்கும் புரியாது–காலம் அதைக் கடத்தணும்–மாட்டிக்கக்கூடாது. நிஜமா வாழ்க்கை சவாலுக்குக் கூப்பிடும்போது தப்பிச்சுக்கணும். எப்படியாவது... எதைப் போட்டாவது... என்ன செஞ்சாவது... தப்பிச்சுக்கணும். சுருக்கமா நல்லாவே பொழைக்கணும். லல்லு! எல்லாத்துலயும் நீ புத்திசாலி. ஐ யாம் நாட் யுவர் ப்ரிஷியஸ் கலெக்ஷன் என்னைத் தேர்ந்தெடுத்ததுல. நீயும் எவ்வளவு பெரிய முட்டாள். நீ ஏமாந்துட்டே. உங்கம்மாவையும் அண்ணனையும் ஏமாத்திட்டே! எவ்வளவுதான் புத்திசாலித்தனம் இருந்தாலும் நீ பெண்! இன்னும் ஆயிரம், லட்சம் வருஷத்துக்கு உன் உடம்பை உன்னிலிருந்து பிரிக்க முடியாது. நிலம் பிளந்து விதை ஊனி ஆலமரமாகிறதை நிலம் வேண்டான்னு விதையைத் துப்பிட முடியுமா? நானில்லாட்டி வேறொரு விதை. எனக்கு நிலமே

இல்லாத மடுபோதும். சுழித்தோடும் ஆற்று மடு. என் விதைகள் நீரோடு போகும். எங்கள் காலத்தின் தனி விருக்ஷமாய் அந்த விதைகளே எங்கெங்கோ ஊன்றி வளரும். பெயரில்லாத உருவமில்லாத அந்த விருக்ஷங்கள் கனிகளைக் கொட்டும் காலம் வரும். அந்தக் காலம்கூட எங்களுக்கு வேண்டாம்.

"என்னாடி இது–காப்பி ஆறிக் கெடக்கு. நீயும் தம்பியும் மோட்டுவளையப் பாத்து குத்திட்ருக்கீங்க! என்னா இது காப்பியக் குடி தம்பி–நீங்க வந்தாபோதும். ஸ்கூலுக்கு மட்டம் போடுறா..."

"ஆமா–இவரு வர்றாருன்னு மட்டம் போடுறாங்க, ஸ்கூலுக்கு. எனக்குத் தலைய வலிக்குது" அவள் பரந்துவை நோக்கி மறுபடி தன் வலையை வீசினாள்.,

"நீங்க சொல்லுங்க நான் கான்வென்ட் போறேன்."

"நான் ஏன் சொல்லணும்"?

"என்னா தம்பீ இது? நீங்க சொல்லாம யாரு சொல்றது? வாங்க–வென்னி போட்ருக்கேன் குளிங்க. சவரக்கடை கண்ணாயிரத்த வரச்சொல்லவா. மீனு குழம்பு வெச்சிருக்கேன். குளிச்சுகிட்டா நட்டுவும் வந்துடுவான். சேந்து சாப்பிடலாம்" பரந்து லல்லுவையே பார்த்துக் கொண்டிருந்தான். சாதாரணமான விழிகளல்ல. சற்றே பூனைப் பசுமை கொண்ட அகன்ற பெரிய விழிகள் லல்லுவுக்கு. சற்றே குள்ளமான ஆனால் குள்ளந் தெரியாத–நல்லெண்ணை நிறம்–மினுங்கும் பூரித்த உடம்பு–இவர்கள் எல்லோரும் ஏன் இப்படி உபசரிக்கிறார்கள்? உண்மை தெரியாமல்! லல்லுவின் கண்களில் அழைப்பு! ஆணை! மறுபடி மறுபடி அதை நம்ப பரந்துவால் முடியவில்லை. திறந்த அழைப்பு. அந்தக் கான்வென்ட் ட்ரஸ்–அவளைச் சிறுமியாகக் காட்டினாலும் அவளை இன்னும் அர்த்தப்படுத்தியது. வெள்ளைக் காலர்கள் பிரியும் இடத்தில் ஒரு கோடு. பெரு மூச்சால் கோடு நீண்டு சுருங்கியது. இதைத்தான் அவன் சித்திரமாக எழுதுகிறான். அவன் கதைகளில் இந்த சாகசங்களே அர்த்தம் கொள்ளுகின்றன. லல்லு அழைப்பதற்கும் இப்படிப் பொருமுவதற்கும் பாபி கூப்பிடுவதற்கும் என்ன வித்தியாசம்? இவர்களெல்லோருக்குமே இது புரிந்தும் இதை இல்லை என்று மறுப்பதில் இவர்கள் ஏன் இத்தகைய ஆர்வம் காட்டுகிறார்கள். உலகம் முழுமையும் பெண்மைக்கு நெகிழ்வதையும், பட்டுப்பாய் விரிப்பதையும் ஒரு கணத்தில் ஒவ்வொருவருமே அவள்களுடன் அவள்களின் கால்களில் மிதிபடுவதையும் எத்தனை சந்தோஷ மந்த ஹாசத்துடன் இல்லை

என்று மறுக்கப் பார்க்கிறார்கள்? இதைத்தான் பரந்தாமராஜூ தன் கொலாஜ்களில் செதுக்குகிறான். அவை சிக்கல்களாக இல்லாமல் சுலபமான முண்டங்களாகவா இருக்கும்? அவையெல்லாம் நவீன சிக்கல்கள். அவற்றைப் புரிய நீங்களும், பரந்தாமராஜூவின் வேக்காட்டில் பொசுங்க வேண்டும். வெந்து மலர வேண்டும் நாளையத் தீயில் எரிய வேண்டும். கண்ணெதிரே தெரியும் எங்கள் தலைமுறையின் பசியில் கருக வேண்டும். இவைகளையெல்லாம் மாற்றமுடியும் என்று தெரிந்தும், முடிந்தும் அதிலேயே புதைய வேண்டும். எல்லாம் பொதுவாக வேண்டும். சிம்மாசனத்தில் சிரிக்க வேண்டும். போர்க்களத்தை நொறுக்க வேண்டும். உங்களுக்கு இதெல்லாம் வேண்டாம் லல்லூ! நானும் உனக்கு வேண்டாம். பரந்தாமராஜூ எழுந்து நின்று லேசாகச் சிரித்தான். பாயாஸ் செத்திருந்தது. கைகள்–உள்ளங்கைகள்கூட வியர்வையில் நனைந்திருந்தன.

“என்னா தம்பீ–எந்திருச்சிட்டீங்க?”

“வர்றேம்மா–இன்னொரு சமயம் பாக்கலாம்–சொல்லியும் போறானேன்னு நெனைக்காதீங்க. நான் நெனைக்கறதச் சொல்லத் தெரியல்ல. நான் ஒரு வேஸ்ட். அதோட கான்வென்ட் பஸ் ஹார்ன் சத்தம் கேக்குது லல்லு! நீ ஸ்கூலுக்குப் போகலாம். இன்னும் டைமிருக்கு. ஒரு வேளை எல்லாத்துக்குமே நேரமிருக்குன்னு தோணுது. நட்டு வந்தா சொல்லுங்க. அநேகமா நாளைக்குப் பாக்கலாம்னு–அப்றம் பாக்கறேனே ஓங்களையும்” அதிகம் பேசிய களைப்புடன் லல்லுவை உற்றுப் பார்த்தான். லல்லுவின் உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. கண்கள் அவனையே கவ்வி இழுத்தன. துளித்துளியான கண்ணீர் கண்களில் திரண்டது. ஒன்றுமே பேசாமல் லல்லுவின் அம்மா உள்ளே போகவும் அங்கு ஒரு மயானம் உருக் கொண்டது. தாங்கமுடியாத மௌனம். வாசலில் மீண்டும் ஹார்ன் சத்தம். மீண்டும் பரந்தாமராஜூ–உலகத்துக்குப் புரியாத அந்தக் காரியத்தை செய்யவே செய்தான். ஆனால் இம்முறை அவள் வெற்றி கொண்டாள். உதடுகளை மறுபடியும் துடைத்துக் கொண்டு மறுபடியும் பரந்தாமராஜூவின் கழுத்தைச் சுற்றி பாம்புகள்போல் படர்ந்து இறுகிய லல்லுவின் கரங்களின் அக்னியில் அந்த நட்ட நடுக்கூடத்தில் வாய்பிளந்த வாசலில் இருந்தும் உள்ளிருந்து சலங்கையாடிய சப்தங்களிலிருந்தும் யாரும் எதையும் காணமுடியாவிட்டாலும் பரந்தாமராஜூ லல்லுவில் ஜம்னாவை அழுந்த முத்தமிட்டபோது உணர்ந்து செத்தான். வீதியில் இறங்கி ஹோ வென்று வீசிய காற்றில் அவன்

கலந்தபோதுபின்னிருந்து லல்லுவின் குரல் "எப்ப வருவீங்க அப்புறமா?" என்று அர்த்தமற்றுச் சுருண்டது.

எதிரே புழுதிக் காற்றில் கண்களைச் சுருக்கியபடி வந்து கொண்டிருந்த நட்டு "என்னடா போறே? லல்லு இல்லியா வீட்ல" என்றான்.

கண்மண் தெரியாத புழுதிக் காற்று.

"அப்புறமா வர்ரேன்டா" என்று சொல்லியபோதும் பரந்தாம ராஜூவுக்கு அதன் அர்த்தம் கழுத்தில் கட்டிய பாறாங்கல்லாய் கனத்தது.

புழுதிக் காற்றில் கான்வென்ட் பஸ் நின்று கொண்டிருந்தது.

# 3

எப்படி இவ்வளவு தூரம் நடந்து வந்தான்? அவனுக்கே தெரியாது. தண்டவாளம் ஓரமாக மேம்பாலத்தின் கீழே லேசாக தடுமாற்றத்தோடு ரயில்பாதையைக் கடந்தபோது தடுமாறிக் கீழே விழுந்தான். யாரோ தூக்கிவிட்டார்கள். தூக்கிவிட்டவரும் ஒரு கிழம். அவர் கையிலும் ஒரு குச்சி.

"ஏய் மீனாட்சி ராஜூ மவன் தானே நீயி? ஏன்டா இப்படி அழிஞ்சு போற. போ போ. இங்க ஏமி உண்டுந்த்தி. மீ அம்ம வேறு இங்ககே ஏமி உண்டாக்திர். என்னா எளவுடா இது. இப்பிடிக் கஞ்சாவ குடிச்சுட்டுப் பொறள்ற நீயி. நேனு எட்ல பாபம் சேஸ்துன்னானோ. நாக்கே தெலி துரா. மெல்லிக மெல்லிக, நேனுகூடா சச்சி போயினா? எந்த்த மஞ்ச்சிதி"

கிழவர் தலையில் அடித்துக் கொண்டே போகிறார்–பரந்தாம ராஜூ கண்களில் லேசாகக் கண்ணீர் கலந்தது. அவன் அப்பா மீனாக்ஷி ராஜூவையே குழந்தையாகக் கையில் தூக்கி விளையாடியவர் அந்த கிழவர். அவர் ராஜூ அல்ல. நாயுடுவோ–செட்டியாரோ–ராஜா வீடுகளில் இவரை யாரும் ஜாதி கேட்டதில்லை. கேக்க மாட்டார்கள். எல்லாருக்கும் தெரியும்–இவர் ராஜூ இல்லை என்று. அதை ஒத்து கொள்வதற்கு யாரும் விருப்பப்படவில்லை. அவர் விரும்பி

இருந்தால் ஒரு ராஜூப் பெண்ணைக் கட்டிக் கொடுத்திருப்பார்கள். இப்போது தஞ்சாவூரில் ராஜூக் குடும்பங்கள் அருகிவிட்டன. மிஞ்சிப்போனால் பத்து இருபது குடும்பங்கள் இருக்கலாம். ஒரு மூன்று நான்கு குடும்பங்கள் கொண்டி ராஜபாளையத்தில் இருந்தார்கள்–அவ்வளவுதான். இந்தக் கிழவருக்குக் கவலையெல்லாம் ராஜூக் குடும்பங்கள் பற்றித்தான். இருபத்தைந்து குடும்பங்களும் எங்கெங்கு இருந்து, என்னென்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? எந்த ராஜூக் குட்டிக்கு எந்த ராஜூ மாப்பிள்ளை தோது–தொடுக்கு? எந்த ராஜூப் பயலுக்கு எந்தக் குட்டி சரியாக ஜோடி சேரும்–தாங்கும்–தடுக்கும்? என்றெல்லாம் கிழவர் கூட்டிக் கொண்டு வந்து மீனாக்ஷி ராஜூவிடம் சேர்த்ததுதான், சரளா! தெலுங்கு பேச மாட்டாள். அவர்கள் ஊர்க்காரர்களிடம் மட்டும்தான் தெலுங்கு. அப்பாவிடம்கூட தெலுங்கில் பேசியதை அவன் கேட்டதேயில்லை. சரியான ராஜூ ஜாதிப் பெண். ஏதோ ஒரு கோயிலில் விதானத்து சுதைச் சிற்பமொன்று திடீரென்று இறங்கி வந்ததுபோல் இருக்கும். கல்யாணம் ஆகவில்லை. யாரும் கவலைப் படவுமில்லை. வயது அதிகம் இருக்க முடியாது. மீனாக்ஷி ராஜூவிடம் அவள் வேலைக்குச் சேரும்போது, அவனைவிட நாலு வயது குறைந்தவள்–மெல்லிசாக ஒடிந்து விழுகிற மாதிரி கதர்ப் புடவையில் வந்தவள்–இப்போது நவீனப் பட்டுப் போய் வெளிநாடுகளுக்கெல்லாம் அப்பாவுடன் போய் தலைமுடி கொட்டிப் போகவும், வெளிநாட்டு ப்யூட்டி பார்லர்களில் வியர்ந்து வடிய வைத்த நீராவிக் குளியல்களாலும், ஹேர் ட்ரஸ்ஸிங்குகளாலும், உடல் மஸாஜ்களாலும் அவளுக்குள்ளேயே அதிகத் தன்னம்பிக்கையை வளர்ந்ததால் அவள் இன்னும் உருண்டு திரண்டு ஒருவிதமான அலட்சியமான நவீனச் சாயல்–அவளை மெத்தனப்படுத்திவிட்டது. லேசாக விஸ்க்கி, கொஞ்சமாக போர்க், பீஃப்–அயல்நாட்டுக் காளான்கள் எல்லாம் அவளது ருசிகளை மாற்றின. காரத்தை அறவே ஒதுக்கி மிளகும் எலுமிச்சம்பழமும் அவளுக்கு மிகுந்த நிறத்தைக் கொடுத்தன. தெலுங்கு அவளுக்கு தூரமாகிப் போயிற்று. சரளா!–பரந்தாம ராஜூவுக்கு ஓர் இடைஞ்சல். மீனாக்ஷி ராஜூவின் ஸெக்ரட்டரியாக அவள் வந்ததிலிருந்து வீடே அவள் கையில் மாறியது. பரந்தாம ராஜூவும்தான். அவள் அவனுக்கு எல்லா வகைகளிலும் ப்ரச்னை–வேறு யாராவது இருந்தால் இந்த வீட்டை விட்டு ஓடியிருப்பாள். பரந்தாமராஜூ பலமுறை சரளாவை அடித்துப் போட்டிருக்கிறான். தெலுங்கில் மிக மோசமான வார்த்தைகளை அவளுடைய தாய் தகப்பனார்களுக்கு அருளிச் செய்திருக்கிறான்.

ஒரு வயது வந்த பெண்ணிடம் செய்யக்கூடாத முரட்டுத்தனங்கள் அத்தனையும் செய்திருக்கிறான். கடைசியாக அப்பா மீனாக்ஷி ராஜூவுடனேயே அவளது பெண்மையை இணைத்துக் கேவலப்படுத்திப் பேசியிருக்கிறான். அவள் சரளா! அவளுக்குச் சம்பளம் அந்த வீட்டுக் கௌரவம். மாதா மாதம் அவள் ஊருக்கு அனுப்பும் பணம் மட்டும் ஆறாயிரமோ, ஏழாயிரமோ இதற்கெல்லாம் சேர்த்துதானே தருகிறார் அப்பா. இருபத்திநாலு மணி நேரமும் அப்பாவுடன் இருக்கும் சரளா அவனுக்கு நிரந்தர எதிரியாகிப் போனது, பெரிய விஷயமில்லை. அப்பாவுக்கும் அவளுக்கும் இடையே இருந்த உறவு ஆச்சர்யமானது. அப்பழுக்கில்லாதது. அதைச் சகிக்கத்தான் பரந்தாம ராஜூவால் முடியவில்லை. அவளது உடம்பின் தேவைகளை அவள் கழட்டிப் போட்டுவிட்டுத்தான் அங்கே அவள் வேலை செய்தாள் என்று பரந்தாம ராஜூவுக்குத் தெரியும். சரளா ஆணுக்கு ஆண், பெண்ணுக்கும் ஆண், சல்லடம் அணிந்து கொண்டு ஸ்லீவ்லெஸ் பனியன் போட்டுக் கொண்டு விடியற்காலை வேலைகளில் அவளுடைய பணிப்பெண்களுடன் மொட்டை மாடியில் வியர்க்க விறுவிறுக்க அவள் செய்யும் நீச்சல்–தோட்ட வேலை மீன் வளர்த்தல்–போதாத குறைக்கு ஏராளமான பூனைகள் வேறு வளர்த்தாள். பூஜைகள் செய்தாள். ப்ராம்மணர்களைக் கூப்பிட்டு ஹோமங்கள் வளர்த்தாள். சுதர்ஸன ஹோமம்–யாகங்கள் எல்லாம் செய்தாள். ஒரு பண்டிகைகள்விடாமல் பூஜை புனஸ்காரங்கள் விசேஷங்கள்–பரிசேஷங்கள்–விரதங்கள் எல்லாம் அனுஷ்டித்தாள். ஒன்றே ஒன்றுதான் செய்யவில்லை. எந்தக் காரணத்தாலும் மீனாக்ஷி ராஜூவையோ, பரந்தாம ராஜூவையோ அவள் நெருங்கவேயில்லை. அந்த வீட்டில் ஒரு வேலைக்காரியாகவே அரசோச்சினாள். அப்படியானால் அவள் வேலைக்காரியா என்ன? அவள் ராணி–மீனாக்ஷி. ராஜூ அவளை ராணியாகத்தான் வைத்திருந்தார். தனது மஹிஷியாக அல்ல. பரந்தாம ராஜூ அவளைக் காலால் உதைத்தான். ராணி விக்ரஹம். கால்தான் வலித்தது. அதனால்தான் சரளா எல்லோருக்குமே பயம் தந்தாள். இதுவும் தெரிந்ததால்தான் பரந்தாம ராஜூ அவளைப் புரிந்து கொள்ளமுடியாமல் தவித்தான். ஒரு கையால் கேட்டை (இரும்பு)த் தள்ளித் திறக்க முயன்ற முயற்சி பலிக்கவில்லை. பரந்தாம ராஜூவின் தலையில் 'ணங்'கென்று இடிபட்டது. வலித்தது. இரும்பின் வலிமை.

எதிரே நீண்ட லான், அடர்ந்த புல்வெளி, புல்வெளியின் நடுவே இரண்டு விசிறி வாழைகள், நீளமான தண்ணீர்த் தொட்டி, நடுவில்

நீரைச் சுற்றி விசிறியடிக்கும் பூந்துளி, புல்வெளியில் ஆங்காங்கே விநோதமான நிறத்தில் வெளிநாட்டிலிருந்து கொண்டு வந்து பயிர் செய்யப்பட்ட—இந்த நாட்டில் காணக் கிடைக்காத—குரோட்டன்ஸ் மற்றும் பூச்செடிகள்—பழ மரங்கள், வீட்டை ஒட்டினாற் போல கிழக்கே வெகுதூரத்தில் ஒரு சிறிய பளிங்குக் கோவில், ராதாகிருஷ்ணன் ஆலயம், காணும் எல்லாவற்றிலும் ஆடை படர்ந்த ஒரு பணக் கொழுப்பு, நுண்மையான கலை மணம், ஒருவித அயல் நாட்டு அறிவும், திட்பமும் இந்தியக் கலையியலோடு கலந்து வெளிப்படும். பெரிய பங்களா. தரையெங்கும் காஷ்மீர்க் கம்பளங்கள், நவீனமான ஸில்வர் வுட் கருங்காலி மரங்களில் செய்யப்பட்ட சிற்பக் கலை, அழகு கொண்ட விலை மதிப்பில்லாத நாற்காலி மேஜைகள்—ஸோஃபாக்கள் கொண்ட பெரிய ஹால். நான்கு புறங்களிலும் கதவுகளின் வழியாக அந்த வெயில் வேளையிலும் ஜிலுஜிலு என்ற காற்று, நேர் எதிரே ஆஃபீஸ் என்ற போர்டுடன் நான்கைந்து குமாஸ்தாப் பெண்கள். நடுவில் ராணி—சரளா அவனை அலட்சியமாக நிமிர்ந்து பார்த்தாள். பரந்தாமராஜூ தள்ளாடித் தள்ளாடியபடியே அங்கே போய்ச் சேர்ந்தான். சரளாவின் முகம் முறுகக் காய்ச்சிய பால் போல இருந்தது. அவள் மேஜையில் கையை ஊன்றிக் குனிந்தபடி "பணந்தா்றியா? நாயனாட்டப் போகட்டா" என்றான்.

"போயேன், என்னா பயமுறுத்துறியா? பயந்த காலம் இப்போ இல்ல. ரெண்டு நாளைக்கி முன்னாலதான் ஐநூறு ரூபா பணம் வாங்கிட்டுப் போயிருக்க. ஒன் அட்டகாசத்துக்கு ஓங்க நாயனா வேணா பயப்படுவாரு. நாம் பயப்படமாட்டேன். ஓங் கோட்டா முடிஞ்சிருச்சு. இனிமே அடுத்த வாரம்ந்தான்"

"யேய், நீ யார்றீ எனக்குப் பணங் கொடுக்க? நான் இங்க பணங் கேட்டு வரல்ல. எடுத்துட்டுப் போக வந்துருக்கேன்"

"நீ எடு. தைரியமிருந்தா எடு. பாக்கலாம். நாயனாவுக்காகப் பாக்கறேன். இல்ல அடுத்த நிமிஷம் உள்ளே இருப்ப."

"உள்ளன்ன ஜெயில்லியா? சரி, அதையாவது செய்ங்கடி, நீயும் எங்கப்பனுமாச் சேந்து அடிக்கிற கொட்டம் எனக்குத் தெரியாதா? எங்கம்மா செத்தாச்சு. பெரிய கலைஞரில்லியா எங்க நாயனா, அதான் உன்ன வெச்சுட்ருக்காரு" குனிந்து எழுதிக் கொண்டிருந்த பெண்கள்—குமாஸ்தாக்கள் பரந்தாமராஜூவை நிமிர்ந்து பார்த்தார்கள். பரந்தாமராஜூ கவலைப்படவில்லை. வாரித் தூற்றினான்.

“ஊர் உலகத்துக்கே தெரியும். உன்ன வெச்சுக்கிட்ருக்கறது. மத்தவங்க் சொல்றதில்ல, நாஞ் சொல்றேன். உனக்கு மானமிருந்தா இங்க இருக்க மாட்ட. ஆனா எல்லாருமே முகமூடி போட்டுகிட்டு ஒவ்வொருத்தனும் ஒவ்வொரு வேஷங்கட்டிக்கிட்டுக் கூழைக் கும்பிடு போடும்போது நீ என்ன செய்வ? உன் வயசுக்கு உன் இருப்புக்கு இது பெரிய லாபமான வியாபாரந்தான். என்ன ஒழிக்கிறதுக்குதான் உன்ன வெச்சுருக்காரு நாயனா. நடக்காதுடி” உறுமினான், பரந்தாமராஜு. அவனுக்கே தன் கோபம் எத்தனை பலவீனமாகவும், அர்த்தமற்றும் ஒலித்தது என்பது தெரிந்தது. சரளா சிரித்தாள். அவனையே உற்றுப் பார்த்தாள். இடையில் விழுந்த அமைதியில் அவளது பணிப்பெண்கள் ஒருவிதக் குமாஸ்தாத் தனத்துடன் அவர்கள் இருவரையும் பார்த்தனர்.

“ஒனக்குப் பணம் வேணும்னா கேட்டப்பல்லாம் நாங் குடுக்கத் தயார். ஆனால் நாங் கேக்குறதை குடுக்க நீ தயாரா? ராஜு காரு நேனு நீவு பாரியா காது. நேனு சொப்பந்தீ விண்டாமாரா. அந்த்த வரலும் இட்டதான் நடிச்சுன்னு. நாங் கேக்றத நீ–நீங்க–இல்ல நீதான் குடுக்கல்லேன்னா, நீ சொல்ற மாதிரி நான் தேவிடியாளாவே இருந்துட்டுப் போறேன். இவுங்க எல்லாருக்கும் முன்னாடி சத்தம் போட்டுத்தான் சொல்றேன். ஓங்கப்பாவை நான் வெச்சுக்கிட்ருக்கேன்டா. அவரு என்ன வெச்சுக்கிட்டு இல்ல. நேனு பெள்ளி கூந்தரு காது. நேனு பெண்ட்லாமு காது. நேனு மரு இந்தரு வாளிக்குன்னு பெல்லான்னு தளுச்சுக்கோ” பரந்தாமராஜு கண்கள் திடீரென்று சிவந்தன. மூளை கொதித்தது. அவனது செயலற்ற திக்கற்ற பொருளற்ற ஆண்மை வெறி கொண்டது. என்ன சொல்லிவிட்டாள் அவள்? “ஆமாண்டா, நீ சொல்றா மாதிரி ஓங்கப்பாவை மட்டுமில்லே... உன்னையுந்தான் வெச்சுக்கிட்ருக்கேன். என்ன பண்ணுவ!” அடீ சரளா உனக்குள்ளேயும் இத்தனை முகங்கள், முகமூடிகள் இல்லாமல் வேர்த்து வடிகின்றனவே. நீ ஒரு பெண். இத்தனை நாளும் இந்த முகம் என் முன்னே வெடித்தது இல்லை. முகம் வெடிக்குமா? பாளம் பாளமா வெடிக்கும். நானே நம்பாமல் உன்னை மிரட்டிப் பணம் வாங்க அரட்டி மிரட்டி நீ அயராமல் நாயனாவை மட்டுமில்லே. நீகூட நீகூட எனக்கு வேண்டும் என்கிறாயே. இத்தனை நாளாக நீ பேசும் அமெரிக்கச் சாயல் கொண்ட ஆங்கிலம் இந்த முகத்தைக் காட்டியதில்லை. இப்போதுதான் தெரிகிறது நீ ஏன் ஓயாமல் நடனம் கற்றுக் கொண்டு பயில்கிறாய் என்று. நீ வளர்க்கும் பெரிய மீன்கள் எத்தனை மண் புழுக்களைத் தின்று ஏன் கொழுத்து நீந்துகின்றன

என்று. அப்பாவின் ஓவியங்களை வெளிநாட்டவர்களிடம் விற்க நீ காட்டும் உன் சாகஸச் சிரிப்பு ஏன் என்று. எல்லாமே நீ இல்லாமல் உன்னை இதற்குள் ஒடுக்கிக் கொள்ளத்தான் என்று. இந்த நிஜமுகம் கிழிந்து ரத்தம் கக்குவதை நாயனாவும் ஏன் நீயுமே கூட ஒப்புக் கொள்வீர்களா? மாட்டீர்கள். சரளீ! சரளம்! ஆனால் உன்னால் அதுமுடியாது. நீ சொல்வதை நான் கேட்க வேண்டுமா? நீ சொல்வதைக் கேட்டால்போதுமா? எனக்கு அது ஒன்று தானே முடியவில்லை. லோசனா! அம்மா. நா கன்னதல்லீ! என் உடம்பில் உன்னைப் போன்ற பெண்கள் வேண்டுகிற ஏதோ ஒன்று தோண்டி எடுக்கக் காத்துக் கிடந்தும் எடுத்துக் கொடுக்க முடியவில்லையே அம்மா தல்லீ!

சரளாவுக்கு வேண்டியது இது எல்லாம் இல்லையாம் அப்பாவுக்குப் பிள்ளையாய், வீட்டிலேயே அப்பாவுக்கு வாலாய், ஓவியர் மணித் திலகம் மீனாக்ஷி ராஜூவின் வாரிசாய் அவர் பண்ணுகிற அபத்தக் குப்பைகளை எல்லாம் தங்க ரேக் ஒட்டி, அவர் பண்ணுகிற வேஷமிட்ட, படங்களுக்கெல்லாம் பூனாரம் புனைவித்து, அவர் வரைகிற உயிரற்ற தெய்வங்களுக்கெல்லாம் வயிரங்கள் பூணுவித்து–மொத்தத்தில் ஹோல் ஸேல் செய்ய ஸ்டோர் கீப்பராக, ஆர்ட் கேலரியாக இருந்து சரளாவுக்கு பின்னாலேயே சுற்றிக் கொண்டிருந்தால்போதும். இப்போது அவனுக்குப் புரிந்ததெல்லாம் அவளுக்குப் புரியவே வேண்டாம். பரந்தாம ராஜூ வெறி பிடித்தவன்போல் சிரித்தான். சிரித்துக் கொண்டே நின்று கொண்டிருந்தான்.

சரளாவும் மீனாக்ஷி ராஜூவின் ஆஃபீஸ் ஊழியர்களும் பரந்தாம ராஜூவை அசைவற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் யாருக்கும் அவனது மன ஓலம் எட்டியதே இல்லை. சரளா தனக்குள் பலவீனமுற்றாள். அவனுக்கு அவளது உள்வேடம் புரிந்துவிட்டது. அவளால் தாங்க முடியவில்லை. நான் சொல்றதை நீ கேப்பியா? நான் சொல்றபடி நீ கேக்கிறியா? நான் சொன்னாக் கேப்பியா? என்று எல்லார் முன்னிலையிலும் அவனைக் கேட்டு எத்தனை அசட்டுத்தனமாக அவனிடமே "நீ என்ன வச்சிருக்கே. நீ என்ன வெச்சுகிட்டுத்தான் இருக்க. வெச்சுக்க. வெச்சுக்கலாம். நேனு மீரு போகளதி." அப்பா... என்ன மோசமாக அவள் ஒப்புக் கொண்டாள்? எவ்வளவு சாதாரணமாக நிர்வாணம் கொண்டாள்? நினைக்கவேயில்லை அவள். ஆனால் அவளே சொன்னது போல அவளது வேஷம் இன்னும் யாருக்கு முன்னும் கலையவில்லை. யாராலும் கலைக்கமுடியாது. ஆனால் பரந்தாமராஜூ... அவள்

நடுங்கினாள். அவன் கரங்களில் இருந்த தூரிகையின் வேகத்தை அவள் உணர்ந்தவள். அதுபோலவே அவன் முன்னே அவள் நிர்வாணமும் தஞ்சாவூர்ச் சித்ரப்படமாய் பொன்னாலும், வைரத்தாலும் வேஷம் கொண்டு மூடுபடமிட்டுக் கொண்டது. அவள் கண்கள் இருண்டன.

பரந்தாமராஜூ ஸ்வாதீனமாய் அவள் பக்கத்திலிருந்த இரும்பு பீரோவைத் திறந்து அதிலிருந்து கரன்சி நோட்டுக் கட்டு ஒன்றை எடுத்துப் பையில் திணித்துக் கொண்டபோது சரளா வெறி கொண்டாள். முன் எப்போதும் இருந்திராத வெளியுடன் அவன் பையிலிருந்து மூர்க்கத்தனமாய் நோட்டுக் கட்டைப் பிடுங்கி இரும்புப் பெட்டகத்தினுள் போட்டு படாரென்று வேகத்தோடு பீரோவைச் சாத்தி மறுகையால் அவனை உந்தித் தள்ளி எல்லோரையும் பிரமிக்க அடித்தபடியே “ராஜா ஜவான்” என்று கூவினாள்.

அடுத்த அறையிலிருந்து பலிஷ்டமான ராஜா ஜவான் என்கிற அந்தக் கையாள் வெளியே தோன்றினான். ராஜா ஜவான் சரளாவின்–மீனாக்ஷி ராஜூவின்–அடியாள். ஒரு மராட்டியன். மல்க்கம்பம் செய்ய தஞ்சாவூருக்கு வந்த ஒரு மல்லன். மீனாக்ஷி ராஜூவுடன் வந்துவிட்டவன். தனது பயில்வான் உடம்பை அசைத்தபடி “என்னா பாய்! சொன்னாக் கேட்க மாட்டீங்களா? அம்மா சொல்றபடிக் கேளுங்கோ! என்றான். சிவந்த கண்களும் முரட்டும் உடம்பும், கரளை கரளையாய் அவன் சதைத் திரட்சிகளும் யாரையும் அச்சுறுத்தும். சரளா அவனைப் பார்த்து, “அவருகிட்ட என்னா பேச்சு? பிடிச்சு இழுத்துகிட்டு அவுங்க நாயனாகிட்டப்போ. விடிஞ்சு எழுந்திருச்சா இதே வேலையாய் போச்சு. காலைல ஐநூறு ரூபா குடுத்தா சாயங்காலம் இல்ல. சாயங்காலம் ஐநூறு ரூபா கொடுத்தா காலைலே இல்ல” என்றாள்.

பரந்தாமராஜூவுக்குத் தெரியும். ராஜா ஜவான் ஒருவன் மட்டும்தான் இங்கே ஆண் என்று. மகனை வழிக்கு கொண்டு வர அந்த மராட்டியனின் உடல் பலம் போதுமென்று மீனாக்ஷி ராஜா நினைத்திருந்தார். சுற்றுக் கட்டாக பரந்தாம ராஜூவை பிடித்து இறுக்கியபோது எல்லோருக்கும் பரந்தாம ராஜூ ராஜா ஜவானின் கைகளில் செயலற்றுத் தொங்கினான். ஆறேகாலடி உயரமும் மூன்றடி அகலமும் இருநூறு கிலோ எலும்பும் சதையும் பரந்தாம ராஜூவை செயலற்றவனாக்கியது. எல்லோரும் ஆச்சரியமுற்றார்கள். ஏனெனில் பல நேரங்களில் பரந்தாமராஜூ ராஜா ஜவானைத் தலைக்குமேல் தூக்கி அடித்திருக்கிறான்.

அந்த மெல்லிய கோமளமான உடம்பில் ஒருவிதமான வெறி கொண்ட மூர்க்கம் இருந்தது. ராஜா ஜவானுக்கே பல முறை அச்சம் தந்திருக்கிறது. பாம்பு சட்டை உரித்தது மாதிரியான உடம்பு பரந்தாமராஜுவுக்கு. மராட்டிய மல்லர்களது அத்தனை அடவுகளும் கிடுக்கிப் பிடிகளும் வர்மமும் பரந்தாம ராஜுவுக்குப் பன்னிரண்டாவது வயதிலேயே பழக்கம். நாயனாவை முதன் முறையாக மோதியதும் அதே பன்னிரண்டாவது வயதில்தான். அம்மா லோசனா அவனை மீனாக்ஷி ராஜுவின் கையில் ஒப்படைத்தது நாடகம்போல் இப்போதும் ஞாபகமிருக்கிறது. நாயனா அவனுக்கு எப்போதும் எதிரி என்ற நிலையில் ராஜா ஜவான் அவனை அடித்துத் தனி அறையில் போடுவதும் வெகு நேரம் காத்து இருட்டறையில் இருந்து வெளிவருவதும் உடம்பின் ஊமைக் காயங்கள் மாறிப்போக மீண்டும் ராஜா ஜவானின் அடி உதைகளுக்கு தயாரானதும் இன்று நேற்றல்ல. ஆனால் இப்போதெல்லாம் அடிகளுக்கு-உதைகளுக்கு ராஜா ஜவான் களைத்துப் போய்விட்டார். எனவே பரந்தாம ராஜு எதிர்த்து அடிக்கிறதில்லை. இருவருமே ஓய்ந்துபோன காலமிது. இருவருமே குடிகாரர்கள். மல்லர்கள். மனிதர்கள். அதனாலேயே சரளாவுக்கு இவை எல்லாமே சாதாரணம். அங்கிருப்பவர்கள் எல்லாருக்குமே.

அவனை ராஜா ஜவான் வழக்கம்போல் மீனாக்ஷி ராஜுவின் ஸ்டுடியோ ரூமுக்கு தூக்கிக் கொண்டு போனான். அது மாடியில் இருந்தது. சாதாரணமான சுதை வேலைக்காரரல்ல மீனாக்ஷி ராஜு. சரளா என்கிற நிரம்பப் படித்த ஆக்ரோஷமான ஒரு ராஜுப் பெண்ணின் கட்டுமானத் திட்டத்தில் உருவான ஸ்டுடியோ அது. தனி உலகம். யாரும் அங்கே நுழைய முடியாது. மீனாக்ஷி ராஜு என்ற கலைஞன் க்ரியா சக்தியுடன் போராடும் செயற்களம் அது. மிக நவீனமான ஐரோப்பாவின் எல்லா வசதிகளும் கொண்ட ஓவிய சிற்ப சாதுர்யங்களுக்குத் தேவையான எல்லா வசதிகளையும் வாய்ப்புகளையும் பல ஓவிய என்சினீயர்களின் மூலம் சாதித்திருந்தாள் சரளா. பெரிய பெரிய கண்ணாடிச் சிற்பங்கள், கண்ணாடி ஒட்டு வேலைகள், பாதி முடித்திருந்த வேலைகள், தங்க ரேக்கு ஒட்டிக் கொண்டிருந்த மாணவிகள், -இவர்கள் எல்லோரையும் கடந்து உள்ளே பரந்தாமராஜுவை அலாக்காகத் தூக்கிக் கொண்டு மீனாக்ஷி ராஜுவின் ஸ்டுடியோ உள்ளுக்குப் போனான் ராஜா ஜவான். உள்ளே நாலு புறமும் ஒளி வட்டங்கள் விழ பெரிய கண்ணாடிப் பரப்பு ஒன்றில் அலுமினிய ஏணி ஒன்றின் பீடத்தின்மேல் அமர்ந்தபடி (அந்த மிகப் பெரிய தஞ்சாவூர் சித்ரப் படத்தின் கட்கிளாஸ் பெயிண்டிங்கை)

உயிரூட்டிக் கொண்டிருந்தார் மீனாக்ஷி ராஜூ. அந்தக் கண்ணாடிப் படத்தில் மர உரியோடு சீதை நின்றாள். எதிரே கண்ணாடியில் பொன் வண்ண ரேக்கின் மான் உரு பாய்ந்து கொண்டிருக்க சீதை அது எனக்கு வேண்டுமென்றாள். லக்ஷ்மணன் வியந்து நின்று கொண்டிருக்கிறான். மாயமானை உற்றுப் பார்த்தபடி கண்ணாடியில் மைவண்ணமெழுதி மீனாக்ஷி ராஜூவின் கைகளில் செதுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. மற்றபடி அந்த ஸ்டுடியோ அறை கலாபூர்வமான இருளில் ஆழ்ந்திருந்தது.

"யாரது?" என்றார் மீனாக்ஷி ராஜூ. அவர் ஓவியம் செதுக்கத் துணையாக இருளில் நின்றிருந்த ஆறு மாணவியர்கள் தங்கள் கையில் வைத்திருந்த தங்க ரேக்கு, பொற்சரிகை, வைரக் கற்கள், அவற்றை இணைக்க உதவும் ரகசியமான பசை ஆகியவற்றை யாரும் உத்தரவிடாமலேயே பக்கத்திலிருந்த அலமாரிகளில் வைத்து விட்டு அமைதியாக வெளியேறினர். நீண்ட துவாலைத் துண்டின்மூலம் தன் முகம், கைகளைத் துடைத்துக் கொண்டு அலுமினிய ஏணியைத் திருப்ப, அது தானாகவே கொஞ்சம் கொஞ்சமாக ஒரு சிறு இயந்திரச் சப்தத்துடன் தானாகவே சுருங்கி கீழிறங்கியது. இப்போது அது ஒரு நாற்காலிபோல் உருக்கொண்டது. அதே நேரத்தில் வேறு புறம் ஃப்ளஷ்டோர் ஒன்று திறந்துகொள்ள சரளா உள்ளே அலைபோல் நுழைந்தாள்.

"ஏமிரா தீ! மள்ளி வெறிபெட்டிக்கிந்தா! கர்மம்–காலேது. கர்மம் கர்மம்" மீனாக்ஷி ராஜூ தலையில் அடித்துக் கொண்டார்.

"சரளா ஏம்மா தீ. மரீ கஷ்டம். பணத்தக் குடுத்துடேன். என்ன பண்றது? இதே தொல்லையாய் போச்சு"

"நோ. இப்பக் குடுத்தீங்கன்னா நாளைக்கும் குடுக்கணும். குடுத்துக்கிட்டே இருக்கணும். அதுக்கு ஒரு முடிவே இருக்காது"

"சரி, நீங்க எல்லாம் போங்க. எங் கொழந்தை என்னோட பேசட்டும். தனியா பேசட்டும். எனக்கும் பேசணும். இனிமே பேசித்தான் ஆகணும். எல்லாம் போங்க" மீனாக்ஷி ராஜூ ஒவ்வொரு வார்த்தையாகச் சொல்லி உதிர்த்து விட்டு சரளாவைப் பார்த்தார். கீழே உட்கார்ந்து பக்கத்தறையில் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் எல்லாரும் இந்தக் குரலைக் கேட்டு எழுந்து போனார்கள். ராஜா ஜவான் மெதுவாக ஃப்ளஷ் டோரைத் தள்ளி வெளியே போனான். சரளா மெல்ல ஓரமாக நகர்ந்து அங்கிருந்த நூக்க மர மேஜை ஒன்றை சாய்த்து ஒரு காலை மடக்கி அங்கேயே நின்றாள். ஒரு கோயிற் சிற்பத்தை அப்படியே அவன்

நினைவில் கொண்டு வந்தாள். பெண்களே எப்போதும் இப்படி அழகுதான். அழகில்லாவிட்டாலும்கூட—என்று தோன்றியது பரந்தாம ராஜூவுக்கு. அவளை வெளியே போகச் சொல்ல அந்த ரெண்டு பேராலேயும் கூடாமல் போனதென்னவோ இருவருக்குமே பிடித்தது. அப்பாவும் மகனும் ரசிகர்களல்லவா! அவளும் அழுத்தக்காரி. இத்தனை நாளும், இத்தனை வருஷங்களும் அவள் அவனுக்கு புதிதாக இருக்கவில்லை. இப்போது அவனை அவள் வைத்திருக்கிறாளாமே! பெண்கள் ஆழமானவர்கள் என்பார்கள். இப்படியா வெட்ட வெளிச்சமாக இருப்பார்கள்!

"ஏன்னடா. என்ன நெனச்சுக்கிட்ருக்க? தண்டம் இன்னும் என்னென்ன பாவத்துக்கெல்லாம் என்ன ஆளாக்கணும்னு நெனச்சுக்கிட்ருக்க? பாவி. பணமென்ன விளையுதா? ரோட்ல நாய் மாதிரி திரியிறது—கன்னாபின்னான்னு குடிக்கிறது. தெருத்தெருவா சுத்துறது. பணத்த வாரிவிட்றது, பணந்தீந்தா நேர இஞ்ச வர்றது—பணங் குடுங்கறது. சத்தம் போட்றது, ஏன்டா இங்க என்ன கொட்டியா வெச்சிருக்கு? ஏமி மீபனி மீகே சரிகா உந்த்தினா?"—மீனாக்ஷி ராஜூவின் குரல் லேசாகத் தளுதளுத்தது. தரையில் இருந்து மெதுவாக எழுந்த பரந்தாம ராஜூ மெதுவாக சிரித்தான். சிரித்தபடியே எழுந்து அவரை நோக்கி நடந்து வந்தான்.

மீனாக்ஷி ராஜூ அருகில் இருந்த ஒரு சுழல் நாற்காலியில் அமர்ந்து கொண்டு மேஜையில் வைத்திருந்த அவரது புராதன பூர்வீகச் சொத்தான அந்த ஃபைலைப் புரட்டினார். மஞ்சள் நிறமாக மக்கிப்போன பட்டர் பேப்பர் மடிப்புகள் நிறைய அதில் அடுக்கப்பட்டிருந்தன. மீனாக்ஷி ராஜூவின் கலைப் பொக்கிஷமே அதுதான். மீனாக்ஷி ராஜூவின் கலைகளுக்கெல்லாம் மூலம் அந்த ஃபைல்தான். பரந்தாம ராஜூவுக்கு அது தெரியும். இந்த மாதிரிகளிலிருந்துதான் மீனாக்ஷி ராஜூ தன் ஓவிய சிற்பங்களைப் பண்ணுகிறார். பெரும்பாலும் வேலையில்லாத நேரங்களிலெல்லாம் இந்த ட்ரேஸிங் பேப்பர்களைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தால்போதும் கற்பனை ஊற்றெடுத்துப் பெருகும் அவருக்கு.

"என்ன கலைஞரே! கலை உபாஸனை ஆரம்பிச்சாச்சா? ஒரு கோடுகூட சுயமா உங்களால போடமுடியாது. நீங்க வரையிற சிதைக்கு ஆபரணம் பூட்டி வுட்றது எங்க தாத்தா சித்தா ராமராஜூ. சிதைக்கு பவுன் ரேக்கால காட்ல மருரி கட்டி உட்றது என்னோட பூட்டன் அப்பாள் ராஜூ. ராமனுக்கு, ராமனோட ஒடம்பு நீல வண்ணமா மரகதத்தால இழைச்சுவிட்டது எங்க பாட்டனுக்குப்

பாட்டன். ஏதோ ஒரு ராஜூ. கடைசில ஃப்ரான்ஸ்ல க்ராஃப்ட் எக்ஸிபிஷன்ல அஞ்சு லக்ஷம், பத்து லக்ஷம்னு படத்த விக்கிறது எங்கப்பா மீனாக்ஷி ராஜூ. தெருவுல பொறுக்கிக்கிட்டு ஏம் பொறந்தோம்னு மண்டையக் கொடஞ்சிகிட்டு காசுக்குப் பொறுக்குறது பரந்தாம ராஜூங்கற நான். இதுக்கு ஆளவுட்டு அடிக்கிறது அடியாள் வேற உனக்கு. நீயெல்லாம் கலைஞன். ஒரு மனுஷன் சொந்தமா ஒரு கட்க்ளாஸ் பெய்ன்டிங் பண்ணேன் பாப்போம். ப்ரஷ்ஷ எடுத்து வளையாம கொள்ளாம நேரா ஒரு கோடு போட்டுக்காமி பாக்கறேன். நீயெல்லாம் ஒரு ஆர்ட்டிஸ்ட் ஓனக்கு ஒரு செக்ரட்ரி சரளா முண்ட...”

“டேய், டேய், டேய்... டேய் நிறுத்துறா. சொந்தமா ஒரு வேலை செய்யத் துப்புல்ல. நாலு காசு சம்பாரிக்கறதுக்கு வழி கெடயாது. அந்தப் பொண்ணு லல்லு குட்டிய வேற கெடுத்து வச்சுருக்க. வெக்கங்கெட்ட பயலே. எனக்கு முன்னால நின்னு பேச பயப்பட்ற பயலுகள்ளாம் எனக்குப்பின்னால நின்னு சிரிக்க வச்சுட்டியேடா. கண்ணு மண்ணு தெரியாம கஞ்சா அடிச்சுப்புட்டு எந்த சாக்கடைலயாவது வுளுந்து கெடக்குறது ஏன்டா. என்ன சொந்தமா வரையச் சொல்றியேடா. நான் ஏன் வேண்டான்னு சொல்லப் போறேன்? நீ சொல்றா மாதிரியே சொந்தமா ஒரு படம் வரைஞ்சு காமி பாக்கலாம். நீயுந்தான் சொல்ற பணம் கேக்க வர்றப்பல்லாம். நீ என்னத்தக் கிளிச்சுப்புட்டன்னு. ஏனுடா? கலைஞன் கலைஞன்ங்கிறியே எங்கேருந்துடா லேய் கத்துக்கட்டீங்க இந்த வார்த்தைய? காசுக்குப் பொறுக்க வர்ற பயலுக. வாய் சவடாலுக்குக் குறைச்சல் இல்ல. கலைஞ் சனாம். கலைஞ்சன். நாம் போகாத ஊராடா? நாம் பார்க்காத கலைஞ்சனாடா? ஓரேய்! பேரு பெத்த பேரு. தாகதானிக்கு நீளு லேதும் பாங்க! தெரியுமாடா? என்னப் பாத்தாக் கேக்கற கோடு போடுன்னு. லேய்–மூஞ்சி பாக்கற கண்ணாடிய ஓம் முன்னாடி தூக்கிப் போடுறேன். ஒடைஞ்ச சில்லெடுத்து ஒரு உருவம் வட்டமா ஒட்டுடா பாக்கலாம். ஒன்ன மாதிரி எத்தன வெட்டிப் பயலப் பாத்துருக்கேன். நாயனா ஓனக்கும் படம் வரைய வரும். வருது. வரத்தாஞ் செய்யும். தானிக்கி காரணம் ஏமீ? ஏமீ தளிச்சுக்குனி உண்டவு அப்பம் பாட்டன் சொத்துறா. வளிவளியா நாங்க ஓங்களுக்குக் கொடுத்து ஓங்குளுது இல்லம்பீ! ஓங்களுது இல்ல, நீங்க படிச்சதும் இல்ல. கத்துக்கிட்டதுமில்ல. நாங்க காலங்காலமாச் சேத்த சொத்து. வாரிக் கொடுத்தது. தெரியுமில்ல? கோணா மாணான்னு நாலு கோட்ட போட்றது, நடுப்பூல சேப்பா எதினாச்சியும் தடவி வக்கிறது. கேட்டா

சூரியங்கிறது. ஞானக் கொளுந்துவளா. ஒங்களுக்கு மின்னாடியே பொறந்துட்டோமுடா, என்னயா கோடு போட்டுக் காட்டச் சொல்ற?" ஒரு கணம் அவரது பேச்சின் உஷ்ணத்தில் லயித்தான் பரந்தாம ராஜூ.

"வீண் பேச்செதுக்கு? ஒங்களுக்கு ஆயிரந் தடவை பதில் சொல்லியாச்சு. என்னக் கலைஞன்னு நீ ஒத்துக்க வேணாடம். நீ கலைஞனா இரு. அதுபோதும். வெளி நாட்டுக்கு வருஷா வருஷம் தூக்கிட்டுப் போற பாரு. ராமன் பொணம். சீத்தா பொணம். ஆலிலை கண்ணன் பொணம். அப்டீன்னு–இந்த செத்த சவத்தையெல்லாம் இன்னமும் எத்தனை காலத்துக்கு அவங்களும் வாங்கிக்கிட்டே இருப்பாங்கன்னு நெனைச்சுக்கிட்டுருக்க? இந்த பருப்பெல்லாம் ரொம்ப நாளைக்கி வேவாது. இந்தியாவுலருந்து போற கடைசி யோனி வரைக்கும் அவன் வாங்கத்தான் வாங்குவான். அது யோனீங்கறதுனால இல்ல. நீ சொன்னியே ஒப்பன் பாட்டன்னு அவங்க வெச்சுக்கிட்டிருந்த யோனி அது. ஃப்ரான்ஸ்காரன் ஒம்படத்தை வாங்கி பாங்க்ஆஃப் ஃப்ரான்ஸ், பேங்க் ஆஃப் அமெரிக்காவுல எல்லாம் வெச்சு ரூபா கொடுத்து வாங்கி அவனோட கட்டடத்துலல்லாம் அப்புடியே வெச்சுப் பதிச்சுக்கிறானே–அதெல்லாம் ஒன்னோட அபாரமான ஆர்ட்டுன்னு நெனைச்சுக்கிட்டு இருக்குறியா? இல்ல நைனா. இல்ல. நீ சொன்னியே–பாட்டன் பூட்டன்னுதுன்னு அதுக்காவத்தான் வாங்கறான். நீ வேண்ணாக் கீழ மீனாக்ஷி ராஜூன்னு பேர் போட்டுக்கலாம். இஞ்ச பலபயலுக அப்டித்தான் நெனைச்சுக்கிட்டிருக்கான். எவனாவது வெள்ளைக்காரன் 'ஆ'னுட்டாப்போதும், தலை கால் புரியாது. நீ போடற படமெல்லாம் வெட்டின ஒட்டுன கண்ணாடிச் சில்லுன்னு அவனுவளுக்குத் தெரியாம இல்ல. எல்லாம் வெறும் கிராஃப்ட் ஒர்க். என்னக் கண்ணாடி ஒட்டச் சொல்றீல்ல. நான் அதைக் கவிதைலேயே செய்வேன்யா. ஒனக்குக் கவிதை தெரியுமா? எங்க தாத்தன் பாட்டன் காலத்துலருந்து நீ கத்ததையெல்லாம் அப்டியே பத்தரமா வெச்சுக்கிட்ருக்க–ராஜபாளையத்துலேருந்து கொண்டாந்த சரளாவை வச்சுருக்கயே அது மாதிரி. என்னடாது, இப்டிச் சொல்றானேன்னு பாக்காத. அவள நீ வெச்சுக்கிட்ருக்கன்னு எல்லாருக்குந் தெரியும்"

"சீச்சீ...நீ நாயே. நாயக் குளுப்பாட்டி நடுப்புல வச்சா... வெளிய போடா... பணமுங் கெடையாது. மயிருங் கெடையாது. வெளிய போடா."

"ஆமா–அவ. இஞ்சதான் ஒக்காந்திருக்கா. அவ ஒன்ன மட்டுமில்லை, என்னையும் வெச்சருக்காளாம் சொல்றா. கேளு நீயே! இங்க நீ "வெச்சுருக்கேன்"னா ஒடனே தப்பா எடுத்துக்கிட்டு ஆ... ஊ... ன்னு கத்தாத. அவளுக்கென்னா வயசாச்சு? அவள இப்படியே வெச்சுருக்கியே–என்னாத்துக்கு? ஊறுகா போடறுதுக்கா? மாசம் பொறந்தா ஏளாயிரம் எட்டாயிரம்னு பணம் அனுப்புறா வூட்டுக்கு. நீ போற எடமெல்லாம் கூடவே படுக்க வெச்சுக்குற. தப்பா நெனைச்சுக்காத. படுக்குறது படுக்குறதுன்னா அவளுக்கும் ஒரு வயசு இருக்கு. ஒரு ஒடம்பு இருக்குன்னு நெனைச்சுப் பாத்துருக்கிறியா? அவ என்னியும் வெச்சுக்கிட்டிருக்கேன்னு சொல்றா. இதுக்கு அர்த்தந் தெரியுமா ஒனக்கு? நடராஜன், கிருஷ்ணன், படம் போடறேங்குற. எனக்குக் காசு குடுக்கறதுக்கு முடியாதுங்குற. நீங்க பண்றதெல்லாந் தப்புன்னு சொல்றதுக்கு இங்க யாரு இருக்கா என்னத் தவுர? வேற யாருஞ் சொல்ல முடியுமா? எனக்குப் பணங் குடுக்கணும்னா ஒனக்கு வலிக்குது. ஒன்னோட தப்பெல்லாம்... ஏன் ஒங்க பரம்பரை தப்பெல்லாமே எடுத்துச் சொல்றதுக்கு யார் இருக்கா?... ஒங்க சங்கீதம், ஸ்ருதிய ஒட்டி தன்னந்தனியா ஆயிரம் வருஷத்துக்கு முன்னால ஒரே ஒரு ரசிகனைத் தேடி ஆலோபனை பண்ணிக்கிட்டிருந்த மாதிரித்தான் இன்னமும் இருக்கும். ஒங்க இந்திய சாஸ்த்ர சங்கீதம் அதோட உன்னதமான பாரம்பரியத்துக்கு ஏத்த மாதிரி புதுசா சக்தியோட ஏதாவது கொடுத்துருக்கா? ஒங்க சில்பம்–கண்ணாடி ஒட்ற வேலையா மாறியிருக்கு. ஒங்க கட் க்ளாஸ் பெய்ன்ட்டிங், ஒங்க கர்னாடக சங்கீதம் மாதிரி ராமா, கிருஷ்ணான்னு பொலம்பிக்கிட்டுருக்கு. நீங்கல்லாம் இதப் புரிஞ்சுக்கல்ல. ஒங்க காலம் இப்டியேகூடப் போயிடலாம். ஆனா நீயுஞ் சரளாவும் ஒவ்வொரு வருஷமும் கொண்டு போய்க் கொண்டு போய் வித்துப்புட்டு வர்ரீங்களே கலை கலையின்னு–அதையெல்லாம் வெள்ளைக்காரனுவோ இன்னுங் கொஞ்ச நாள்ல அஞ்சேருந்து தூக்கி விட்டெறியப் போறானுக. ஒங்க சுயமில்லாத கலை, ஆத்மா இல்லாத சங்கீதம்–ஒங்களுடைய உருவம் நசிச்ச சில்பம்–ஒங்க காலத்தைக் காட்டாத ஓவியம் எல்லாம் குப்பைமேடா ஒங்க காலடியிலேயே குமியத்தான் போவுது. அந்த அவமானத்தப்பாக்க நீங்க இருக்க மாட்டீங்க நாங்க இருப்போம்."

"லேய் மேதாவி மாதிரிப் பேசுனா எல்லாஞ் சரியாயிரும்னு நெனைக்காத. நீயும் நானும் பேசுறது ஏதோ லாவணி பாடற மாதிரி இருக்கு. லொடலொடன்னு பேசுற. ஒரத்து நின்னு நாலு காசு சம்பாரிச்சு ஒங்காலல நீ நின்னா, எனக்குப் போதும். அத

வுட்டுட்டு சரளாவப் பத்தியும்–அவ ஆத்தாளப் பத்தியும் நீ பேச வேண்டிய தேவையில்லை. ஒன் வேலையைப் பாத்துட்டுப் போ. ஒரு மாசத்துல இரண்டாயிரம் மூவாயிரம்னு பணம் வாங்குற. ஒங்கம்மா செத்தப் பொறம் இன்னய வரைக்கும் நீ கேட்டதெல்லாம் நாஞ் செஞ்சுதான் இருக்கேன். இந்தக் கலை எளவெல்லாம் வாணாண்டா. ஒளுங்கா படிச்சுக்கிட்டு வா. பாஸ் பண்ணு. எனக்குத் தெரிஞ்சவன் எங்க பாத்தாலும் இருக்கான். எப்படியாவது கலைக்டராக்கி வுட்டுர்றேன்னேன். மாட்டேன்ன. டாக்டர ஆவுடான்னே. காசக் கொட்டி செலவு பண்ணி வெளிநாட்டுக்கு அனுப்பிப் படிக்க வக்யறேன்னேன். வாண்டான்னே. B.A படிக்கறேன்டான்னு போனே. ஒரு பிரயோஜனமும் இல்லாம ஒரு வேலைக்கும் போகமாட்டேன்ன. எங்காசையெல்லாங் கொட்டிக் கவுத்தே. கொஞ்சக் காசையா அளிச்சிருப்ப? கடேசீல நான் ஓவியம் வரையறேன்டான்னு ஆரம்பிச்சே. ஓவியக் கல்லூரில சேர்றேன்டான்னு போனே. அங்கியாவது படிச்சு முடிச்சியா? மூணாவது வருஷத்தோட ஓடி வந்த! மாடர்ன் ஆர்ட்டுடான்னு என்னத்தேயோ கிறுக்குன. எக்ஸிபிஷன் வெச்ச. ஒரு படத்த எவெனாவது வாங்குனானா? ஒரு படம் ம்... ஹூம் இருவது இருவத்தஞ்சு கேன்வாஸ்–கித்தான்–தோ நம்ம கோடவுன்ல கெடக்கு. நீ கிழிச்ச கிழி–ஓவியத்துக்குள்ளாற கவிதை எழுதறேன்னு ஆரம்பிச்சே–கொலாஜ் ஒர்க் பன்றேன்னு ஒனக்கென்னடா தெரியுங்குற? நயினாவுக்கு என்ன தெரியுமின்னு நெனெக்கிறயா நாயனா? மாடர்ன் ஆர்ட்டு போடு–வான்டாங்கல. நாலு பேருகிட்ட வியுயி பாக்கலாம். அட–விக்கெத்தான் முடியல–நாலு பேரு வந்து நல்லாருக்குன்னாவது சொல்றானா? புரியுதா அந்த நாலு பேருக்காவது? பெரிய கித்தான்ல பாதிப் படம் எளுத்து–கவிதெ ஓவியமுங்கெற. கேட்டா–எக்ஸிஸ் டென்ஷியலிஸம் கருமாதிங்கிற–ஒன்னோட லாவணியா? என்னால முடியாது. கடைசியா ஒண்ணு கேக்குறேன். உண்டு இல்லன்னு சொல்லிப்புடு. பேசிப்பேசி ஒன்னோட மாரடிக்க என்னால முடியாது”

“என்ன கேக்கப் போற? நாஞ் செறச்சுகிட்டு ஒழுங்கா இருக்கணும். அதான.”

“நான் என்ன சொன்னாலும் நீ திருந்தப் போறதில்ல. இந்த மாடர்ன் ஆர்ட்டு, கவிதெ, அது இதுன்னு இதக் கட்டிக்கிட்டுதாங் கெடக்கப் போற. அதுனால ஒன்னய என்னால மாத்த முடியாது. எனக்கு நல்லாத் தெரியும். அதே மாதிரி இனிமே நானும் மாறமுடியாது. மாற மாட்டேன். ஆனா நாஞ் சேத்து வச்சுருக்றதெல்லாம் ஜாஸ்திதான்னாலும் பத்தே வருஷத்துல

அத்தனையும் அள்ளித் தூத்திப்புட்டு மண்ணுல எறெங்கிடுவ. எனக்கு ஒன்ன மாதிரி கலை கிலைன்னு ஒளற முடியாது. இன்னும் மிஞ்சிப்போனா ரெண்டு மூணு வருஷம். அதுகப்புறம் என்னால வேலை செய்ய முடியாது. இப்போ இந்தத் தொழிலுக்குப் போட்டியும் நெறைய வந்திருச்சு. எனக்கப்புறம் எந்தொழில நீ காப்பாத்தாட்டியும் அது நின்னுக்கும். அந்த அளவுக்கு அதெ நான் வளத்துருக்கேன். சரளாவுக்குப் படம் வரையத் தெரியாட்டியும்கூட அவ இந்த மாதிரிப் படத்தையெல்லாம் நல்லாவே மார்க்கெட் பண்ணுவா. வெறுங் கித்தானக் குடுத்தீன்னாலும் அதையும் வித்துப்புடுவா. நீ நெனைச்சா உன் கைவாவுக்கு என்னோட வேலைய நீயே சொன்ன மாதிரி ஆர்ட்டாவே பண்ணியோ இல்ல அப்பம் பாட்டன் வேலையையோ அப்பிடியே ட்ரேஸ் எடுத்து பண்ணியோ வித்துக்கிட்டேயிருக்கலாம். ஒங்கம்மா லோசனம் ஒன்ன எங்கைல ஒப்படைச்சுட்டுப்போனது ஒன்னத் தெருவுல திரிய வுட்றதுக்காடா? இல்லடா நாயனா இல்ல! உன்னப் பட்டினாயப் பாக்கணுமா நானு. என்னக் கலைஞன் இல்லேன்ன. நாங் கலைஞன் இல்லதான்டா. நாங் கலைஞனாருந்தா ஒன்ன ஒரு ஓவியம் மாதிரி வரைஞ்செடுத்திருக்க மாட்டேனா? நாங் கலைஞன் இல்லதான். ஆனா எனக்கப்புறம் நீ தெருவுல அலையக் கூடாது. எந்தக் கலை எப்புடிப்போனா ஒனக்கென்னடா? சரளாவ ராஜபாளையத்துலருந்து பெத்த நாயனா அழச்சுட்டு வந்தப்பவே ஒரு திட்டத்தோடதான் கொண்டு வந்துவிட்டார். அவரு எங்கிட்ட வாய் தொறந்து சொல்லல்ல. ஒருவேளை சாப்பாட்டுக்கு லாட்ரி அடிச்ச குடும்பத்துல ஏழாவதோ-எட்டாவதோவா குட்டி போட்டவ சரளா. நம்ப வூட்டுக்கு அவ வரும்போது வாயில்லாப்பூச்சி. இப்பத் தன்னந்தனியா ஏன் ஃபிரான்ஸ்ல அவள வேலைக்கிக் கூப்பிடறாங்க. நான் வாண்டான்னு நிறுத்தி வச்சேன். எதுக்கு நாயனா எதுக்கு? நல்லா யோசிச்சுப் பாரு. நான் என்னா சொல்றேன்னு புரியுதா?"

"வாண்டாம் பாவா. நிறுத்துங்க. அதோட. அதுக்கு மேல பேசாதீங்க. ஒங்க கால்ல வுழவுறேன். அதுக்கு மேல ஒரு வார்த்தையும் பேசக்கூடாது. நான் எப்பிடி வந்தேனோ அப்படியே போய்க்குவேன். ஆனா ஒங்க ரெண்டு பேரையும் விட்டுட்டு போயிடவே மாட்டேன். நான் யாரு? நாயி, வெறும் நாயி. தொங்க குக்கா. மரீ எமீ! நீங்க இருக்குற வரைக்கும் என்னோட வேலையெ நாஞ் செய்வேன். அப்புறமும் செஞ்சுகிட்டே இருப்பேன் இது சங்கிலீல கட்டாத நாயி. அவ்வளவுதான். சங்கிலி இல்லாமலேயே இது கட்டிக் கிடக்கும. எனக்காக நீங்க பட்ட கஷ்டம் போதும்"

சரளா அழுதாள். அவள் அழுது அவர்கள் இருவரும் திகைத்து நிற்பது இதுவே முதல் முறை. எப்போதும் ஆக்ரோஷமான பெண்ணாகத்தான் பரந்தாமராஜூவுக்கு அவள் பழக்கம். ஓரிரு முறை அவனிடம் அடி வாங்கியபோதும், சீறும் பாம்பாகவே அவனுக்கு அவளைத் தெரியும். ஆரம்பத்தில் அவள் மிகப் பயந்த பெண்ணாக மீனாக்ஷி ராஜூவுக்கு அறிமுகமானதிலிருந்து இன்று மீனாக்ஷி ராஜூவுக்கு எல்லாவற்றுக்கும் மூலமான இந்த நாள் வரை அவள் எதற்காகவும் அழுது அவர் பார்த்ததில்லை. மீனாக்ஷி ராஜூவும் பரந்தாம ராஜூவும் ஒரே புள்ளியில் இணைந்ததுபோல் திகைத்து நின்றார்கள். அந்த அறையில் சூழ்ந்து நின்ற மௌனம் நீண்ட நேரம் பேசியதின்பின் ஓர் ஓசையாகவே அவர்களைப் பயமுறுத்தியது. குனிந்து வெட்கமுற்று அழுது கொண்டிருந்த சரளாவின் சின்னஞ்சிறு அசைவுகள் யாருக்காகவோ காத்து நின்றதுபோல் பரந்தாமராஜூவுக்கு தோன்றியது. எப்போதும் சிகரெட் குடிக்கும் வழக்கமில்லாத மீனாக்ஷி ராஜூ நீண்ட கண்ணாடி அலமாரியைத் திறந்து அதிலிருந்து 'வெர்ட்டர் ப்ரிட்' கிங்சைஸ் ஃப்ரென்ச் சிகரெட் ஒன்றை உருவி–அந்த ஐம்பது சிகரெட்களிலிருந்து ஒற்றை சிகரெட்டை வாயில் வைத்து நீல ஒளி கக்கிய சிகரெட் லைட்டரால் ஏற்றினார். புகை சுருண்டெழுந்தது. பரந்தாமராஜூ அங்கே அதிகப் பற்றாய் நின்றான்.

சரளா–அழுகையிலிருந்து விடுபெற அவன் என்ன செய்ய வேண்டும்? அவர்தான் என்ன செய்ய வேண்டும்? பரந்தாம ராஜூ திகைத்தான். அவனது போதை மீண்டும் அடியோடு தெளிந்திருந்தது. அது போதையே அல்ல. அதுதான் நிஜம். வாழ்வதுதான் போதை. இத்தனை பேரும் ஏன் அவன்மீது வலிந்து இப்படி நெருங்கி அவனை ஆட்கொள்ள நினைக்கிறார்கள்? எப்பேர்ப்பட்ட அதிர்ஷ்டம்? அவனிடம் இத்தனை கொடூரமான அன்பு வைத்திருக்கும் இவர்கள் எல்லாரிடமிருந்தும் எப்படி அவன் தப்பிப்பான்? அவர்கள் கேட்கிற எதையும் அவனால் தரமுடியாததை அவன் எப்படிச் சொல்லமுடியும்? இந்த உறவுகளின் பொய்மையை அறியாததே அந்த உறவுகளின் காரணம் என்பது எப்படி இவர்களுக்குப் புரியப் போகிறது?

சரளா நீ ஒரு பெண் மட்டுமல்ல என்பது உனக்கெப்படித் தெரியாமல் போயிற்று? கடைசியில் அழுது நீயும் பெண்தான் என்று சாதிக்கப் போகிறாயா? நாயனா–உங்களை முன்னமே அவள் வீழ்த்தியிருக்கலாமே! முன்னமே அவளை உங்கள் வியாபாரத்துக்குத் தேர்ந்ததுபோல் பதினெட்டாவது வயசிலேயே

அவளுக்கு நீங்கள் கொடுத்திருக்கலாமே! எத்தனை முகமூடிகள்! எத்தனை வேஷங்கள்! இதெல்லாம் என்ன? என்னை மூளையில் கட்டியடிக்கப் பார்க்கிற இன்னொரு சாகஸம்.

சரளா ஏன் அழுகிறாள்? அழ என்ன இருக்கிறது? தெருப் பொறுக்கியாய், குடிகாரனாய் நீங்களெல்லாம் வெறுக்கிற அழுக்குக் குப்பையாய்ச் சாலையோரத்துப் புழுதிமேடுகளில், சாக்கடை ஓரத்து நரகலில் ஒதுங்கிக் கொண்டிருக்கும் என்னைத் தேர்ந்து கொள்ளும் நீங்களும் சரளாவும்–உங்கள் முகமூடிகள் கிழிந்து அவமானப் படப்போவது நிச்சயம். வாழ்க்கை யாரையும் விட்டு வைக்காது. விட்டு வைக்கப் போவதில்லை. ஏற்றமும் தாழ்ச்சியும் அதன் நியதி. வளர்ச்சியும் வீழ்ச்சியும் அதன் கதி. தான் மட்டும் தப்பித்துக் கொள்ளப் பார்க்கும் ஒவ்வொருவனும் எப்போதும் ஒரே நிலையில் இருக்கப் பார்க்கும் ஞானியும் அபத்தக் களஞ்சியங்களாய் நின்று போவதே இதன் கோரம். இவற்றை நான் யாருக்குச் சொல்லுவேன்? லல்லூ–உனக்குப் புரியாதது இவர்களுக்குப் புரிந்து விடுமா? இருப்பின் இயல்பில் இருக்கும் வரை தெரியாது இறப்புக்குத் துரிதமாவது எத்தனை முட்டாள்தனம்? இங்கே எது நிலைக்கப் போகிறது? எந்த ஓவியம், எந்தக் கவிதை, எந்தச் சிற்பம், சங்கீதத்தின் எந்தத் த்வனி, இதைக் கடந்துவிடப் போகிறது! அம்மா! நன்னு கன்னதல்லீ! மீரு எக்கட உண்ட்டாரு. சொப்பம்மா! வெளித்துரு குபிஞ்சம்மா! நா சீங்கட்டிப் போலேதே!! ஆ சீங்கட்டி... ஆ... வெளுத்து ஈ வெளுத்துரு ஆறிப்போயிஞ்சிண்ட்ட சீங்கட்டி போணு அந்த்தா நீங்கட்டிதா...

சரளா அழுது கொண்டிருந்தாள். மௌனமான அழுகை. சுற்றும் பார்த்தான் பரந்தாமராஜூ. கவனமாக ம்ருதுவான சப்தத்துடன் ஏங்கிக் கொண்டிருந்த அந்த அறையின் மூன்று ஏர்க்கண்டிஷனர்களும் மெதுவாக, பேரொலியாக, காது செவிடு படும்படியான ஆலையின் எந்திர ஓசையாக பரந்தாமராஜூவின் மேல் படர்ந்து இறுகியது. எதிரே அமைதியாகச் சுழன்ற சிகரெட்டின் நீலப் புகை மட்டும் நீல ஒளியில் பரந்தாம ராஜூவுக்குத் தெரிந்தது.

"நாயனா? மீரு எக்கட உண்ட்டாரு! மீரு எக்கட போயி உண்ட்டாரு!" தன்னந்தனியாக ஒலித்த அந்தப் பரந்தாமராஜூவின் குரல் அவள் உடலில் புகுந்து பயத்துடன் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது. அந்த அறையில் ஸ்டுடியோ ரூமில்–மீனாக்ஷி ராஜூ இல்லை என்பதைத் தன்னந்தனியே உணர்ந்தாள். பனிச்சென்று

நிமிர்ந்து தலையைத் தூக்கிப் பார்த்தாள். ஆம். அந்த அறையில் அவள் எதிரே வெகு அருகே பரந்தாம ராஜூதான் நின்று கொண்டிருந்தான். இருபது வருடமாக அவள் எதிர்பார்த்த அது அவள் முன்னே கோரமாக நின்றது. அவளைப் பலவீனமாக அடித்து சற்று முன் வீழ்த்திய அது இத்தனை வருஷங்களாக மிக அலட்சியமாக அதை மிதித்துத் தூர விலக்கி—எதைப் பழகி வந்தாளோ அது—அவள் எதிரே மஹாபூதமாய்—மஹா மேருவாய் அவள்மீது கவிந்தது. அவள் திமிறி எழுந்தாள். மறுபடியும் வீழ்த்த—மறுபடியும் அழ—மறுபடியும் சரிய அவள் தயாராய் இல்லை.

"பாவா—எக்கட போயி உண்ட்டாரு! பாவா—பாவா பாவா... அவள் பாவா அங்கில்லை. அவள் மேல் கவிந்த அந்தப் பரிவான இருட்டை—சாராய நெடியை—வியர்வைல நாற்றத்தை—அழுக்கை—அந்த கணத்தில் வாழும் பரந்தாம ராஜூவை—குமட்டல் எடுக்கும் அருவருக்கும் துடிப்போடு உந்தித் தள்ளிப் புரட்டிவிட வேண்டும் என்று எழுந்த அவள்... அது எப்படி நேர்ந்தது? அவளே அந்த நச்சைக் கவ்வினாள்—சுத்தமானாள்—ஃபாரீஸ் சென்டின் ஆவி பறக்கும் அவளது உடம்பு அந்த சாக்கடையில் எப்படி அமிழ்ந்தது? அவள் உந்தித் தள்ளிய அந்த அழுக்கு உருண்டையை அவளே எப்படி விழுங்கினாள்? அவளது புடவை—அவளது கைகள்—அவளது கால்கள்—அவளது நெஞ்சு—மூச்சு—உயிர்—எல்லாம் எப்படி அவளையே வஞ்சித்தன? சரளா உன்னையே வெட்டி நீ எப்படி பலி கொடுத்தாய்?

பரந்தாம ராஜூ அவளை நெருங்காமலேயே அவளில் சிக்கிச் சீரழிந்தான். மூன்று நிமிஷங்கள் யார் தோற்றார்களோ? யாருக்குத் தெரியும்? அவளே எழுந்து அவனை இறுகத் தழுவிக் கொள்வாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. மற்றெல்லாவற்றையும் வென்று விடும் இவள்கள் தங்களை வெல்லமுடியாமல் இருட்டடித்து விடும் ஏதோ ஒரு கணம்—எல்லோருக்கும் நேருகிறதே! அது தனக்கு மட்டும் இல்லையா?

பரந்தாமராஜூ இது உனக்கில்லையா?

நீயாகவே மயங்கி உன்னை எப்போதும் இழக்க மாட்டாயா?

உன்னை இழக்கும் ரஸாயனம் உன்னிடம் இல்லையா?

அழுக்குப் புரண்ட அவன் கரங்களில்—அவன் மார்பில்—இன்னும் பதிந்திருந்த சரளாவின் வியர்வை—அவனை நினைவூட்டியது.

சங்கிலிபோல் அவனைப் பிணைந்திருந்த சரளாவின் கைகளை அவன்தான் பிரித்தெடுக்க வேண்டியிருந்தது.

அவளை விலக்கியதும் அவன்தான்.

சதையை வெட்டிப் பிரித்ததுபோல் அவள் முகம்–மார்பு–தோள்கள்–எங்கும் அவன் மேனியின் செம்மண் புழுதி வரையிட்டிருந்தது.

மீனாக்ஷி ராஜூ இன்னும் வரவில்லை. வேண்டுமென்று தானா? போதும் போதும்...

வலையிலிருந்து காலைக் கழற்றியாயிற்று

வலை வானத்தில் பறக்கும் நேரம் வரும்

ஏர்க்கண்டிஷனர்கள் உறுமின. நீல வெளிச்சம், அதற்குள்ளே இருட்டைச் சுருட்டியது. விஷ நீலம். லல்லுவிடமிருந்தும்–பாபியிடமிருந்தும்–ஜம்னாவிடமிருந்தும் அவன் கற்றது வீண் போகாது. வலை மேலே சுழல்கிறது. அவன் வெளியேறினான்.

ஸ்டுடியோ அறை அவனை வெளியே பிதுக்கியது.

மாணவர்களின் பயிற்சிக்கூடம் அவனை முன் தள்ளியது.

எங்கும் யாரையும் காணோம். இவர்களெல்லாம் எங்கே? நாயனா எங்கே? நாலாபுறமும் திறந்து கிடந்த கதவுகள் அந்த வெயில் வேளையிலும் எங்கோ பெய்து கொண்டிருந்த மழையின் குளிர் காற்றை அள்ளிக் கொண்டு வந்து சொரிந்தன. மேனியெங்கும் மழையின் குளிர்ச்சி சில்லென்று குளிர்ந்தது.

ஆஃபீஸ் அறைக்குள் நுழைந்து சாவி தொங்கி ஆடிக் கொண்டிருந்த இரும்புப் பெட்டகத்தின் இரு கதவுகளையும் திறந்து நின்றபோது அங்கே யாருமில்லை. நோட்டுக் கற்றைகளை எடுத்து பையில் திணித்துக் கொண்டபோதுதான் தெரிந்தது–அவன் முதுகுக்குபின்னால் மீண்டும் சரளா.

நாலாபுறமும் விரிந்த கதவுகளின் வழியே மீண்டும் மழைச் சூறை காய்ந்த இலைகளும், சருகுகளும், சுழன்று தடுக்கமுடியாமல் ஆவேசத்துடன் அந்த முன்னறையைக் கலக்கின.

மரங்கள் வெளியில் பேயாட்டம் ஆடின.

புல்லின் இதழ்கள் புழுதியில் அமுங்கி நிமிர்ந்தன.

வாசலில் கார் ஒன்று வந்து நின்றது.

அதே நேரத்தில் ஆஃபீஸ் அறையில் பரந்தாம ராஜூவை மீண்டும் மீண்டும் அவள் கேட்ட அதே பழைய கேள்வியை பாம்புகளாக்கி அவள் உதடுகளைக் கொத்திக் கொண்டிருந்தாள் சரளா.

மறுபடியும் அதே பதில்தான். பரந்தாமராஜூவால் சொல்ல முடிந்தது. அவன் அவளைப் புறங்கையால் தள்ளி தனது தலையைக் கோதியவாறே வாசற்படி அருகிலேயே போய் எதிரே காரிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்த மீனாக்ஷி ராஜூவைத் திரும்பியும் பார்க்காமல் ஒருவழியாக ஒதுக்கியதுபோல் கையிலிருந்த கஞ்சா பீடியை முழுங்கியபடியே பொசுங்கல் நாற்றத்தோடு போதையுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டே ரயில்வே லைனோடு மறுபடியும் தள்ளாடிக் குப்புற விழுந்து கக்கி இருமிச் செருமிக் காறித் துப்பியபடி பரந்தாமராஜூ. தூரத்தில் நின்று அவனைப் பார்த்து கண்கள் கசிந்து மீனாக்ஷி ராஜூ மெல்ல திரும்பித் தன் மாளிகையைப் பார்த்தபோது அங்கே அவரை நோக்கி–இல்லை–தண்டவாளத்தில் தடுமாறிப் போய்க் கொண்டிருக்கும் பரந்தாமராஜூவைப் பார்த்துத் தடுமாறிக் கொண்டிருந்த சரளாவை அவரால் தடுமாற்றம் இல்லாமல்–பார்க்க முடியவில்லை.

# 4

வெகுநேரத்துக்கு முன்பு வந்து சேர்ந்து விட்டிருந்தான் பரந்தாம ராஜூ எங்கே? அவனுக்குப் புகல் எங்கே? இனி அவன் புகல் எங்கே? மறுபடியும் ஐயன் கடை வீதி வழியாக அரண்மனைக்குள் சந்து வழியாக வந்து சேர்ந்துவிட்டான். எதிரேகூட கோபுரம், பாசி பிடித்த கறுப்பில் அவனை அழைத்தது. இடிபாடுகளின் வழியே மராட்டியர்களின் அந்தப்புரம் போகும் இருண்ட பாதையில் நடந்தபோது அவனை ஏனென்று கேட்க நாதி யாருமில்லை. அவனுக்கே பழக்கமாகிவிட்ட வௌவால் பீயின் வாசனை. புழக்கத்தால் கால்கள்போல் இடித்த சுவர்களின் வழியே ஏறி பள்ளத்தில் இறங்கியபோது அந்த மாலை வெயிலில் பாபியின் முடுக்கு தெரிந்தது. சுவரோரமாகப் பித்தளைக் கங்காளங்கள், காலையில் திறந்திருந்த எட்டாள் உயரக் கதவு. இப்போது ஒருக்களித்திருந்தது. பாபி வந்துவிட்டாளா? யாரிடமாவது கேட்கலாமா? அவனுக்கு மராட்டி தெரியாது. ஜம்னாவைக் கூப்பிடலாம்தான். பீடிக்குக் கங்கு வேண்டும். வேறு யாராவது வந்து அடித்துத் துரத்தினால்? இந்த அரண்மனையின் பாதைகளே விசித்ரமானவை. முஸ்லிம்களுக்குப் பயந்த மராட்டியர்கள் தப்பித்து ஓடப் பல வழிகள் கட்டியது போல சிக்கலுற்று வழி தெரியாமல் நிற்கும்படியாக சூத்திரப் பாதைகளையும், முடிவில்லாத திருக்கு

வழிகளையும் கட்டியிருந்தார்கள். அது இந்தக் காலத்துக்கு ரொம்ப வசதியாய்ப் போயிற்று. ஒவ்வொரு மூலையிலும் அரண்மனையைச் சார்ந்த மராட்டியர்கள், மூலைகளையும் முடுக்குகளையும் வாழ்வதற்கான தாமஸ ஸ்தலங்களாக ஆக்கிவிட்டனர். எங்கேயும் யாரையும் பார்க்க முடியாது. சுற்றிச் சுற்றி எங்கோ போகும் பாதைகள்–கடைசியில் ஏதாவதொரு மராட்டிய வீடாய்முடியும். ஒரு வேளை இந்த முடுக்கு பாபியின் வீடாக இல்லாமல் இருக்கலாம்.

“ஜம்னா–அரேய் ஜம்னா” அவனறியாமல் அவன் அழைத்தான். தெரிந்து செய்ததில்லை. அறியாமல் வாயில் வந்தது. பாபிதான் சொல்லியிருக்கிறாளே? நான்தான் ஜம்னா. ஜம்னாதான் நான் உள்ளே இருந்து இருட்டில் ஏதோ பெண்களின் பேச்சுக்குரல். உள்ளே இருந்து சதங்கை சப்தம். பாபியில்லை. ஜம்னாதான். குளித்திருந்தாள். கால்களைத் தொட்ட கூந்தல். அளவுக்கு அதிகமான மஞ்சளின் பூச்சு. முகம் தங்கம் மாதிரி மஞ்சளில் ஒருவித செம்மை கலந்த அற்புதமாய் இருந்தாள். அவளைக் காலையில் சரியாகப் பார்க்கவில்லை. இவ்வளவு நீளக் கூந்தலுடன் அவனை நோக்கி, அவள் பாய்ந்து வந்தது போலிருந்தது. கொஞ்சம் அதிகமாவே நீண்ட கண்கள்தான். அளவுக்கு அதிகமாகவே மையும் பூசியிருந்தாள். அவள் அழகாக இல்லை. வேண்டியவளாக இருந்தாள். அவன் அனுமதிக்காகக் காத்து இருந்ததுதான் அவனுக்கு ரொம்பவும் உகந்ததாக இருந்தது. கண்களில் மிரட்சியோ பயமோ செய்கைகளில் படபடப்போ பதஷ்டமோ ஏதுமில்லை. நீ வேலை சொல்! செய்வேன் என்கிற பணிவு மட்டும்.

“ஆயே ஆயேனா, காலேல சொல்லாம்ப் போய்ட்டீங்கோ பதினோரு மணி வரைக்கும் வர்வீங்கோன்னு காத்திட்ருந்தேன். மத்யானம் மூணு மணி வரைக்கும் கானாவச்சுக்கிட்டுக் காத்துக்கிட்டிருந்தேன். பாபி வந்தா என்னைத் திட்டப் போவுது. நீங்கோ புட்ச்சது கை போச்சு. இந்தோ பாத்தீங்களா”

அவன் பழக்கம் அன்று காலையில்தான். ஆனால் அவள் பேச்சு பாபியின் பாடம்.

பாபியின் அச்சு. சாகஸம். இதை எங்கிருந்து இவர்கள் கற்கிறார்கள்? இதைத்தான் உலகம் பயப்படுகிறது. பாபியின் வாழ்க்கை ஜம்னாவுடையது அல்ல. பாபிக்குத் தனி விலை உண்டு. ஜம்னாவுக்கு அது இல்லை. ஆனாலும் பாபியின் வேலைக்காரி–ஜம்னா.

பரந்தாம ராஜூ அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இனிமே இங்கே எங்க மராட்டியங்க வருவாங்கோ. மேல போயிட்றது நல்லது. மஹாலக்கு போயிட்றது நல்லது. இல்லேன்னா பாபி திட்டும் போலாமா? வாரீங்களா?"

அவளது அழைப்பும் பேச்சும் அவனை மயக்கியது. அதில் எந்த எதிர்பார்ப்பும் இல்லை. அவள் தன் வாழ்வின் எந்தப் பகுதியை நிரப்ப வந்திருக்கிறாள். யாரும் அவளைக் கையாள முடியும். அரண்மனைக்கு அவள் வந்த புதிதில் கேள்வி முறையே ஒன்றிருக்காது. மிகக்குறுகிய காலம். அவள் எல்லோருக்கும் ஆள், இந்த நினைப்பே பரந்தாமராஜூவை அரட்டியது. மெல்ல நடந்தான். படிக்கட்டின் மேல ஏறி அவள் பின்னே நடக்கும்போது ஏனோ அவன் மனம் ஒரு நிலையில் இல்லை. மறுபடியும் ஒரு கஞ்சாபீடியை பற்ற வைத்தான். படிகள் மேலேறின. அது ஒரு நூற்றாண்டுகள் கண்ட பழைய கட்டிடம். எங்கிருந்து தொடங்கி எங்கு போய் முடிகிறது என்று தெரியாத வாழ்க்கைபோல் இருண்ட அந்தப் படிக்கட்டு சுழன்று வளைந்து மேலேறிப் போய்க் கொண்டே இருந்தது. முன்னே போய்க் கொண்டிருந்த ஜம்னாவையும் காணோம். எதுவும் தெரியாத மையிருட்டு. படிக்கட்டில் ஏறிக் கொண்டிருந்தது ஒன்றுதான் பிரக்ஞையில் உந்தியது. இனி எங்கும் போவதாக இல்லை. இது என்ன காதலா? கல்யாணமா? வாழ்க்கையா? விலங்கா? கட்டிப் போட்ட கொட்டடியா? பாபியிடம் அப்படி என்ன நம்பிக்கை? இது மட்டும் நிரந்தரமா? இவள் மட்டும் முகமூடி இல்லாத பெண்ணா? ஒளிக்காமல் மறைக்காமல் அவனுக்காகவே வாழப் போகும் உன்னதமா?

சுழன்று மேலேறும் நூற்றுக்கணக்கான படிக்கட்டுகள்–நாற்பது பேர் ஒரே நேரத்தில் குதிரையிலேறி இந்தப் படிக்கட்டுகளின் வழியே மேல்தளத்துக்குப் போவார்களாமே?

உண்மையாக இருக்குமா? குதிரைகள் மனதில் பாய்ந்தன. படிக்கட்டுகளில் குதிரைகள் குளம்போசைகள் நினைக்கவே பயமாயிருந்தது. பாபியுடன் அவன் உறவும் இப்படித்தான். இந்த க்ஷணம் பூரணமான இந்த க்ஷணம் மட்டும். நாளை அது பற்றிக் கவலையில்லை. தெருப்புழுதி. நூற்றாண்டுகளாய் உதிரும் துணிப்படலம். அதற்கும் அவனுக்கும் என்ன வித்தியாசம்? கனவில் நனவும் அவனைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்று கொண்டிருந்தன. படிகள் மேலேறிக் கொண்டே இருந்தன. எல்லோரும் ஒவ்வொரு வேஷத்தில் அவன் முன் தோன்றினார்கள்.

இன்றைக்கு பாபி. நாளைய வேஷம் யாரோ? இன்றைக்கு மஹல், நாளைக்கு எந்த சாக்கடை? புழுதி–நூற்றாண்டு புழுதி–கவிதை–அரசியல்–தத்துவம்–சமதர்மம்–புழுதி–மீண்டும்–புழுதி–தனித்தனி புழுதி மேடுகள், எல்லோரும் கவலைப் படாதது பரந்தாம ராஜூவுக்கு மட்டும் ஏன் உறுத்த வேண்டும்? அவனுக்குத் தெரிந்தது மட்டும் மற்றவர்களுக்கு ஏன் உறைக்கவில்லை? சாப்பாடுபோதும். தீனிக் கம்பியிட்ட விலங்குகளுக்குள் சிக்கிய மனிதக் கூட்டம். மனிதச் சங்கிலி யோனிக்குள்ளிருந்து வெளிவரும் மறு யோனி. குறிக்குள் குறி. அர்த்த மூல சந்திரக் குறிக்குள் சொருகும் குறி... லிங்கர்... அம்மை... அம்மைக்குள் அப்பன்... அம்மை அப்பன்... திரிபாத கேஸ மூலாதி... சுடருக்குள் சுடரும் நீ... நான்... பிண்டம்... அண்டம்...

புரியாது–மறுபடி மறுபடிச் சுழன்றேறும் படிக்கட்டுகள்; இருளில் தன்னந்தனியாய் யாரோ ஒருத்தியின்பின்னால்–எப்போதும்போல் எவளோ ஒருத்தியின்பின்னால் முதலில் முலையுறிஞ்சும் பாலருந்தி பின்னால் பாலிழந்து முலையுறிஞ்சி த்ரிகோணத்தில் புகுந்து அர்த்த நாரீஸ்வரன் மங்கை பங்கனாய் ஒன்றுக்குள் ஒன்று பதியும். த்திரிகோணங்களில் எத்தனை முறை புனறபி... புனறபி... புனறபி...

வயிற்றில் எத்தனை முறை தூங்கி அங்கிருந்து படிக்கட்டுகளின் வழியே வெளியேறி எத்தனை முறை–எத்தனையெத்தனை முறை–படிக்கட்டுகள் ஏறி–படிக்கட்டுகள் இறங்கி–எத்தனை முறை? நான் பின்னர் நாங்கள் பின்னரும்... பின்னரும் நாங்கள் எனப் பிரிந்து மறுபடியும் படியிறங்கி அயராத நாற்றெட்டுத் த்ரிகோணங்கள் ஆயிரத்தெட்டுத் த்ரிகோணங்கள்–லக்ஷத்தெட்டுத் த்ரிகோணங்கள் கோடி அண்டம்...

புரியவில்லையா? ஏன் புரிய வேண்டும்.?

பரந்தாம ராஜூவுக்கு ஆத்திரம் பொங்கியது. முன்னே அவளின் கால் சதங்கை ஒலி. லோசனா! நன்னு கன்ன தல்லி! சிங்கட்டி வெளுத்துமு இயலேதே! மாயம்மா! படிக்கட்டுகள் விலகின. பளிச்சென்று மஹால்–வளைவு வளைவாக கமான்கள் பரந்தாம ராஜூவுக்கு திகைப்பாயில்லை, பயமாயிருந்தது. மஹால் வெறுமையாக இருந்தது. இதற்கு மேலே ஐந்து மஹால்கள் இருக்கின்றனவாம். ஒன்றின்மேல் ஒன்றாக இத்தனை மஹால்கள் எதற்கு? ஒரு த்ரிகோணத்தின்மேல் இன்னொன்று மனுஷி–மனிதன் ஒரு கோணம்–மற்றொன்று கூறு. பசி பசி என்கிறார்களே வயிற்றில் மட்டுமா எரிகிறது? உடல்–மனஸ்–புத்தி–சித்தம்–வயிறு–வயிறேயா? வயிறு–நெஞ்சு–மூளை–இடையிலிருப்பது உருவற்ற முக்கோணம்.

இலங்கையில்–அங்கோலாவில்–நாகஸாகி–கிழக்கு பெர்லினில் பிரிட்டோரியாவில்–காங்கோவில் எரியும் முக்கோணங்கள் எத்தனை? குப்புற நிறுத்திய பயனேட்டுகளை எத்தனை ஹெல்மெட்டுகள் கவிந்து மூடிக் கொண்டிருக்கின்றன? பக்கத்தில் பக்கத்தில் எத்தனை சிலுவைகள்? புதைக்கமுடியாத சிலுவைக் கூட்டம், ஈக்களைப்போல்–கிருமிகளைப்போல்–அனுதினமும் சடலங்களான எத்தனை முக்கோணங்கள்! நான் பரந்தாம ராஜூவா? இதையெல்லாம் என் ஓவியத்தில் சொல்லியாக வேண்டும்! நாளைய மனிதனே! உன் சுயநலத்தை ஏன் மறைக்கிறாய்? ‘உன் மனமிருக்கும் இடம் உனக்குத் தெரியும். வாழ்வதற்கு உனக்கு உள்ள காரணங்களைவிட சாவதற்குரிய காரணங்களே உன் கையில் அதிகமிருக்கிறது. என்னை முன்னழைத்துச் செல்லும் உன் யுகத்து வேதனைகளை இன்றே நான் அனுபவிக்கிறேன். என் செயலற்ற வருத்தம் உன்னை எட்டாதென்றே நீ நினைக்கிறாய்? யுக யுகாந்திரங்களுக்கு என்குரல் ஒலித்துக் கொண்டே இருக்கும். என் கலை–இதனையே பாடும், என் கவிதையின் வறுமை இதனையே பதிவு செய்யும். என் வேஷம் இதையே நிரூபிக்கும். நான் ஒரு உடலல்ல. ஒரு மனம் அல்ல, அந்தக் காரணம் ஒரே ஆத்மா. கேலி பேசாதே. பசியைக் காட்டி மிரட்டாதே. சோற்றைக் காட்டி மிதிக்காதே. நானும் நீயும் எந்த யுகத்திலும் ஒன்றே. ஒன்றிடும் ஒன்றே. கலந்திடும் ஒன்றே, பிரிந்து ஒன்றுக்குள் ஒன்றும் ஒன்றே... வெறும் மஹால் அச்சுறுத்தும் வெறுமை. சுற்றிலும் நாற்பதைம்பது கமான் வளைவுகள் அதைத் தாங்கி நிற்கும் சுதைவேலை கொண்ட தூண்கள். வெளியில் நீட்டிக் கொண்டிருக்கும் நாற்பது ஜன்னல்கள். நாயக்கர் காலத்துக் கட்டடம். முஸ்லிம் காலத்துச் சுவர் ஜன்னல்கள். இவ்வளவும், தஞ்சாவூரிலா இருக்கின்றேன்?” என்கின்றன. ஊர்–நாடு–தேசம்–பிரபஞ்சம்–அண்டம் எல்லாம் பிண்டத்தில் முடிபவை தானே? சோறு–அன்னம்–எல்லாம் உணவின் வடிவாய் வளர்ந்தவை தானே? எதிரே இருக்கும் ஜம்னா, நீ எப்போலேர்ந்து அரண்மனைல இருக்க. யாரு ஒன்னக் கொண்டாந்தாங்க, வசமிழந்த வார்த்தைகள். ஜம்னா ஒரு தூணைப் பிடித்துக் கொண்டு அவனையே பார்த்துக் கொண்டு இருந்தாள். எதுவும் பேசவில்லை. திடீரென்று அவள் முகம் சிவந்தது. ஏன்? அழப் போகிறாளா? இந்தப் பெண்கள் தங்கள் பெண்கள் என்ற நினைப்பை ஒழிக்க முடியாதா?

“என்னைப் பத்தியா கேக்கறீங்கோ மஹ்ராஜ்? என்னப் பத்தி யாருங் கேக்கறதில்லே. கேட்டாலும் சொல்றதில்லே. எனக்கு யாருமில்லே. எனக்கு தமிளு சரி வர்றதில்லே. பேசறுதுக்கி

கொஞ்சம் கஸ்ட்டம்—ஆனாக்குப் பேசுவேன். நாம் மராட்டீ இல்லே. கொங்கணீ—பாபீகூட மராட்டி இல்லேதான். முப்பதி வர்ஷம் முன்னாலே எங்களப் புட்ச்சாந்தாங்கோ. கானா ரொம்ப கஸ்ட்டம். கெடைக்குறதுக்கு—சரீ சொல்லி வந்துட்டோம். அவ்வளவுதான். அதுக்கு மேலே என்னா இருக்குது? இனிமே எங்கே போக முடியும்? இதீ ஜென்மம் இங்கேதான். ரொம்பப் பேஜார். நங்கரீ லெட்கீ—வேலெப் பொம்ப்ளே. பொம்ப்ளே வேலே. அத்கு மேலே ஒண்ணுமில்லே" பரந்தாம ராஜூவின் நெஞ்சு இந்தக் கவிதையை வாங்கிக் கொண்டது. கவிதை என்கிறார்களே! இந்த ரத்தம் போதாதா? கோலப்பூர் அருகே ரோகன் வட்டம். மலைஜாதி கொங்கணிகளைப் பிடித்து விற்கிற வர்க்கம். கொங்கணிகள்—மலைப் பொருள்கள் விற்க சந்தைக்கு வந்தால் காணாமல் போவதுண்டு. கொங்கணிகள்—டோக்ரிகள்—ஹிஜாரிகள்—காயஸ்த ப்ராம்மணர்கள்—பண்டிதர்கள்—அதென்ன பெண்கள் மட்டும் காணாமல் போவது? புழுதி நூற்றாண்டுப் புழுதி—மஹாலிலும் உதிர்ந்தது. உதிர்ந்து கொண்டே இருந்தது. என்றோ ஒரு நாள் இடிந்து விழும்.

"ஜம்னா, ஒன்ன அதைக் கேக்கல. எப்டி வந்தேன்னு கேட்டேன்"

சுருண்டு மடிப்புப் பாவாடைகளை விலக்கி பாதி முகத்திரையை விலக்கி விட்டு கூந்தலை முன் வளைத்து மார்பை மறைத்து அவன் காலருகில் அமர்ந்தாள் ஜம்னா என்கிற அந்த நவ்கரீப் பெண். ஜன்னல்களின் வெளியே வெளியிலிருந்து சிட்டுக் குருவிகளும் கூடையும் பெரிய குருவிகளும் மஹாலுக்குள் ப்ரவேசித்தன. மஹாவின்மேல் விதானத்துத் தூண் பிரிவில் ஒவ்வொரு தூண் விளிம்பிலும் ஒவ்வொரு குருவிக் கூடு. துருத்திக் கொண்டு வெளியே தெரிந்தன. வைக்கோல்—தும்புகள்—குச்சி—பழந்துணிகள் —கிளைகள்—இலைகள் ஒவ்வொரு கூட்டையும் இனங்காட்டின. மங்கலாக எங்கிருந்தோ ஸாரங்கியின் நாதம் ஒன்று ஜன்னல்கள் வழியே உட்ப்ரவேசித்துக் கலக்கியது. மாலை நேரத்து அந்திச் சூரியன் மஹாலுக்குள் இருட்டைக் கொண்டு வந்தது. இந்த இயற்கைக்குத்தான் எத்தனை வன்மை? எத்தனை கொடுமை? இத்தனை அழகாக இந்த மாலை சாக வேண்டும். ஒவ்வொரு கணமும் எத்தனை கோரமான சாவு. இந்த அழிவுக்கேன் இத்தனை அழகு. லல்லு—உனக்குத் தெரியுமா? இதெல்லாம் நீ எதிர்பார்ப்பதெல்லாம் வாழ்வல்ல. உனக்கு வாழ்வு எனக்கோ வாழ்வதில்லை. வாழ்வு அதிலில்லை. இது ஜம்னாவுக்குப் புரிகிறது. ஜம்னா மட்டும் புரிந்து கொண்டிருக்கிறாளோ? என்னவோ

ஹா... ஜம்னா! நீயும் முகமூடியையா அணிந்திருக்கிறாய்? இல்லை போலிருக்கிறதே? உன் முழு வேஷமும் கலையுமா? இல்லை இதுவும் ஒரு வேஷம்தான். என் அம்மா லோசனத்தின் முன்னால் நான் யாரிடமும் காணவில்லையே? ஒரு வேளை தாய் மட்டும்தான் தன் குழந்தைகளிடம் மட்டும்தான் இந்த வேஷமில்லாமல் இருக்கிறாளோ? பெற்ற தாய்க்கு மட்டும்தான் அந்தப் பாலோடு நிஜம் ஊறுமோ? ஜம்னாவின் முன்னால் ஒருவிதப் பரவசத்துடன் அந்த சிறிய கட்டிலில் கிழிந்த மெத்தையில், தூசி படிந்த சால்வையில் உட்கார்ந்து கொண்டான் பரந்தாமராஜூ.

அவன் கால்களை இன்னும் நெருங்கி அமர்ந்தாள் ஜம்னா. யாரும் எதுவும் பேசாத கலையாத மௌனம் நீடித்து. ஜம்னா பேச இஷ்டப்படவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. கேட்ட கேள்விக்கே அவள் பதில் சொல்லவில்லை. ஆண்கள்–ஆண்களை அவளுக்குக் கௌரவப்படுத்தித்தான் வழக்கமே. ஏவலுக்குக் காத்திருப்பதுதான் அவள் வாழ்க்கை. யாருக்கும் அவள் அடிமை. சுகம். அதுவே திருப்தி. எல்லோரும் பெரியவர்கள். அவளைக் கையாடிக் கொண்டு வந்தவனும்–அவளைப் வைத்திருந்தவனும்–அவளுக்குச் சோறு போட்டவனும்–அவளைப் படுக்கைக்கு இழுத்துச் சென்றவனும் பதின்மூன்று வயதிலிருந்து பரந்தாமராஜூ வரை எல்லோரும் அவளுக்கு மஹாராஜன்கள்தான். இப்போது இந்த மஹாராஜ். பாபி வரும் வரை அவள்தான் பாபி. பாபிக்குப் பணம் உண்டு. விலை உண்டு. ஜம்னாவுக்கு விலை இல்லை. நிஜமாகவோ விலை இல்லாத ஜம்னா.

"என்னா கேட்டீங்கோ மஹ்ராஜ்!"

"இல்ல ஒன்ன... ஒன்ன... இல்ல–ஒனக்கு யாரு மஹ்ராஜ் இப்போ?"

"நீங்கோதான்"

"அதில்லே... இப்போ உன்னை யார் வெச்சுக்கிட்ருக்கா? யாருக்கு நீ நவ்கரீ?"

"மஹ்ராஜ்–அல்லாருந்தான். யார் கானா, கொடுக்றாங்களோ அவங்கதான் மஹ்ராஜ். அவ்கோங்தான் எனக்கு மாலிக். மஜூம்தார். மஹாஷை"

"ஒனக்கு எப்பவாவது கல்யாணமாச்சா? எப்பவாவது நீ கொழந்தை பெத்தியா?"

மௌனம்.

மடியப் போகும் வெயில் திடீரென்று உக்ரமானது. இன்னும் ஒரு மணி நேரம் இந்த அந்திச் சிவப்பு நிற்கும். திடுக்கென்று அவளைக் குனிந்து பார்த்தான் பரந்தாமராஜூ. அவள் மார்பின் கதகதப்பு அவன் கால்களில் தெரிந்தது. அவன் கால்களை மடியில் தூக்கி வைத்திருந்தாள் ஜம்னா. சுலபமாகவே இவள்களால் அழிய முடியும். எரியும் தீக்கு சருகு துணையாகுமா? ஆனால் பெண்ணே! நான் எரியும் அக்னி அல்ல. உன் சருகை எரிப்பதற்கு. நான் வெறும் அக்னிக் குண்டம். நெருப்புத் துண்டங்கள் எனக்குள்ளே கிடக்கின்றன. சருகு எரிய நேரமாகும். முதலில் புகைந்துபின்னரே எரிய வேண்டும். சருகுகள் எல்லாம் எரிவதில்லை. சில புகைவதுடன் சரி, கருகி விடும். அவளது தொடைகளில் இருந்து பாதங்களின் வழியே தனக்குள் ப்ரவேசிக்கும் ஜம்னாவை அவனால் மறுக்க முடியவில்லை. ஆனாலும் சிறு குழந்தையிலிருந்து அவன் அம்மாவின் ஸ்பரிசத்தை இன்னொரு பெண்ணில் அவனால் காண முடியவில்லை. இதுகூட வேஷமோ? ஆனால் சாகசங்களில் அவன் கரைவதில்லை. இது சாகசமா? தாசியின் மயக்கமா? இப்போது ஜம்னா அவனது முழங்கால்களைத் தழுவி இருந்தாள். கால்களை விலக்கிக் கொள்ளா முயன்றால் ஜம்னா மேலும் படருவாள் என்று பரந்தாமராஜூவுக்குத் தெளிவாகவே தெரிந்தது. மெதுவாகக் கால்களினாலேயே செல்லமாக அவளை மிதித்தான். அந்த பாவை ஜம்னாவுக்கு இன்பமயமாக இருந்தது. அவள் தலையில் கிரீடத்தைச் சூட்டியது போலிருந்தது. பிறந்ததிலிருந்து அவளுக்கு இந்த கௌரவத்தை அளிக்கிற ஆரம்பம் பரந்தாமராஜூ மட்டும்தான். அவளைப் படுக்கையில் தள்ளி கசக்கியபின் காலால் உதைத்து அவளை வெளியேற்றியவர்களே அதிகம் பேர். பேர் சொல்லி கூப்பிட்டவர்கள்கூட இல்லை. 'இங்கே வாடீ, ஏய் படு-காலை மிதி. மேஜையை எடுத்துப் போடு. திருடி. இந்தக் காயை அரி. மாதர் கீ சோத்-சோரீ-அடுப்பைப் பார்-அண்டாவைத் தூக்கு. திமிர்றியா சாத்திடுவேன்-தேவடியா மகளே-இப்படித்தான் அவளை அந்த சமூகம் சந்தோஷப்படுத்தியது. ஓர் ஆண் பிள்ளையும் அவளைக் கேள்விக்கூடக் கேட்டவனில்லை. 'இன்னிக்கு வர்றியா? நாளைக்கு வரட்டுமா?' என்ற சொற்கள் அவள் வாழ்வில் தேனாய் இனித்ததேயில்லை. ஏனோ அவள் அம்மாவையும் அவள் தங்கைகளைவிடவும் குறைச்சலாகவே அழுவாள். இவற்றை எல்லாம் பரந்தாமராஜூவுக்கு யார் சொல்லிக் கொடுத்தார்கள்? கால்களினால் அவள் தொடையில் அவன் நிமிண்டவில்லை. பாதத்தால் அவள் தொடைகளை லேசாக முத்தமிட்டுக் கொண்டிருந்தான். இந்த கௌரவம் அவள் வாழ்நாளில் யாரும்

தராத பூஜை. பரந்தாமராஜூ அவளை வழிபட்டான். அவளுக்கும் அது எப்படித்தான் புரிந்து போனது? அவன் பாதங்களை மேலும் இறுகத் தழுவிக் கொண்டவள், கண்களை இறுக மூடிக் கொண்டு அவன் தொடைகளுக்கு மேலாக தன் அடர்த்தியான கூந்தலுடன் புதைந்து கொண்டாள். இன்னும் ஆழம் புதைந்து அவள் அவனை எட்டவிடாமல், பரந்தாம ராஜூ அவளது கூந்தலை வருடி இன்னும் பூராவாக உலராத ஒரு பிடிக் கூந்தலை லேசாக ஒரு உலுக்கு உலுக்கி அவளை நிலவுலகத்துக்குக் கொண்டு வந்தான். கால்களாலேயே லேசாக 'வேறு-இது வேறு' என்று அவளை உதைத்துத் தள்ளினான். அவளோ சரிந்தாள். அவன் பாதங்களைத் தன் முகத்தில் புதைத்துக் கொண்டு உருண்டாள் பரந்தாமராஜூ எழுந்து நின்றான். விறுவிறுவென்று படிகளில் கீழிறங்கினான். கீழுருண்ட ஜம்னா எழும்பவே இல்லை. அவள் அப்படியே கிடந்தாள். வேகமாகப் படிகளில் கீழிறங்கி வந்த பரந்தாமராஜூவின் கண்களில் அந்தப் புராதனச் சித்ரப்படம் தஞ்சாவூர் சரபோஜி மஹாராஜா-ஜம்னாவின் தாய்-பாட்டி-தப்லா-ஸாரங்கி-அந்தக்காலம்-நூற்றாண்டு எதிரே உருக் கொண்டன. அந்த தஞ்சாவூர்ச் சித்ரப்படத்தில் எதிரே இடிந்த சுவரின் அருகே அவன் பார்வையில் பட்டது... சரிந்த சுவரொன்று.

அவன் கைகளில் தூரிகை இல்லை. அந்த சுவரோவெனில் அவனைக் குரூரமாக அழைத்தது. 'ஆ'வென்று வாய் பிளந்ததுபோல் அதன் மெத்தையிட்ட அந்தச் சுவரின் பருமன் அவனுக்குள் கிளர்ந்த புகை மூட்டம் போன்ற வேதனைகளையும் வெட்ட வெளிச்சமாக நின்ற ஜம்னாவையும், அவளை ஏமாற்றி உருட்டித் தள்ளிவிட்டு வந்த அவன் பேதமையும், காலங்காலமாக வாழ்வின் பொருளை மனிதனிடம் ஏமாற்றி வரும் ப்ரபஞ்சத்தின் பேதமையையும் முக்கோணங்களில் கண்டான் பரந்தாமராஜூ என்கிற தஞ்சாவூர்ச் சித்ரப்படக் கலைஞன். அவன் இப்போது செய்தியைச் சொல்லியாக வேண்டும். ஓவியத்தை உடைத்தாக வேண்டும். இந்தக் காலத்தின் சதியை ஏமாற்றியாக வேண்டும். ஜம்னாவைக் கிழித்து பாபியின் முக்கோணத்தை உடைத்து சரளாவின் மூலத்தைத் தகர்த்து லல்லுவின் பித்தை எடுக்க வேண்டும். அப்பனின், ஐயனின்—ஏன்—தன்னின் மூலத்தை உடைத்துச் சிதைக்க வேண்டும். கையில் தூரிகை இல்லையே! சட்டை பைகளில் துழாவினான் பரந்தாமராஜூ. கஞ்சா பீடிகள் தீர்ந்துவிட்டன. ஆத்திரம்-கோபம்-இயலாமை-"ஜம்னா" அலறினான். ஓடிவந்தாள் அவள். ஜல்... ஜல்... ஜல்... என்ற சலங்கை சப்தம் மீண்டும் சவுக்குப்போல் சுழன்று வந்தது. எதிரே நின்றாள் ஜம்னா. அவளது

அருமையை உடனே உணர்ந்தான் பரந்தாமராஜூ. அவள் கையில் கோப்பை நிறைய பாயாஸ்-மறுபடியுமா? அந்தப் பாயாஸ் கிண்ணத்தை வாங்கிக் கீழே வைத்து விட்டு சுவரோரமாகக் கிடந்த எச்சில் பீடி ஒன்றைப் பொறுக்கி வாயில் கவ்விக் கொளுத்தினான் பரந்தாமராஜூ. பயத்துடன் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள் ஜம்னா. மாலை வெயில் முழுப்பாட்டமாக இப்போது வீசிக் கொண்டிருந்தது. இன்னும் அதற்கு உயிரிருந்ததே ஆச்சர்யம். சுவற்றிலிருந்த ஓர் ஆணியைப் பிடுங்கி பாசி படர்ந்து காய்ந்து கருமை ஏறியிருந்த அந்தச் சுவரில் கையிலிருந்த ஆணியால் கோடுகளை இழுத்து நீட்டியபடி நீண்ட முக்கோணங்கள் பிறந்தன. கண்களைப் பறித்த வெண்மை நிறத்தில் அந்த முக்கோணங்கள் அந்தக் கரிச் சுவற்றில் காலத்தைக் கடந்தன. மனித சங்கிலி அதில் சித்திரம் பூண்டது. பரந்தாமராஜூவின் மூர்த்தண்யமான கோடுகளும் ஆத்திரம் கொண்ட அர்த்தங்களும் யுகயுகமாய்ப் படர்ந்து வந்த மனித குலத்தின் கேள்விகளை ஒன்றுள் ஒன்று படர்ந்து திரியும் முக்கோணங்களில் சலனங்களாக்கி மீண்டும் பிறந்தன. மீண்டும் இறந்தன. பரந்தாமராஜூ இப்போது அந்தச் சுவற்றை மேல்ப் பரப்பை அந்த ஆணியால் குத்திக் கிளறி மேடும் பள்ளங்களும் குழிகளும் தோற்றுவித்து படத்தின் ஓவியத் தன்மையை அகழ்ந்து ஆழமாக்கி சிற்பத்திறன் கொண்டான். ஓவியம் இப்போது சிற்பங்களாயும் திரிந்து முக்கோணங்களாய் விரிந்து கொண்டிருந்தன. "இது பாபிதானே ஆடுறது? பாபி டான்ஸ் ஆடுமா என்ன? இது பாபிதான். பாபியேதான். மூஞ்சிலே எதுக்கு முக்கோணம்? அவ தலைக்கு மேலே என்னா போட்டு வச்சிருக்கீங்கோ.. கடல் மாதிரி. அலை வீசுதே-அதுவும் முக்கோணம் மாதிரித்தான் இருக்கு" என்று மழலை கொண்டாள் ஜம்னா.

அவளைப் புறங்கையால் தள்ளியபடியே மேலும் அந்தச் சரிந்த சுவற்றை மேலும் கீறிக் கொத்தி மேலும் மேலும் முக்கோணங்களை இட்டு நிரப்பிக் கொண்டே இருந்தான் பரந்தாமராஜூ. ஒன்றுள் ஒன்று மடிந்து ஒன்றுள் ஒன்று மேலெழும்ப முடியாமல் ஒன்றுள் ஒன்று புதையும்... சூரியன் சுத்தமாக மறைந்து போயிருந்தது. ஊமை வெளிச்சம்தான் மீதி. இருட்டு பயமுறுத்தியது, வந்து விடுவேன் என்று. பரந்தாம ராஜூ தலையைத் தூக்கவில்லை. சுவற்றின் மேலே சாய்ந்திருந்தான். மேலும் மேலும் அவன் வெறி கொண்டான். யாரையோ... எவரையோ... எதனையோ பழிவாங்கும் வெறி முக்கோணங்களால் ஒன்றை ஒன்று சீவித் தள்ளினான். அவனையே சவாலுக்கழைத்த காலத்தையும் அந்த முக்கோணங்களால்

செதுக்கினான். முக்கோணங்களில் ஒளிந்து சிதறடித்தான். அவனை ஏமாற்றிய-அவனைப் பழிவாங்கிய-காலாதீதமான அத்தனையையும் அந்தத் தஞ்சாவூர் வெட்டு ஓட்டுப் படம் முக்கோணங்களினால் சிற்பமாகக் குடைந்து தள்ளினான். மூன்று மணி நேரம் அவன்மேல் கவிந்து புரிந்தும் புரியாமலும் அறிந்தும் அறியாமலும் அவனேயாகிவிட்ட ஜம்னா, அவன்கூடவே நின்று அவன் செதுக்கித் தள்ளின சுண்ணாம்புக் காரைக் கலவையை அள்ளி வெளியில் போய்க் கொட்டியும், திரும்ப வந்து அள்ளிக் கொண்டும் இருந்தாள். உள்ளங்கை மறையும் இருட்டு படர்ந்தது. எங்கிருந்தோ "ரேய் ஜம்னாய்! ஆயே" என்ற குரல் அவர்களுக்கப்பால் இடந்த சுவர்களிலிருந்து கேட்டது. ஜம்னா மண்ணைத் தட்டிக் காரைத் தூசியைத் தட்டி விட்டு உள்ளே ஓடினாள். ரெண்டே நிமிஷம் கையில் ஒரு அரிக்கேன் விளக்குடன் அவனருகே ஓடி வந்தாள்.

"அப்பா, எவ்ளோ பெரிய்ய படம்? தர்பார் ஹால்லே இருந்தா மாதிரீ! அடேய்யா? பாபிய அப்படியே வரெஞ் சுட்டீங்கோ, பாபீ தானே அதூ? பாபீ பாத்தாத் தூங்காது அத்கு, ஹையா, கீ. ஒரு முக்கோணம் மாதிரிக்கி ஆழமா நோண்டீ இருக்கீங்களே-பள்ளமா-குழியா-செகப்பா-இல்லே இல்லே-செகப்பு இல்லே-செகப்பு மாதிரி இருக்கே. அது என்னது? அது என்னாங்கோ? பாபீ இந்தப் படம் வரையறதுக்குத்தான் ஓங்களெத் கூட்டீட்டு வந்ததா? என்கிட்ட சொல்லவே இல்லியே! ரேய்மாலு-கங்கா பாய்-ஷாந்த்தி-ஷமீம்-தீதிம்மா-நானீம்மா-ஆ யணா"

அவள் கத்தியதும் பரவசத்துடன் கூச்சலாய் அது ஒலித்தது. அந்த இடிந்த மராட்டிய அரண்மனைச் சுவர் முடுக்குகளிலிருந்து நிறைய கும்டா அணிந்த முதிய, இளமை கொண்ட மராட்டியப் பெண்களும், ராவ்ஜீ பெண்களும், மல்லுகச்செட்டிப் பெண்களும் கையில் விளக்குகளுடன் ஓடி வந்து ஜம்னாவைச் சுற்றி நின்று ஜம்னாவின் அதிசயத்தை அவர்களும் வாங்கிக் கொண்டு அந்த நவீனச் சித்ரப் படத்தின் புரியாத பயங்களில் தங்களைத் தாங்களே ஆழ்த்திக் கொண்டு "தேகோ-பாபீ இதர் பாஹேற்" என்று புரிந்து கொண்டும் புரியாமலும் அவனைப் பார்த்ததும் ஆச்சரியம் கொண்டார்கள். அவர்கள். எல்லோருக்கும் இந்த ஆறடிச் சுவரின் இடிசல் கண்களிலிருந்து மறைந்துவிட்டது. இப்போது இங்கே அவர்களுக்குத் தெரிந்தது ஏதோ பயங்கரமான படம். அதில் பாபியும் இருக்கிறாள். என்ன பயங்கரம்? எல்லோரையும்

அழித்து விடுகிற—அழிக்கப் பார்க்கிற—தின்று தீர்க்கிற—அவர்களுக்கு முன்பே தெரிந்த ஏதோ ஒரு பயங்கரம் அந்தப் படத்திலிருந்து அவர்களை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. எல்லோரும் அன்னியனைக் கண்ட தயக்கத்தோடு, அச்சத்தோடு சாவின் பயங்கரம் அவர்களையும் அரட்ட ஜம்னாவை மராட்டியில் திட்டியபடியே, பரந்தாமராஜூவை பீதியுடன் பார்த்தபடியே மூலைக்கொருவராய் இருளில் மறைந்தார்கள் முனகியபடியே.

இருட்டில் ஒற்றை லாந்தல் வெளிச்சத்தில் சுண்ணாம்பு உதிர்ந்து ஆடையிட்டிருந்த பாயாஸைக் கையிலெடுத்து மேல் பரப்பை விரலால் வழித்து விட்டு அதைப் பருகினான் பரந்தாமராஜூ. அவனையே வியப்புக் குன்றாத கண்களுடன் பார்த்தபடி “ கேட்டா வேற கொண்டு வருவேனில்லே! அத்தையே குடிக்கணுமா? என்னா” என்ற ஜம்னா கங்காளத்திலிருந்து ஒரு பெரிய சொம்பு நிறைய நீரை அவன் முன்னே நீட்டியபடி “மூஞ்சீ கழுவுங்கோ, இப்டியே புழுதீலே புரண்டா மூஞ்சி மூஞ்சியாவா இருக்கும்? வேர்த்து ஊறிப்போச்சு சட்டை-சல்லடமெல்லாம் இப்டிக் கழட்டிப் போடுங்கோ—நல்லாக் குளிச்சுட்டு சாப்ட்டா இன்னும் பாயா மஸ்த்தா இருக்கும்” என்று சொல்லியபடியே அவனை பற்றிக் கவலைப்படாமல் அவன் சட்டைப் பித்தான்களைப் பிரட்டி அவளே கழற்றினாள். வெறும் குட்டைச் சல்லடத்துடன் அவனைக் கழற்றி நிறுத்திய ஜம்னாவை பதில் பேசாமல் அனுசரித்தான் பரந்தாமராஜூ. அவனுக்கென்ன நேர்ந்துவிட்டது? நெஞ்சின் பாரம் நொறுங்கி உடைந்து வழிந்துவிட்டது. இனி அவன் அவள் கைப்பிள்ளை. அவள் சொல்வதையெல்லாம் அப்படியே படிந்தான். அவள் கங்காளத்தில் இருந்த நீரை அள்ளி அள்ளி அவன் தலைமேல் ஊற்றினாள். கொதித்து தண்ணீர் காணாது தவித்துக் கிடந்த உடம்பு அந்த இடந்த சுவரோரமாய் அவன் உட்கார்ந்து கொண்டதை சாக்காக வைத்து ஜம்னா அவனுடலை தேங்காய் நாரை வைத்து முன்னும் பின்னுமாகத் தேய்த்து ஏதோ ஒரு மராட்டிய பொடி ஒன்றை தூவித் தேய்த்துக் குழப்பி நுரைக்க அடித்தாள். அவன் திக்குமுக்காடிப் போனான். “குனிஞ்சுக்குங்கோ—இப்போ நிமிருங்கோ—இப்போ வளைங்கோ” என்று அதட்டி உருட்டி அவனைக் கழுவிக் குளிப்பாட்டித் துடைத்தெடுத்ததை அந்த இருட்டு முடுக்கிலிருந்து பல பெண்களும் ஆண்களும் பார்த்துக் கொண்டுதான் இருந்தார்கள். ஈரத்திலிருந்து மீண்டபோது கையில் விளக்கோடு மீண்டும் மஹாலுக்கு அவனை இழுத்துக் கொண்டு படியேறிப்போன ஜம்னாவை சந்திலிருந்து

வெளி வந்த சில ஆண்கள் உள்பட பார்த்துக் கொண்டே முனகிக் கொண்டும், திட்டிக் கொண்டும் உள்ளே போனார்கள். அதே நேரத்தில் கார் ஒன்று–ஸெடான் கார்–அந்த அரண்மனைச் சுவரோரமாகத் திரும்பி வளைவு வளைவான வாசல்கள் வழியே வந்து இந்த முடுக்கில் நின்றது. மேலேறிப்போன ஜம்னா அவனைக் கட்டிலில் இருத்தி அவனுக்கு முன்னால் நார்த்தட்டு ஒன்றை நகர்த்தி வைத்து அவன் பசியைக் கிளறினாள். அதே நேரத்தில் படிகளில் இனிமையான வெள்ளிக் கொலுசு மணி ஓசை–பாபிதான்–அச்சத்தோடு அவனைவிட்டகன்று மூன்றடி தூரம் தள்ளி முக்காட்டை இழுத்து விட்டு கொண்டு ஏறத்தாழ முழுதும் நனைந்திருந்த அவளது ஈரத்தை மறைத்தபடி "ஆயே பாபீ! இதோ உன்னோட ஆள்" என்று சொல்லி படிகளில் இறங்கி சலங்கை கலகலக்க இருளில் மறைந்துபோனாள் ஜம்னா. பாபி கூந்தலை அவிழ்த்துவிட்டாள். இருவருமே களைத்திருந்தார்கள். பாபியை உற்றுப் பார்க்க அவன் களைப்பு இடந்தரவில்லை. கவளம் கவளமாக சோற்றை அளந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான் பரந்தாமராஜூ.

"என்ன பாய்! வூட்டுக்குப் போலீயா. இங்கியே டிகானா போட்டாச்சா– சரீ சாப்டுட்டுத் தூங்கு. எனக்கு மேலெல்லாம் வலிக்குதுபா. இங்கே எல்லாருக்கும் நான் என்னா பண்றேன்னு தெரியும். ஆனா நான் ராஜா வம்சமில்லையே. கொங்கணி. யாரும் ஒண்ணும் கேக்றதில்லே. நீ தூங்கு– இனிமே சுடுதண்ணீ வச்சூ குளிச்சுட்டு சாப்டுட்டூ–ஒரே பேஜார். என்னெ விடெ ஜம்னா பரவால்லே. நவ்கரி வேலெ. வெலெக்கப்றம் சாப்பாடு–தூக்கம்–நம் கதே அப்படியில்லே–ஒஸ்த்திலே மட்டம், மட்டத்திலே ஒஸ்த்தி–வெளிய தெரியக் கூடாது. ஆனா எல்லோருக்கும் தெரியும். தெரிஞ்சாலும் தட்டிக் கேக்க மாட்டாங்கோ. ஏன்னா எல்லாருக்கும் பாபீ பயம். மூஞ்சிலே அட்ச்சா மாத்ரி போடான்னு தூக்கி எறிஞ்சு அட்சுடுவேன். எவன் யார் வந்து என்னெ என்னா பண்ணுவான்? எனக்கெல்லாறையுந் தெரியும். ஏய்–ஒன்னையும்–ஒங்கப்பாவையும் தெரியும்–ஜம்னா எப்டி? அச்சா லட்கிதாஹீங்? நாம் போய் குளிக்கறேன். நீ தூங்கூ. பாய்–இன்னிக்கு முடியாதூ. நாளைக்கு வெச்சுக்கலாம். என்னா?" என்று அசிங்கமாக சிரித்து வியாபாரப் பல்லிளித்தாள் பாபி. அவளை அப்படியே கொலை செய்யலாமா! என்று தோன்றிய ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு சோற்றை மெதுவாக கறியில் மிரட்டி உள்ளே தள்ளினான் பரந்தாமராஜூ. நிஜமாகவே சோறு சாப்பிட்டுச் சாப்பிட்டு... மேலே மேலே

சாராயம், வாழைப்பழமுமாக நொந்த வயிறு–கடந்த அரைமணி நேரமாக கொஞ்சம் கொஞ்சமாக சோற்றுக்குத் திறந்து கொண்டது. இனி ஒரு குண்டான் சோறு அதற்கு வேண்டும்.

"சரி, சரி போய்த் தொலை" என்றான் பாபியைப் பார்த்தபடி. பாபி அரண்டாள். அவளென்ன செய்வாள்? காலையில் அவனைப் பார்த்தபோது ஆசையாக இருந்தது. நேற்றிரவு முழுவதும், அதன் பின்னே இன்று பகல் முழுவதும் ஹோட்டல் அறையின்–அறையிருளில் சில ஆயிரங்கள் அவள் பையில் ஏறிக் கொண்டது. பரந்தாமராஜூவுக்கு அது தெரியாதா?

"நான் இப்போ என்னா சொன்னேன். குளிச்சுட்டு வர்ரேன்னு தானே சொன்னேன். அதுவரைக்குந் தூங்குன்னுதானே சொன்னேன். கோவிச்சுக்கிட்டியா. பாய்?" மெதுவாக அவனருகே நடந்துவந்து அவன் தோள்களைத் தொட்டு விரலால் நிமிண்டினாள் பாபி. "பெரிய எடத்துப் புள்ளேங்கறது சரியா இருக்குது. பைத்யம்–பைத்யம்–ஆயிரம் பேர் வந்தாலும் நீ ஆவுமா?" என்று சொல்லியபடியே அவன் வெற்று மார்பைத் தடவியபடி சாப்பிட்டுக் கொண்டிருந்தான் என்பதையும் ஒதுக்கி அவன் உதடுகளைத் தன் பற்களால் கவ்வி அந்த எச்சிலோடேயே தன் எச்சிலையும் கலந்தாள் பாபி. விகாரமான ஒரு வெற்றிலை நெடி அவளிடமிருந்து வீசியது. ஒரு விதமான வீச்சம். இல்லாத அழுக்குகளெல்லாம் அவன் மனதில் தோன்றி அருவருக்க அடித்தாள் பாபி. வியர்வை–அழுக்கு–புழுதி–நாற்றம் இவைகள் யாவும் அவன் சொத்தாய் இருந்தது போக அவனுக்கே அருவருப்புத் தரும் மாயை எப்படி நேருகிறது? அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது–இதென்ன ஆபத்து? நானும் வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறேனா? நானும் முகமூடி அணிந்து கொண்டிருக்கிறேனா? என் போலித்தனம் எத்தனை சுவாரஸ்யமானது? மற்றெல்லாவற்றையும் பிளந்தெறிந்த நான் என்னைப் பிளந்தெறிய ஒரு மார்க்கமும் இல்லாமல் இருக்கிறேனே? அப்படியானால் உண்மை என்பதுதான் என்ன? மறுபடியும் மலை போன்ற சுகம் தலைமேல் ஏறியது. இந்த இடத்தை விட்டு உடனே வெளியே போக வேண்டும். எங்கும் பொய்–எங்கும் வேஷம், வாழ்வென்ற வேஷம், எல்லாம் தேவை. பணம், வாய்ப்பு–நேரம்–பாபிக்கு நான் வேண்டும்–எனக்கு அவள் வேண்டும். ஆக்ரோஷம் உருக்கொண்டது. இவள்தான் எத்தனை பெரிய விஷச் சிலந்தி. மீனாக்ஷி ராஜூ பிள்ளை அவன்தானடி ஒங்களுக்கு வேணும். ஹோட்டல்லெ ஒரு ரூம்ல ஒரு கஸ்ட்டமர் இங்கே உன் அசிங்கங்களோட நான் ஒரு கஸ்ட்டமர்–வேறென்ன?

திரும்பிப்போக முனைந்த பாபியின் முன்னே, நனைந்த சட்டையிலிருந்து வியர்வையால் ஈரமாகிப்போன கத்தை நோட்டுகளை எடுத்தெறிந்தான். அவள் அயர்ந்துபோனாள். அவளது ஒரு வருடத்திய சம்பாத்யம் அது. கற்றை கற்றையாக ஜன்னல்கள் வெளியே காற்று வீசியும் வியர்வையில் ஊறியதால் பாபி மாதிரியே கசங்கிய பின்னும் வியர்வையில் ஊறிக் கிடந்தன அந்த நோட்டுகள்...

"அரே பாய்! எத்கு பாய் இத்னி காசு! நீ சுண்டினா-நான் உன் மடியில"

அப்போதே அவன் மடியில் வந்து வீழ்ந்தாள் பாபி. கீழே போகவில்லை. குளிக்கவில்லை. அயர்ச்சியில்லை. பணத்துக்கு அவன் அழைக்கவில்லை. அவள் அவனை விடுவதாக இல்லை.

அவன் எழுந்து நின்றான். பாபியை உதற முனைந்தான். விலகப் பார்த்தான்.

பாபி லேசான ஒரு பறவைபோல் சிறகடித்து அவனைச் சுற்றிப் பறப்பதுபோல் அந்த மங்கிய ஒளியில் அவனை மாணவனாக்கினாள். சிந்தனைகளின் ஆழத்தில் அக்னியைப் பரப்பி வாழ்வின் வினையேதும் அறியாத இருளூடே கவிதையும் ஓவியமும் தத்துவமும் சிதற, அந்த கேள்விகளையே விடைதேடி சுழன்று வந்த பரந்தாமராஜூ என்கிற சைத்ரீகனின் மூளை முக்கோணம் இன்னுமொரு முக்கோணத்துக்கு இதுவரை தானறியாது தன்னைக் கொடுத்ததில்லை-அல்லவா? பெண்மை அவனை நெருங்கவே முடியாத காரணமே பெண்மையின் போலி முகமூடிகள் தானே-பெண்மை என்ற வேஷந்தானே? இதோ-பாபி என்னும் சற்றே அயலகப் பெண்மை-இன்னும் அவனை ஆணாகவே ஏற்றுக் கொள்ளவில்லை ஏன்?

'ஆ'வென்று பிளந்து கிடந்த மஹறால் அவனுக்குப் பெண்மையைக் காட்டவில்லை. அவனைத் தழுவித் தழு முழு நிர்வாணமாகி தன் தளர்ச்சியிலும் அயர்ச்சியிலும் தன் தொழிலிலும் தோற்றாள் பாபி பாவம். அவள் வெறும் ஆண்களையும் மிருகங்களையுமே சுமந்து மல்க்கம்பம் ஏறியவள். அவளது ஆண்கள் யாரும் இத்தனை தூரம் இரும்புப்பிடி பிடித்தவர்களல்ல. பரந்தாமராஜூ அவளை இறுக்கியதும் பிடித்தது-எல்லாம் அவளை நொறுக்கித்தான் தள்ளின. ஆனால்? அந்த மஹறாலின் கமான் வளைவுகள் யாவும் அவள்மேல் சரிந்தன. அந்த ஐந்து மாடிக் கட்டடம் இடிந்து அவள் தலையில் விழாதா? என்றிருந்தது. இவன் மிருகம்போல்

அவள் உணர அவளை ஓங்கி உலுப்பினான். ஆனால்? அதென்ன? இரண்டு பேர் முயன்றும் ஆணும் பெண்ணும் ஆக முடியவில்லையே? பரந்தாமராஜூ பீதியில் ஆழ்ந்து போனான். பாபி முழுசாய் அவன்மேல் கிடந்தாள். அவனுக்கு ஆச்சர்யம் தாங்க முடியவில்லை. குதிரையின் பாய்ச்சலுடன் அவளைக் கட்டிப் புரண்டும் அது தூரப் போய்க் கொண்டே இருந்தது. ஒரு கணம் சாகலாமா? என்றிருந்தது. பாபி அவனை விட்டெழுந்து மறுபடியும் அவனைப் புரட்டினாள். இந்த முறையும் வீண். மூன்றாவது முறையும் அவள் அயராமல் அவனைத் தட்டி-தட்டித் தழுவி முயன்றாள். அவனிடம் எந்த மாற்றமும் இல்லை என்பது அவனுக்கே பயங்கமாய் அனுபவமாகியது. அவளது நிர்வாணம் அவளுக்கே அர்த்தமற்றுப் போனது. என்ன சோதனை? பாபியினால் ஆத்திரம் தாங்க முடியவில்லை. எங்கும்-எப்போதும்-எவனிடமும் இதுபோல் அவமானப்பட்டதில்லை. மார்பு புதைய உடம்பு நொறுங்க கை கால்களைப் பின்னி உரத்து மேலும் முயலும்போதும் பரந்தாமராஜூவும் பாய்ந்து முயன்றும் இது என்ன அபத்தம்?

அவள் அழ ஆரம்பித்தாள். 'தூத்தூ' காறித் துப்பினாள்.

"ஏன்டா மனுஷனாடா நீ? மரக்கட்டையா? மாதோர்கீ சோத்"

பரந்தாமராஜூ கண்கள் சிவந்தான். அவளை அப்படியே பிடித்து மஹாலின் தூண்கள் ஒன்றில் சாய்த்தான். ஏணி ஏறியதுபோல் அவளுடன் கலந்தான். வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது. அவள் வியர்வையும் வெள்ளைவெளேர் என்று அவள் உடம்பும்-நிர்வாணமும்-ஆங்காங்கே சில இடங்களில் கன்றிப்போன சிவப்புகளும்-யார் யாரோ விளையாடிய விளையாட்டுகளின் எச்சமாய்-வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது, அது என்ன?

அவன் சில்லிட்டு நின்றுபோனான். பாபி முகத்தைத் துடைத்துக் கொண்டு எதுவும், பேசாமல் அந்த ஹக்கோபா பாவாடையை எடுத்துக் கட்டினாள். அந்தப் பட்டுச் சுங்கடிப் புடவையை எடுத்துக் கட்டிக் கொண்ட அவளைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. மூச்சு திணறியது அவளுக்கு. என்ன ஆயிற்று? அவள் பிறந்ததிலிருந்து இன்றிரவுபோல் ஓரிரவை இவனைப்போல் ஒரு மிருகத்தை அவள் பார்த்ததே இல்லை. அனுபவித்ததே இல்லை. செக்கிலிட்டு ஆட்டியது போல இருந்தது. ஜாக்கெட்டைக்கூட அவள் போடவில்லை. எடுத்துத் தோளில் வீசியபடி அவள் புறப்பட்டாள். அவளுக்கு இப்போது உடனே ஓர் ஆண்பிள்ளை வேண்டும். அவளைத் தேடித்தான் ஆண்கள் வந்திருக்கிறார்கள்.

இன்றைக்குப் பரந்தாமராஜூ அந்த ராத்திரி நேரத்தில் அவளை ஓர் ஆம்பளையைத் தேட வைத்து விட்டான். யாரிடம் போவாள்? அவளுக்கு யார் கிடைப்பார்கள்? தாங்க முடியவில்லை. மிகக் கேவலமாக உணர்ந்தாள். ஏனோ திரும்பிப் பார்த்தாள். என்ன ஆச்சர்யம்? அவன் பரந்தாமராஜூ தன் கால்ச் சட்டையைக் கழற்றிக் கொண்டு நின்றான். அந்த நீளமான கால்ச்சட்டை அதன் மேலிருந்து கீழ்வரை ஒரு கோடாய் பால் நிறத்தில் விந்து வழிந்து இருந்தது. இன்னும் வடிந்து கொண்டிருந்தது. அவளால் கழுத்தைத் திருப்ப முடியவில்லை. இருட்டில் அவள் நிற்பது தெரியாமல்தான் அவன் பரிசோதித்துக் கொண்டிருந்தான். அப்போது அவள் விரும்பாத அது நடந்தது. இவ்வளவு நேரம் அவளும் அவனும் மட்டும் இருந்ததாக எண்ணிய அதே மஹாலில் இப்போது நகர்ந்து வந்துவிட்டபின் அவளறியாமல் இன்னொருத்தியும் நடந்ததற்கு சாட்சி கண்கண்ட உண்மையாய் அதோ–அங்கே பரந்தாமராஜூ நின்றிருந்த தூண் மறைவில் வெளியே வந்த ஜம்னா; ஜம்னாவுக்கு இங்கிருக்கும் படிகளின் விளிம்பில் இருளில் நின்று கொண்டிருக்கும் பாபியைத் தெரிய நியாயமில்லை. ஜம்னா எல்லாவற்றையும் பார்த்து அங்கேதான் நின்றிருக்கிறாள். இனி ஜம்னாவை ஒழித்துக் கட்ட வேண்டும்–பரந்தாமராஜூ கைகாரன் மட்டுமல்ல. துரோகிப் பயல். இவர்களுக்குள் என்ன இருக்க முடியும்? காசநோய் வந்த மாதிரி கிழத்தனமாய் நரைத்து உழண்டுவிட்ட ஜம்னாவிடம் என்ன இருக்கமுடியும்? என்ன இருக்குமென்று இவன் தேடுகிறான்? அப்படியே அந்த அனாதைப் பிணத்தைப் பிடித்து முழங்காலின் கீழே அவள் கழுத்தை நெரிக்க வேண்டும். என்னதான் செய்கிறான் பார்ப்போம். நான் போய்விட்டேன் என்றா நினைக்கிறீர்கள்? எத்தனை முறை மறுபடி மறுபடி என்னை உறிஞ்சி விட்டதுபோல்–துரோகி!

ஆத்திரத்தை அடக்கமுடியாமல்–இன்னது செய்யமுடியும் என்று தெரியாமல்–படிகளில் இறங்கி உருவத்தை மறைத்துப் பதுங்கி நின்றாள். அவளுக்கு உடல் கொதித்தது. அந்தப் படிகளிலேயே குப்புறப்படுத்து தலையை மட்டும் வெளியில் வைத்து மார்புகளைப் படிகளில் அழுத்தி அவள் தன்னை அந்தப் படிகளுக்கே தந்து சில்லிட்டுப் போகும் வரை அங்கேயே கிடந்தாள்–வெகுநேரம் பார்த்துக் கொண்டு–பரந்தாமராஜூவையும் நவ்கரீப்பெண் ஜம்னாவையும் அந்த மங்கிய லாந்தர் வெளிச்சத்தில் அங்கே நிகழ்ந்த எல்லாவற்றையும் பார்த்த பாபிக்கு எது முடியவில்லையோ அது நவ்கரீப் பெண்ணால் நடந்தது சாகஸம் ஏதுமில்லை. பாபியைப்போல் நிர்வாணமாகவில்லை. பாய்ந்து

ஏறி உலுக்கவில்லை. முழு நிர்வாணமாகிவிடவில்லை. மன்மதப் பயிற்சிகள் எதுவும் செய்யவில்லை. மயக்க மருந்து லாகிரி எதுவும் போடவில்லை. எங்கே கற்றாள் இதையெல்லாம்? இதையும் பதுங்கி ஒளிந்திருந்து பார்க்க வேண்டுமா? விதியா? தன்னால் முடியாதது எது என்றவள் கண்டு கொண்டாளா? உடல்-கொதிப்பு அடங்கும் வரை அங்கேயே கிடப்பது என்று தீர்மானித்ததும் வேறென்ன செய்வது? நாளை முதல் அவள் இங்கே இருக்கக்கூடாது. அவனையும் சும்மாவிடக்கூடாது. அவள் அங்கேயே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளிடம் இல்லாதது என்ன?

அங்கே அது நடந்து கொண்டிருந்தது.

இனிமேலும் அவளால் தாங்கமுடியாது. அவள் படிகளில் குப்புற முகத்தையும் அழுத்திக் குலுங்கி அழுதாள். வெகு நேரம் கழித்து நிமிர்ந்தபோது மஹால் இருண்டு கிடந்தது. அந்த அரிக்கேன் விளக்கும் அணைந்து கிடந்தது.

பாபி படியிறங்கி கீழேபோனாள்.

# 5

மஹாவின் இருளுக்குள்ளே இறுகும் மூச்சொலிகள்.

அவளின் முனகல்கள்

'மஹ்ராஜ்-மஹ்ராஜ்'லென்ற கெஞ்சல்கள் "பாபீ அங்கே நிக்கிது மஹ்ராஜ். அங்கேதான் நிக்கிது—என்னெ விட்டுடுங்கோ. நாளையோட என் வேலெ போச்சு. எல்லாருக்குந் தெரிஞ்சு போச்சு. இனிமே நான் எங்கே போவேன். அரமணெ விட்டு வெளியே போனா ஏனெக்கு யாரெத் தெரியும். பாபீ தொரத்தி வுட்டா கோல்ஹாப்பூர் போகணும். காஸ் வேணும். யார் குடுப்பா மஹ்ராஜ்? விட்டுடுங்கோ-விட்டுடுங்கோ. பாபீ கால்லெ போய் வுழுந்துடறேன். நான் ஒளிஞ்சு ஓங்களெப் பாத்தது தப்பூன்னு அவ கால்லெ விழுந்து பொரண்டாப் போவுது. மராட்டியவுங்கோ நாலு ஆம்பிளைங்கோ போட்டு மிதிச்சு தொவச்சு எடுப்பாங்கோ. கொதிக்கிற எண்ணெல கைவிடச் சொல்லுவாங்கோ! வுட்டாப் போச்சு. சரியாப் போயிடும். பத்தே நாள். புண்ணு காஞ்சு போகும்" பரந்தாமராஜூ அவளைவிடவில்லை. அவளது நெஞ்சின்மேல் குழந்தையாய்க் கிடந்தான் அவன். ஜம்னா ஒரு வேலைக்கார பெண் மட்டுமல்ல. வேலை செய்து செய்து உரம் பெற்ற அவளது கைகால்கள்—அடிமையாய்ப் புழுவாய் அவள் இருந்தாள் என்பதையும் எண்ணும்போது அவன்

நரம்புகளில் எல்லாம் இனந்தெரியாத ஒரு வேகம் பறந்தது. தூண் மறைவிலிருந்து அவள் வெளிவந்தபோது அவன் தன் இயலாமையை அவளும் தெரிந்து கொண்டாளா? என்ற ஆத்திரம் பொங்கியதென்னவோ உண்மைதான். அவன் ஒரு மடையனா? பெண்ணோடு ஆணாய் அவன் கலக்க முடியாதா? மலை உச்சியிலிருந்து கீழே குதித்துத் தன்னுடலைத் தானே சிதறடித்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியபோதுதான் மறைவிலிருந்து ஜம்னா வெளிவந்தாள். ஒழுகிய விந்து எத்தனை நேரம் கழித்து வந்தது? அருவருப்புத் தாங்க முடியவில்லை. ஆனால் ஜம்னாவோ "சட்டெ சல்லடம் எல்லாம் போடுங்கோ–ராத்ரியே தொவச்சுப் போட்டாக் காலேலெ காஞ்சுடும். இதூ என்ன இது–நீளமா பால் மாதிரி நனைஞ்சிருக்கே?" கலகலவென்று சிரித்தாள் ஜம்னா. திடுக்கிட்டு அவளே சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டாள். கீழே சென்ற பாபி போய்விட்டாளா? என்ற சந்தேகம் உந்தியபோது மஹால் படிக்கட்டுகளைப் பார்த்தாள். தலை குனிந்து பைத்தியம்போல் அமர்ந்திருக்கும் பரந்தாமராஜுவைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவளுக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. வாயைப் பொத்திக் கொண்டு சிரித்தாள். குலுங்கிச் சிரித்தாள். ரெண்டு பேராலும் எது முடியாமல் போயிற்றோ, அது அவளால் முடியும். அது அவளுக்கே தெரியும். பதினைந்து இருபது வருடங்களுக்கு முன்னால் மஹாராஷ்ட்ரத்திலிருந்து மல்க்கம்பம் விளையாட வஸ்தாதுக்கள் வருவார்கள். வஸ்தாதுகளுக்கு உடம்புதான் ப்ரதானம். ஒவ்வொருவனும் எமன் மாதிரி இருப்பான். சிவந்த மராட்டிய உடம்பு. ரோஜாச் சிரிப்பு. பாறை பாறையாக சதைத் திரள்கள். முறுக்கிய மீசை–புலித்தோல்க் கச்சு–கரளா சுற்றி களைத்துப்போன கைகள் சிவந்த கண்களுடன் தலை மட்டும் சின்னதாக இருக்கும். மல்க்கம்பம் நடக்கும் பத்திருபது நாள் போட்டிகளிலும் இவர்களுக்கு ரா சாப்பாடு நடக்கும். தினமும் இந்த மராட்டி உடம்புகளைப் பார்க்கிற தஞ் சாவூர் மராட்டிப் பெண்களுக்குப் பெருமை தலை கொள்ளாது. மராட்டியில் நிறையவே பேசுவார்கள். அண்மனைக்கு வெளியேயும் உள்ளேயும் உயரமான மல்க்கம்பத்தின் மேலே கரகரவென்று சுழலும்போது மனஸைப் பறி கொடுக்காமலிருக்கவே முடியாது–இந்த மல்லர்களுக்கு அநேகமாகப் பெண் தொடர்பு இருக்காது. இவர்கள் உடம்புகளுக்கு எதிரி பெண் உறவு. ஆனால் யாராவது ஒரு தஞ்சாவூர்க்காரி மராட்டிப் பெண்ணுக்கு வந்திருக்கும் மல்லன் யாராவது ஒருவனுடன் கல்யாணம் நிச்சயமாகிவிடும். நிறையப் பணம் கொடுத்துச் செலவு செய்து பெண்ணையும் கட்டிக்

கொடுத்து ஊருக்கு அனுப்பும் முன்னால் இருபது நாள் நாற்பது நாள் என்று பலமாய் விருந்து வைத்து அனுப்பும்போது பெண் அழும். காரணம் யாருக்கும் தெரியாது. மல்லருக்கும் கல்யாணப் பொண்ணுக்கு மட்டும் தெரியும். நடந்த கோளாறு. அப்புறம் ஜம்னாவுக்குத் தெரியும். ஜம்னாவைக் கட்டிக் கொண்டு கல்யாண பொண் வீட்டுக்குள் கதறியிருக்கும். அழுதிருக்கும். பாதாம் பருப்பிலிருந்து சாரப் பருப்பு வரை சாலா மிஸ்ரியிலிருந்து அம்பர் வரை அரைத்து கீரும் பாயாஸூம் புஷ்டி ஹல்வாவும் சாப்பிட்டு உடம்பைத் தேத்திய மல்லர் இதற்கு முன் ஏதாவதொரு பெண்ணுடன் படுத்திருந்தால் அல்லவா தெரியும்? ரொம்பப் பேருக்கு தெரியாது–எங்கே எதை வைக்கிறதென்று. கல்யாணப் பெண்ணை ஜம்னா கொஞ்சம் கொஞ்சமாக தடவிக் கொடுத்து விஷயத்தைக் கறப்பாள். பெற்ற தாயிடம்கூட சொல்ல முடியாத ரகசியங்களை பெண் கக்கும். அது ரகசியமேயில்லை. வெட்கக்கேடு. பயில்வானுக்குத் தொடை ரெண்டும் மிகப் பெரியதாக இருக்கும் எங்களைச் சேர்த்து வைத்து உட்காரவே மல்லர் சிரமப்படுவர். பொதுவாகவே தஞ்சாவூர் மராட்டிப் பெண்கள் கொஞ்சம் சன்னம்தான். ஜம்னாவுக்கு சிரிப்பு பொங்கிக் கொண்டு வரும். பெண் மாப்பிள்ளையோடு படுக்கமுடியாது. ரெண்டு கால்களிடையே பெண்ணால் படுத்து எழுந்திரிக்க முடியாது. பஸ்கி தண்டால் மாதிரி லேசான காரியமில்லை. பொதுவாகவே ஆண்களுக்கு எங்கேயாவது தப்புத் தண்டா செய்து கொஞ்சம் நசுங்கி கொஞ்சம் உடைந்து முழங்கால்களில் அடிபட்டு மூக்கு முதலான முக்கிய பாகங்களில் சிராய்ப்பு ஏற்பட்டுக் காயம் ஏற்பட்டிருந்தால் நல்லதாச்சே என்பாள் ஜம்னா பெரிய பெண்களிடம். 'சிச்சிச்சி' என்பார்கள் அவர்கள். சில சாதாரண மாப்பிள்ளைகளுக்குத் தஞ்சாவூர் மராட்டி பாஷையே புரியாது–பீதியில் முழிக்குங்கள். ஜம்னா சிரிப்பள்ளிக் கொண்டு போவாள். அதுக்கப்புறம்தான் மாப்பிள்ளை பெண்ணின் கிட்டே நெருங்குவார்! சில பெண்களுக்கு மாப்பிள்ளைகள் போடுகிற ஆட்டம் பத்தாது உணவில் சுண்ட்யா–பிரியாணி–கொடிக்கறிமா–அக்னிமாஸ் என்று விதவிதமன மாமிச பலகாரங்களைச் செய்து கொடுத்து விடுவார்கள். மாப்பிள்ளை விருந்தா? சும்மாவா? கோல்ஹாப்பூர் மாப்பிள்ளைக்கு தஞ்சாவூர் அரண்மனை சாப்பாடு ரொம்ப அசத்திவிடும். அநேகமாக ஒவ்வொரு நாளும் கல்யாணப் பெண்ணுக்கு முன்னாலேயே அசந்து போய்விடுவார். இங்கெல்லாம் ஜம்னாவின் கைபாகம்தான் ஜெயிக்கும். வேறொன்றுமில்லை. காலை மாலை சுக்குக் கஷாயம். பொதுவாக முரட்டுக் காரியம்

செய்கிற ஆண்களெல்லாம் அனேகமாகப் பெண்டாட்டியிடம் தோற்பதன் காரணமே இதுதான். கொஞ்சம் தடிமனான மாப்பிள்ளை என்றாலே ஜாக்ரதை என்று அர்த்தம். பெண் தடியாக இருந்தாலும் இதே ஆபத்துதான். ஜம்னாவுக்கு பரந்தாமராஜூவின் வாகு புரிந்துவிட்டது. பரந்தாமராஜூவும் ஏறக்குறைய ஒரு மல்லன்தான். மல்க்கம்பம் செய்தவன் அல்லவா? பாம்பு மாதிரியான உடலும் ஏராளமான கஞ்சா–பாயாஸ்–சாராயம்–அவனது வேகம் தீவிரமானதாய் இருந்தாலும், அப்பழுக்கில்லாதவன்–பெண்ணுறவு இல்லாதவன்–அல்லவா?

அவன் பாபியிடம் பட்ட பாட்டை தூண் மறைவிலிருந்து அவள் பார்த்துக் கொண்டுதானே இருந்தாள். தப்புதான் எந்த ஆணும் தராத ஏதோ ஒன்றை பரந்தாமராஜூ அவளுக்குத் தந்து பைத்தியமாக்கி இருந்தான். இனி பரந்தாமராஜூவை அவளாலும் மறக்கவே முடியாது. அப்படி என்ன செய்துவிட்டான் அவன்? அதுதான் மாயம். உடம்பும் மனசும் எங்கோ ஓரிடத்தில் மாய முடிச்சிட்டிருக்கு. அந்த முடிச்சைத் தன் விரல்களில் கோர்த்துக் கொண்டுவிட்டான் பரந்தாமராஜூ. இனி ஜம்னா அவன் அடிமை தாசி–பைத்தியம்.

பாபியை அவள் ஒதுக்கமுடியாது. பரந்தாமராஜூவை பாபிதான் கொண்டு வந்திருக்கிறாள். பாபிக்கு பரந்தாமராஜூவின் உடலின் மனசின் வாகும் வழியும் புரியவில்லை.

பரந்தாமராஜூ முரடன். கொண்டதைவிடாத மூர்க்கன். முதல் பார்வையிலேயே ஜம்னா அதைப் படித்துவிட்டாள். என்ன தைர்யம் அவனுக்கு? பத்து நிமிஷம்கூடப் பழகாத நவ்கரி பெண்ணை இன்னொருத்தர் வீட்டு முன்னறையில் வாரிக் கட்டிப் பிடித்து எங்கெங்கெல்லாம் முத்தமிட்டான்? அவளுக்கு மறக்குமா? அவனுக்கா சத்தில்லை, முதலில் அவன் முத்தமிட்ட இடம் அவனே அறியாமல் அந்த இடம் அவளால் யாரிடமும் சொல்ல முடியாத இடம்–கால்களில்கூட முத்தமிட்டான். அவள் உதடுகள் அப்போது ஏங்கிய ஏக்கம்? அது என்ன? அழுக்கான பாவாடையும்–தேய்ந்த உடம்பும்–வியர்வை நாற்றமுமான தன்னை பாபி இன்று மணக்க மணக்க தன்னைவிட அழகாய் திரட்சியாய்... எங்கே கோளாறு? பாபியால் ஏன் முடியவில்லை? பாவம்–இதுவும் ஒரு கல்க்கம்பம் என்பது பாபிக்கு ஏன் தெரியவில்லை? பரந்தாமராஜூவின் மூர்க்கம் திரும்பும் வரை அவனைக் காலதாமதப்படுத்தி... பாபியை ஓடிப் போய் ஏன் ஏறினாள்? அந்தக் குதிரை அவளைக் கீழே தூக்கி

எறிந்தது. உன் காலடியில் தானே கிடக்கிறான். ஏன் அவசரம்? பல் நாட்களாய் விளக்கெண்ணெயும், வாழைச்சாறும் பூசிப்பூசி வழுவழுப்பாக்கிய மல்க்கம்பம்-முரட்டுத் தனம் மட்டும் அங்கே செல்லாது. மல்க்கம்பத்தில் ஏற வேண்டுமானால் முழுவதையும் தன் உடம்பாலேயே துடைத்தெடுக்க வேண்டும். ஏறத்தாழ மல்க்கம்பத்தில் ஏறுபவனும் இன்னொரு மல்க்கம்பமாக வேண்டும். ஏறத்தாழ மனைவியும் புருஷனும் அப்படித்தான். ஏதோ ஒரு சமநிலை வருகிற வரை காத்திருக்க வேண்டும்.

பாபி இருளிலே நின்று கொண்டிருக்கும்போது ஜம்னா வேறென்ன மாயம் செய்தாள்?

ஒன்றுமில்லை. அவனுக்காகவே நன்றாகக் குளித்திருந்தாள். க்ராம்பு அரைத்த பாயாஸ் அவனுக்குப் பிடிக்கும். கொஞ்சம் புஜங்களிலும் மார்புகளிலும் பாயாஸ் பூசிக்கொண்டாள். பரந்தாமராஜூ இனி அவளுக்கே வேண்டும். அவன் தொடும் வரை அவள் தொடாமல் காத்திருந்தாள்.

அவன் கால்களைக் கட்டிக் கொண்டாள். மிருதுவாக முலைகளினால் மோதினாள். அவளிடமிருந்த ஒரே அழகு சொத்தான தலைமுடியை அவிழ்த்து அவன் பார்க்காத மார்பை மூடிக் கொண்டாள். அவன் முடியைப் பிடித்து உலுக்கியபோதும் சிரித்தாள். அவன் அவளேயானாள். அவன் முகம் சுருங்கும்படியாய் ஏதும் செய்யாமல் அவன் உதைத்தபோதும் காலை நக்கினாள்.

இதுதான் ரகஸ்யம்.

இதுதான் மல்க்கம்பம் ஏறும் வழி

தூண் மறைவிலிருந்து அவள்போனபோது அவன் சுயமிழந்திருந்த வேளை, விரல்களால் மெல்லத் தொட்டாள். அவன் தலைமுடியைக் கோதினாள். அவன் கைகளைப் பிடித்துக் கொண்டாள். அவன் இடுப்பைக் கட்டிக் கொண்டு அழுதான். பயங்கலந்த அழுகை-அவளுக்கு மட்டுமே கேட்ட அழுகை. அவன் ஜம்னா-ஆண்களில் எல்லாவித கோரங்களையும் படித்தவள்-நவ்கரீப் பெண்-வேலைக்காரி-அடிமை.

அவள் ஜம்னாதான் என்று தெரிந்ததும் அழுகை அதிகமாகியது.

"என்னால ஒண்ணும் முடியலியே ஜம்னா! ஐயோ-என்னால ஒண்ணும் முடியல-எனக்கு ஒண்ணுமில்ல. சத்தே இல்ல. இனிமே என்னால ஒண்ணும் செய்ய முடியாது. என்ன வுட்டுப் போய்டு"

மடக்கிய கால்களுள் தலையைப் புதைத்துக் கொண்டான் ஜம்னாவின் கைகள் அவன் முதுகுத் தண்டுவடத்தைத் தடவியபடியே கீழிறங்கியது.

"யார் சொன்னா ஓங்களாலே ஒண்ணும் முடியாதுன்னு? மஹ்ராஜ்–இன்னிக்கு நீங்கோ ஓதச்சீங்களே என்னெ–மூணு மணி நேரம் எனக்கு வலிச்சுது–தெரியுமா? இன்னா மஸ்த்–நீங்க கையெப் புடிச்சா வலி கழண்டு போகுது, தெரியுமா–என்னை ஏமாத்தப் பாக்காதீங்கோ"

அவள் கைகள் இப்போது அவன் மடியில் கிடந்தன. இன்னொரு கையால் அவன் மார்பைக் கிள்ளினாள் ஜம்னா. கொஞ்சம் வலிக்கிற மாதிரிக் கிள்ளுதான். கிள்ளின இடம் அவனது மார்பின் முலைவட்டம்.

"அடே மஹ்ராஜ். ஓங்களுக்கு உடம்பு பூரா சிலுத்துப் போச்சே!"

ஆம். அவன் உடலெங்கும் புல்லரித்தது உண்மைதான். அவளது இன்னொரு கை எங்கோ கிள்ளிவிட்டது.

"என்னாது நீ செய்ற வேலை" என்று அவன் கேட்கும் முன்னமே...

"இதூ என்னாது? ஓங்க சல்லடைத்துல இப்டி ஒழுக விட்ருக்கீங்க. அசிங்கம் அப்பப்பா... சீச்சீச்சி?

அவன் தலையைப் பிடித்து தனது மார்புகளுக்கு இடையில் புதைத்து அழுத்தினாள் ஜம்னா. ஜம்னாவின் கைகள்–ஒரு கை அவன் தலையைத் தன் மார்புடன் சேர்த்துக் கொள்ளவும், மற்றொரு கையால் அவன் புல்லரித்த உடம்பெங்கும் பூசி கொஞ்சம் கொஞ்சமாகக் கிள்ளி மறுபடியும் அதே உத்தியை அவள் கையாண்டாள். அப்படியே சரிந்து அவன் மடியில் அமர்ந்து கொஞ்சம் கொஞ்சமாக வழுவி அவன் கால்களைத் தழுவிக் கொள்ள–பரந்தாமராஜூ வசமிழந்தான்.

என்ன செய்கிறோம்? என்ற ப்ரக்ஞை இல்லாமலே ஒரு மூர்க்கமான வெறியை யாரிடமும் கிடைக்காத அந்தப் புதுமையை ஜம்னா என்ற அந்த வேலைக்கார பெண் நிதானமாக நிறைவேற்றினாள். அவளது வேலையை மூர்க்கத்தனமாய் அவன் பிடுங்கியபோது "மஹ்ராஜ் மஹ்ராஜ் நகோ மஹ்ராஜ் நகோ மஹ்ராஜ் நகோ" என்று கெஞ்சினாள்.

"என்னெ விட்டுடுங்க நான் நவ்கரீ பொண்ணு–என்கு யாருமில்லே–அனாதி என்னை யார் வேணாலும் எது வேணாலும்

செய்வாங்கோ. வேலெ செஞ்சு பொழைக்கணும். கை கால்போனா ஒண்ணுமில்லே. என்ன ஒண்ணுஞ் செஞ்சுடாதீங்கோ மஹ்ராஜ். படிக்கட்லே பாபீ நிக்கிது மஹ்ராஜ்—என்னெ விட்டுடுங்கோ"

அவள் சும்மாதான் சொன்னாள். ஆனால் பாபி அங்குதான் நின்று கொண்டிருந்தாள். பரந்தாமராஜூவுக்குக் கைகளிலும் கால்களிலும் வெறி ஏறியது. அவளை வாரி அணைத்தான். அவளது ஆடைகளை நீக்க அவள்விடாமல் போராடினாள். அவள் அழுதாள்.

அவன்விடவில்லை. அழ அழ அவள் திமிறத் திமிற அவளை முழுக்கவும் முழுக்கவுமாக அவள்மேல் கவிழ்ந்துவிட்டான். லாகவமாக அவனுக்கு ஒவ்வொன்றாய் எடுத்துக் கொடுத்துப் பிடுங்கிக் காட்டி—எடுக்க விட்டு மறுபடியும் பிடுங்கிக் கொண்டு இதழ்களைக் கோரி பற்களால் கடிக்கக் காட்டி—கடிக்கக் கொடுத்து அதையே பிடுங்கி எடுத்து அவனைத் தவிக்க அடித்தாள்—ஜம்னா. அதே நேரத்தில் லாவகமாய் விளக்கையும் ஊதி அணைத்தாள். மல்க்கம்பம்—வித்தை—இது அவன் காணாத வேகமாய் இருந்தது.

பரந்தாமராஜூ அயர்ந்தேபோனான். இதுதானா அது? இப்படித்தானா அது? அவன் அவளின் ருசியில் ஆச்சர்யமுற்றான். எல்லாப் பெண்களிடமும் இது நிச்சயமில்லை. அதெல்லாம் பாபியினது அதிகாரம்போல்தான் இருந்தது. "ஹா—ஹா—மஹ்ராஜ்" என்ற முனகலும்—கெஞ்சலும் மேலும் மேலும் பரந்தாமராஜூவை தீவிரப்படுத்தின. அவன் உடலுக்கடியில் அவள் புதைந்தேபோனாள். மஹாலின் இருட்டு அவர்கள்மேல் கவிந்து மூடிக் கொண்டது. அவன் காதுகளருகே அவளது தீனமான குரல் கேட்டுக் கொண்டே இருந்தது. க்ராம்பு மணமும்—அவளின் வியர்வையும்—அவளது அழுக்கு நாற்றமும் அவனுக்கு மிகவும் பிடித்தது. கண்ணுக்குத் தெரியாத தூரம் அவளை அணைத்தபடியே அவன் பயணம் செய்தான். இரவு முழுவதும் விடியும் வரை ஏன் விடிந்த பிறகும்கூட அவளது தீனக்குரல் தொடர்து அவனை சவுக்காலடித்து கிளப்பிக் கொண்டே இருந்தது. "ஹா—ஹா—நவ்கரிப் பொண்ணு—வேலைக்காரிப் பொண்ணு அனாதை. என்ன ஒண்ணுஞ் செஞ்சுராதீங்கோ" இதுதான் மந்திரம். விடிந்து மஹாலில் வெளிச்சம் பரவியபோதும் அவன் காலடியில் கிடந்தாள். காலை வெளிச்சத்தில் அவள் உடல் முழுவதும் குங்குமமாகி இருந்தது. கண்களை மூடி அவள் புலம்பிக் கொண்டிருந்தாள். "பாபீ என்னெ கொன்னுடும்—அட்ச்சி தொறத்திடும்—என்னெக் கெடுத்துட்டீங்களே மஹ்ராஜ்—பாபீ பாத்தூட்டுப் போய்டுச்சு" துணிகளை எடுத்து

மூடிக் கொள்ள முயன்ற அவளை அந்தக் காலை வெளிச்சத்தில் மறுபடியும் ஒரு முறை முழுக்க நிர்வாணமாக பார்த்தான்.

"ஜம்னா-இனிமே நீ என்னுடையவ-நீவு நா பெண்ட்லாமு புரியுதா? உன்னை நான்விட மாட்டேன்-பாபி கிட்ட உன்னை நான்விடமாட்டேன்"

"நிஜமாவ்வா மஹ்ராஜ்? நான் ஒரு வேலைக்கார பொண்ணு மஹ்ராஜ்-தாசி-ஐயோ கெட்டுப்போனவ மஹ்ராஜ்-என்னெ விட்டுடுங்க-கோல்ஹாப் பூருக்குப் போகப் பணங் கொடுங்கோ. ஓடிப்போய்டுறேன்-இங்கே இருந்தா மராட்டியவுங்க என்னெக் கொன்னுடுவாங்கோ-நான் கெட்ட பொண்ணு" அவன் தோள்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அவள் அவன் மார்புச் சதையைக் கவ்விக் கடித்து ஊதினாள். அவன் உடலெங்கும் மின்சாரம் பரவியது மீண்டும்

அவன் மீண்டும் மாணவனானான்-மணி பத்தானபோது அவனும் அவளுமாக கீழிறங்கி வந்தார்கள். எல்லா மராட்டிய முடுக்குகளிலும் "துத்தூ!" என்று காறி உமிழ்தல்களும், திட்டல்களும் கேட்டன. ஜன்னல்களிலெல்லாம் மராட்டிய முக்காடுகள்-கும்டாக்கள்-தோன்றி மராட்டியில் வசைச் சொற்களை உதிர்த்தன. இருவரும் இடிந்த சுவர்களுக்குப்பின் வெளியே வந்தபோது நான்கு வெள்ளைக் கார்கள் முந்தின நாள் அவன் செதுக்கிய ஓவியச் சிற்பத்தின் முன் நின்று பல கோணங்களில் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருந்தார்கள். நான்கு மராட்டிய இளைஞர்கள் நின்று "அது தங்களுடையது-புராதனமானது" என்று உளறினார்கள். இவர்களைப் பார்த்ததும் "தூத்தூ!" வென்று துப்பினார்கள். பரந்தாமராஜூவின் தோள்களை ஒட்டி அவன் மார்புகள் இடிக்க வெளியிலும் அவனுக்கு ஆசிரியையாகவே நின்றாள் ஜம்னா. மெல்லிய தொங்கலிட்ட அந்த மார்புகள் அவன் முதுகில் பட்டுப்பட்டு அவளை, 'அவனுக்கு அவனுக்கு' என்று உயிரூட்டிக் கொண்டு இருந்தன. அந்த வெள்ளைக்காரனிடம் ஜம்னாதான் பேசினாள்.

"இதூ இந்த ஆளு செஞ்சதூ. இந்தப்படம்" என்று கைகளில் அவர்களுக்குச் சுட்டிக்காட்டினாள். ஜம்னாதான் என்ன அழகு! இல்லாத அழகெல்லாம் தோன்ற ஆரம்பித்துவிட்டது பரந்தாமராஜூவுக்கு. அவளது முன்னறையில் அவளது தன்னம்பிக்கையையும் எந்த நேரத்திலும் அவனைக் கைவிடாமல் எந்த ஆற்றிலும் அவனோடு கைகோர்த்து இறங்கி நீந்திக் கடப்பாள். அவளுக்குப் பரந்தாமராஜூ மட்டும்போதும்.

அவன் அவளோடு இருந்தால்போதும். அவன் வேறெதுவும் செய்ய வேண்டாம். அவனிடமிருந்து பணம் வேண்டாம், அவன் சோறு போட வேண்டாம். துணிமணி வேண்டாம். நகை வேண்டாம். ஏன்? அவனுடையது ஒன்றும் வேண்டாம். அவன் மட்டும்போதும். இன்று இன்றுபோதும். இன்றிலும் இப்போதுபோதும். இப்போதிலும் இந்தக் கணம்போதும். ஆ! ஜம்னா! நீ இதையெல்லாம் எங்கிருந்து கற்றாயடி? அந்த ஜெர்மன்காரன் ஒரு ஐநூறு ரூபாய் பணத்தை அவளிடம் நீட்டி "கேன் ஐ டேக் எ ரிலீவ் ஃபிரம் திஸ் ஆர்க்கிடெக்ஸர்?" ஆங்கிலமே புரிந்ததுபோல் சந்தோஷமாக நெஞ்சை நிமிர்த்தியபடித் தமிழில் "எட்துக்கிட்டுப் போங்கோ-இந்த செவுத்தையே எட்துக்கிட்டுப் போங்களேன்"

அந்த ஜெர்மன்காரன் பரந்தாமராஜுவின் கைகளைப் பிடித்துக் குலுக்கினான்.

"கங்க்ராஜுலேஷன்ஸ்-இட்ஸ் ரியல் ஃபன்டாஸ்ட்டிக் வித் யுனீக் க்ரியேட்டிவிட்டி கேன் ஐ கெட் எ காப்பி ஆஃப் இட்ஸ் ஒரிஜினல்"

அதற்கும் ஜம்னாதான் பதிலளித்தாள்.

"நீயே எடுத்துட்டுப் போய்யா! யாரெக் கேட்டுட்டுருக்கே நீயே எடுத்துட்டுப்போ"

பணத்தை கையை நீட்டி வாங்கிக் கொண்டாள். அவனை ஒன்றும் கேட்காமலேயே எல்லாம் நடந்து கொண்டிருந்தது.

"ஹீ இஸ் எ ஜீனியஸ்? என்றான் ஒருவன்.

"நோ ஐம் நாட் அன் ஆர்ட்டிஸ்ட் மைசெல்ஃப்" என்று மட்டுமே பரந்தாமராஜுவால் கூற முடிந்தது.

மற்றொரு ஜெர்மன்காரன் ஜம்னாவைப் பரந்தாமராஜுவுடன் நெருங்கி நிற்கும்படிக் கேட்டான். அவர்கள் இவர்கள் இருவரையும் மூன்று நான்கு படங்கள் எடுத்துக் கொண்டார்கள். ஒவ்வொரு முறை படமெடுத்தபோதும் வெவ்வேறு விதமாக பரந்தாமராஜுவுடன் நின்று கொடுத்த அவளை அந்த ஜெர்மன்காரர்கள் "ஃவீலன் டாங்க்" என்று ஜெர்மன் மொழியில் நன்றி சொன்னார்கள். அவளை அப்போதும் வியந்து கொண்டான்-அவனுக்கு இனி என்ன செய்வதென்று தெரியவில்லை. எங்கே போவது? என்ன செய்வது? ஜம்னா ஒரு பிரச்னையா? அவன் ஒரு பிரச்னையா?-அவளுக்கு-என்றெல்லாம் இனித்தான் தெரியும்.

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இனி ஜம்னா இல்லாமல் அவனால் எதுவும் முடியாது. உள்ளுணர்வெல்லாம் அவளே நிறைந்திருக்கிறாள். தாகமாகவும்–நீராகவும் அவளே இருக்க முடியுமா? பசியாகவும் உணவாகவும் அவளே இருக்கிறாளே!

ஜம்னாவின் நினைவே இத்தனை நெருங்கிவிட்டது. அவளுக்கோ இந்த விசாரம்தானும் இல்லை. அரண்மனையை விட்டு வெளியேறுவதில் அவளுக்கு எந்தச் சஞ்சலமும் இல்லை. சொல்லப்போனால் அவள் அரண்மனையிலேயேவா இருந்தாள்? குட்டிச்சுவர்–புழுதிமேடு–அது மழை வந்தால் குளிரும் கூட வரும். கந்தல் துணிகளில் சுருண்டு கிடக்க வேண்டும். காலையிலிருந்து மாலை வரை ஓயாமல் யாருக்காவது தொண்டூழியம். இனி அதெல்லாம் இல்லை. அம்மி அம்மியாக மசால் அரைக்க வேண்டியதில்லை. பாயாவுக்குக் க்ராம்பும்–கசகசாவும் கிலோ கணக்கில் முந்திரிப் பருப்பும்–கடல் அம்பரும் அரைத்துக் காய்ச்சி எடுக்க வேண்டியதில்லை. இனி யாருக்கும் அவள் தாசியில்லை. இருவரும் அரண்மனை வெளி வாசல் வழியாக வெளியே வந்தார்கள்.

பரந்தாமராஜூ திரும்பி அந்தப் புழுதி மேட்டைப் பார்த்தான். அவன் செதுக்கிய சிற்பம் அவன் கண் முன்னே விரிந்தது. அந்த ஜெர்மன்காரர்கள் இன்னும் அங்கேதான் நின்று வியந்து கொண்டிருந்தார்கள். ஜம்னா அழகாய் இருந்தாள். கொஞ்சம் சன்னம். முக்காட்டை அவன் போட வேண்டாமென்று எடுத்துவிட்டான். அவளது பின்னிய தலைமுடியையும் தளரப் பின்னச் சொல்லி அவளது மராட்டி சாயல்களை மாற்றியிருந்தான். மராட்டிய நவ்கரி பெண்களுக்கே உரித்தான அந்தப் பெரிய மடிப்புகள் நிறைந்த கறுப்புப் பாவாடையைக் கழற்றி எறியச் சொல்லிவிட்டு மெல்லிய ஜம்கி பாவாடையையும் சாதாரண டூபைடு ஜாக்கெட்டும் அரக்குக் கலரில் சிவப்பு பார்டருடன் கூடிய பழைய பட்டு தாவணியும் அணிந்து அரண்மனைச் சின்னங்கள் எதுவும் இல்லாமல் மிக எளிமையாகத் துள்ளலுடன் நடந்து போகிற அவளை வியப்புடனும் பூரித்த சந்தோஷத்துடனும் அவள் பின்னே நடந்தான் பரந்தாமராஜூ.

என்ன செய்ய போகிறாள் இவள்? ஒருவருக்கொருவர் மிகத் தேவையாயிருந்த நேரமிது.

குறிப்பாகப் பரந்தாமராஜூவுக்கு. என்ன செய்யப் போகிறான்?

கோட்டைக்கு வெளியே வந்த அவன் ஜம்னாவைப் பார்த்து–

"எங்கே போய்ட்டே இருக்கே ஜம்னா? எனக்கொண்ணும் புரியலியே?" என்றான்.

அவள் லேசாய்ச் சிரித்துக் கொண்டே "வாங்கோ சொல்றேன்-எல்லாம் இங்கியே சொல்லணுமா?" என்றாள்.

அவள் கண்களில் அவன்மீது கொண்ட பெருமிதம். இயல்பான அவள் துணிச்சல். அவனை ஆட்கொண்ட அவள் எளிமை- யாவும் அவனுக்கு முன் நடந்தன. அவன் நாயனா-சரளா-லல்லு-எல்லோரையும் எப்படிப் பழி வாங்கியிருக்கிறான் என்பது தெரிய வேண்டாமா? அங்கெல்லாம் ஜம்னாவைக் காட்ட வேண்டாமா? அவளுக்கும் எதுவும் தெரியாது. பதின்மூன்று வயதிலிருந்து அவள் அரண்மனைப் பூச்சியாக அடங்கி இருந்தவள்.

வெளியே ஒன்றும் தெரியாது. என்றாலும் இப்போது பரந்தாம ராஜூவுக்குத்தான் ஒன்றும் தெரியாது. எங்கே போய்க் கொண்டிருக்கிறார்கள்?

அவர்கள் இருவரும் கீழ் வாசலில் இறங்கி நடந்தார்கள். அகழ் மேடு-வண்டிப்பேட்டை-எல்லாம் தாண்டி பூக்காரத் தெரு வரை நீள நடந்தார்கள். பூக்கார ரெண்டாந் தெரு முனையில் ஒரு சிறு குடிசை குடிசைத் திண்ணையில் நாலு பெண்கள்-இளவயதுக் குட்டிகள் உட்கார்ந்து குவியல் குவியலாக மல்லிகை-ஜாதி-முல் லை-சம்பங்கி-இருவாட்சி-ரோஜா-பூக்களை வைத்துக் கதம்பம் கட்டிக் கொண்டிருந்தார்கள். ஜம்னா குடிசைக் கதவைத் தட்டியபடி "ராஜலக்ஷ்மி-ராஜலக்ஷ்மி" என்று கத்தினாள். வாசலில் நின்ற பரந்தாமராஜூவைப் பூ கட்டும் பெண்கள் இமைக்காமல் பார்த்தனர்.

ஒருத்தி சொன்னாள்

"சும்மாதான் சாத்தியிருக்கு. கதவைத் தள்ளிட்டு உள்ளே போங்க"

கதவை தள்ளி திறந்தபடி ஜம்னா உள்ளேபோனாள். உள்ளோ யாரையும் காணோம். "ராஜலக்ஷ்மி-ராஜலக்ஷ்மி"

உள்ளே இருந்து கருங்காலிச் சிற்பம்போல் நெய் பூசிய கறுப்பு நிறத்தில் உள்ளே இருந்து துள்ளி வந்தாள் ராஜலக்ஷ்மி.

"வாங்கம்மா-வழி தெரிஞ்சுதாம்மா எங்க வூட்டுக்கு வர்றதுக்கு? ஏ... சுலோச்சனா-ராமலச்சுமி-கருப்பாயி-நாஞ் சொல்லுவேம்ல

மிராட்டியவுங்க-ராஜா வூட்டுக் காரவுங்கன்னு-சொல்ல மாட்டேன் வர்ங்கடீ-வந்து பாருங்க"

திண்ணையில் உட்கார்ந்திருந்த குட்டிகள் உள்ளே ஓடி வந்தார்கள்

"ஏக்கா-யேக்கா-அவுங்க வூட்டுக் காரவுங்க வாசல்லெ நிக்கிறாங்கக்கா"

"எனக்குத் தெரியாம கல்யாணமாகிப் போச்சு! அவர உள்ற வரச் சொல்லுங்கடீ குட்டிகளா!"

ராமலக்ஷ்மி வாங்கி வந்த கலர் பாட்டில்கள் ஒன்றை ஒன்று மோதிக் 'கிலிங்' கிட்டின. சுலோச்சனா யாரையும் கேட்காமல் நாலு முழம் மல்லிகை சரத்தை அறுத்து ஜம்னாவின் தலையில்-அடர் கூந்தலில் அவளே சூடினாள். பரந்தாமராஜூ குடிசைக்குள் வந்ததும் குடிசை நிரம்பியது.

எட்டுக்கு ஆறு சதுரம் அந்தக் குடிசை. ரெண்டு பேர் இருந்தாலே எதேஷ்டம். ஆறேழு பேர் நின்றார்கள். ராஜலக்ஷ்மி கேட்டாள்.

"யக்கா-இவங்க கலியாணத்துக்கு நீயி போலியா?"

அவள் நாடியைப் பிடித்துக் கொஞ்சியபடியே ஜம்னா சொன்னாள்.

"இது அவசரக் கல்யாணம்டி பொண்ணே"

பரந்தாமராஜூ ராஜலக்ஷ்மியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

ஜம்னா சொன்னாள்.

"இதுதான் ராஜலக்ஷ்மி. அரண்மனைக்குப் பூ கொண்டு வரும். ரொம்ப ஸ்நேகிதம்"

ராஜலக்ஷ்மி சொன்னாள்.

"அரண்மனையிலே சாப்ட்டு வளர்ந்ததுங்க இந்த ஒடம்பு. ஜம்னாம்மா கையால சாப்புடாத நாளே இல்ல. எங்கம்மா செத்தப்பொரம் அரண்மனைக்குப் பூ கட்டிக் கொடுக்குறது நின்னு போச்சு"

"ராஜலக்ஷ்மிக்குச் கல்யாணமானதுலேர்ந்து இவ அரண்மனைக்கு வர்றதும் நின்னு போச்சுங்க" என்றாள் ஜம்னா.

"இப்போ எங்கே? அவரு வேலைக்கு போயிருக்காரா?" என்றான் பரந்தாமராஜூ

“இல்லீங்க அத ஏங் கேக்கறீங்க? அது வேறொருத்தியோட ஓடிப்போச்சு” அதற்குமேல் அவனால் ஒன்றும் பேச முடியவில்லை.

“கலரை சாப்பிடுங்கோ மச்சான்” என்றாள் கருப்பாயி. அவள் மச்சான் என்று கூப்பிட்டது அவனுக்கு ரொம்பப் பிடித்தது. அவன் கலரை எடுத்து ஒரு மிடறு வாயில் ஊற்றினான். அவ்வளவுதான் புரையேறியது. அது கலரில்லை. வர்ணத் தண்ணீர். ஸோடாவைவிடக் கேவலம். ராஜலக்ஷ்மியின் கைகளை பிடித்துக் கொண்ட ஜம்னா கலங்கிய குரலில் சொன்னாள்.

“ராஜலக்ஷ்மி நானும் இவுரும் அரமணையை விட்டு புறப்பட்டு வந்துட்டோம். உங்க வீட்டுக்கு தங்க வந்துருக்கோம். ரெண்டே நாள். ஒரு வீடு வாடகைக்குப் பாத்தூட்டு போயிர்றோம். ரெண்டு நாள் தங்கணும். உனக்கொண்ணும் தொந்தரவா இருக்காதே? எனக்கு வேற யாரையும் தெரியாது. அவருக்கு ஒண்ணும் புரியாது”

பெண்கள் மூன்றும் சந்தோஷத்துடன் பதில் கூறின.

“தங்குங்கக்கா. எங்களோட தங்குங்க. மச்சானுக்குப் பயமா இருக்கா?” என்று கிண்டல் அடித்தாள் ராமலக்ஷ்மி.

சற்று நேரத்தில் ஒரு குடும்பம்–ஒருஉறவு–எத்தனை ஸ்நேகிதம் முறை சொல்லி அழைத்து எத்தனை இணக்கம்? மந்திரம்போல் இருந்தது–எல்லாம் மாயம்போல் இருந்தது பேச்செல்லாம்.

ராஜலக்ஷ்மி அழுத்தக்காரி.

“இங்கேயே ஒரு வூடு காலியிருக்கு. ஆனா குடிசைதான். நாலு பக்கம் சுவர் இருக்கும். ஒரு கதவு. பின்னால கெணறு இருக்கு. ஓலைக் கக்கூஸு. ஒரு கொல்ல. எழுவத்தஞ்சு ரூவா வாடகை வீட்டு சாவிகூட என்ட்ட இருக்கு. இன்னிக்கே குடி போறீங்களா. நெறைஞ்ச அம்மாவாசை. வீட்டப் பாக்குறீங்களா!” என்றாள்.

ஜம்னாவின் முகமும் அகமும் மலர்ந்தது.

இடுப்பிலிருந்து நூறு ரூபாயை எடுத்துக் கொஞ்சங்கூடத் தயங்காமல் அவனையும் கேட்காமல் “இந்தா ராஜலக்ஷ்மி. நூறு ரூபா அட்வான்ஸ்” என்று நீட்டியதைப் பார்த்து வியந்தாள் ராஜலக்ஷ்மி.

சற்றே சாய்வாக இருந்த எதிர் சரகில் இருந்த அந்தப் புதிய குடிசை மிக அழகாக இருந்தது. முன்னே திண்ணை தாழ இறங்கும் வரை–புதுக்கித்து வேய்ந்திருந்தது.

“வீடு புடிச்சிருக்கா?” என்றாள் சுலோச்சனா.

உள்ளே நுழைந்தார்கள்.

ராஜலக்ஷ்மியின் வீட்டைவிடச் சிறியது அது. ஆனால் ஜம்னாவுக்கு ரொம்பப் பிடித்தது. காரணம் அவளுக்கென்று அவள் வாழப் போகும் முதல் வீடு. அதை அவள்விடத் தயாராயில்லை.

"அக்காளுக்கு சந்தோஷத்தைப் பாரேன். வந்தவொடனே வீடு கெடைச்சிருச்சு. மச்சான் ஒங்களுக்கு வூடு பிடிச்சிருக்கா!" என்றாள்.

உள்ளே போய் சுவற்றில் சாய்ந்து கொண்டு கால்களைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தான் பரந்தாமராஜூ. ஒரே பேச்சும் சிரிப்பொலியுமாய் ஜம்னாவுடன் வம்பளத்து கொண்டு நின்றன. அந்தப் பெண்கள். அவள் கழுத்து கை நகைகளையெல்லாம் தொட்டு தடவிப் பார்த்து என்னென்னவோ கேட்டனர் அவர்கள். அந்தப் பெண்களில் எல்லோரும் எத்தனை சந்தோஷமாய் லயித்திருக்கிறார்கள்? நவ்கரீப் பெண்ணான ஜம்னாவை "அரண்மனைக்காரி" என்றார்கள். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் காலி க்ளாஸ் பாட்டில்களில் இருந்த எதையோ அவன் முன்னால் உடைத்து "இப்ப இத சாப்டுவீங்களாம்–கொஞ்ச நேரத்துலே சாப்பாடு ஆயிடுமாம்–ராஜலெச்சுமி அக்கா சோறு கொண்டாரேன்னிச்சு." என்றாள். அந்த சோடா பாட்டிலில் இருந்து நாட்டுச் சாராயத்தை எடுத்து முகர்ந்து பார்த்தான். குடிக்க அவனுக்கு விருப்பமில்லை. காரணம் ஜம்னா. அவள் நினைக்கும் போதே போதை தந்தாள். அவள் வரவை எதிர்பார்த்துச் சலித்தான் பரந்தாமராஜூ. அவள் வரவில்லை. அவன் எழுந்து சாராயத்தை ஓரமாக ஒதுக்கி வைத்து விட்டு வெளியே வந்து நின்றான்.

வரிசை வரிசையாகக் குடிசைகள். எங்கு பார்த்தாலும் திண்ணைகளில் பூ கட்டுகிறவர்கள் உட்கார்ந்து–ஆண்பெண் அடங்கலும் குடும்பம் முழுவதுமே பூக்கட்டிக் கொண்டிருந்தார்கள். தெருவெங்கும் கரிக் குழந்தைகள். அந்தத் தெருவுக்கே நடுநாயகமாக நடுவில் காளி கோயிலில் ரெண்டு நாளில் உற்சவம் இருக்கிறதாம். தீ மிதி–பால்க்குடம்–அலகு வாங்கி காளி கோயில் கொஞ்சம் புராதனமானதுதான்.

காளி கோயில் முன்னாள் நீளப் பந்தல் போட்டிருந்தார்கள். பந்தலில் அம்மணமான குழந்தைகள் சிறுமிகள்–ஒன்றையொன்று அடித்துத் துரத்தி விளையாடிக் கொண்டிருந்தன. ராஜலக்ஷ்மி வீட்டுத் திண்ணையில் ஒரு கை மடக்கி அமரிக்கையாக

அவர்களோடு உட்கார்ந்து ஜம்னாவும் மின்னல் வேகத்தில் அவர்களுடன் போட்டியிட்டு பூக்கட்டிக் கொண்டிருந்தாள். பூக்கட்டுகிற பெண்கள்கூட அவளது வேகத்தைப் பார்த்து வியந்தார்கள். ராமலக்ஷ்மி அங்கிருந்தே கூப்பிட்டுச் சொன்னாள்.

"மச்சான் அக்கா பூக்கட்டுறதைப் பாத்துக் கண்ணு வச்சுடாதீங்க. நாங்களே போட்டி போட முடியாது போலிருக்கு. அவ்வளவு இஸ்பீடு" என்று வியந்தாள் அவள். நிஜந்தான். ஜம்னா அவர்களுள் ஒருவராய்க் கலந்திருந்தாள். திண்ணையில் ஏறி உட்காரும்படி அங்கிருந்தே சைகை காட்டினாள் அவள்.

"மச்சானுக்கு அக்காவ வுட்டுட்டு கொஞ்ச நேரமிருக்க முடியல" என்று கேலி பேசினாள் கருப்பாயி.

ராஜலக்ஷ்மியை மட்டும் அங்கே காணும். இந்த உலகம் அவனுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ஜம்னாவின் இந்தப் போக்கும் அவனை ரொம்ப ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. ஒரு மணி நேரத்தில் பெரிய பந்து பூ மூன்று கட்டிவிட்டாள். நின்று பார்த்து ஜம்னா வராததால் மீண்டும் குடிசைக்குள் வந்து லேசாகக் கதவைச் சாத்தி விட்டுச் சாணம் பூசிய அந்தத் தரையில் அமைதியாகச் சாய்ந்து கொண்டான். கண்ணயர்ந்தான். எப்போது விழித்தான்? நல்ல நடு மதியம். இரண்டரை மணி இருக்கலாம். விழித்தபோது இன்னுமா அவள் வரவில்லை. அவனுக்கு லேசாகத் தலை வலித்தது. வயிற்றுக்குள் ஏதோ பிரண்டுவதுபோல் ஏதோ ஒரு பக்கத்துக் குடிசை ஒன்றிலிருந்து அந்த வெயில் வேளையில் தப்பட்டை ஒன்றை தட்டி எழுப்பிக் கொண்டிருந்த சப்தத்துக்கும் பசிக்கும் ஏதோ தொடர்பிருந்தது போலத் தெரிந்தது. இம்முறையும் பரந்தாமராஜூ வெளியில் வராமலேயே கதவை ஒருக்களித்து அங்கிருந்தே பார்த்தான் எதிர் வீட்டுத் திண்ணையில் பூக்கட்டும் வேலை காலையில் தொடங்கிய வேகத்தோடு இன்னும் படுதுரிதமாக முன்னேறிக் கொண்டிருந்தது. ஜம்னாவும் அவர்களுடன் உட்கார்ந்து இன்னும் மும்முரமாய் பூக்கட்டிக் கொண்டிருந்தாள். இவர்கள் யாருக்கும் பசிக்காதோ! அவனுக்குப் பசித்தது. நல்லவேளை. அவர்கள் அனுப்பிய சாராயத்தை அவன் குடிக்கவில்லை. குடித்திருந்தால் அவ்வளவுதான். என்ன? அவள் வருவதாக இல்லையா? வெளியில் இறங்கி வானத்தைப் பார்த்தான். மணி நாலிருக்கலாமே?

"என்ன மச்சான்? அக்காவ அனுப்பட்டா–இஞ்சயெல்லாம் வேலை செஞ்சாதான் சோறு. அதுவும் ராத்திரி மட்டுந்தான். மத்த நேரமெல்லாம் பூக்கட்டலேன்னா அந்த ஒரு வேளையும்

இருக்காது. என்னான்றீங்க? மச்சானுக்கு நல்லாக் கோவம் வரும் போலருக்கே! மூக்கு சுர்ருன்னு செவக்குது?"

கட்டிய பூவை அப்படியே கொடுத்து விட்டு கையில் ஒரு பாத்திரமும், வாழை இலையோடுமாய் வந்தாள், ராஜலக்ஷ்மி.

"என்னண்ணே–கோவுச்சுக்கிட்டீங்களா? அரண்மனைல வாழ்ந்த பொண்ணு–பூக்கட்ட வுட்டுப்புட்டோம்–ஒங்களெக் கேக்காமலேயே! நீங்களுஞ் செல்லப் புள்ளயாம்ல. ஒரு வேலையுந் தெரியாதாமே! அதான்–நம்ம தொளிலு–அது நல்லா செய்யிது. செய்யிர வரைக்குஞ் செய்யட்டும்ணே. ஒரு நாளக்கிப் பத்து ரூவா கூலி. அரண்மனைல பூக்கட்டிப் பழக்கம். நல்ல வேகமாக் கட்டுது. வருத்தப்படாதீங்க. காலம் இப்டியே போயிடாது" அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் பரந்தாமராஜூ. வாழ்க்கை அதன் பொருள்–அதன் ஆழம்–என்று ஆய்ந்து கொண்டிருக்க இவர்களுக்கு நேரமில்லை தேவையும் இல்லை பசி–வேள்வி எல்லாம் அதிலேயே ஆஹுதி ஆகின்றது.

"நீ தனியாத்தான் இருக்கியாம்மா?"

"எண்ணே? தனியாத்தான்இருக்கோணும். இல்லேன்னா இஞ்ச மேஞ்சுருவாங்க"

"அப்டீன்னா?"

"அப்டீன்னா–எல்லாருமே இஞ்ச ஜாக்ருதையா இருக்கணும். இல்லேன்னா யாரோடயாவது மயிரப் பிடிச்சுக்கிட்டு சண்டை போட்டுக்கிட்டே நிக்கணும். புருஷனா இருந்தா புருஷனுக்கும், மவனா இருந்தா மவனுக்கும், அண்ணனா இருந்தா அண்ணனுக்கும், தம்பியா இருந்தா தம்பிக்கும், தம்பி பொண்டாட்டியா இருந்தா தம்பி பொண்டாட்டிக்கும், சம்பாரிச்சுப் போட்டுக்கிட்டே இருக்கணும். குடிக்கக் குடுக்கணும். தின்னக் குடுக்கணும். நாக்குல தடவிக்க ஊறுகாய் கொடுக்கணும். இல்லேன்னா எல்லார்க்கும் அடி–ஒதை–மிதி, நீங்கதான் இருக்கப் போறீங்கலண்ணே? குடும்பம்னு இருக்றது அத்தனையும் தெனம் ஒரு நரகம். பாத்துக்கிட்டே இருக்கலாம். தினம் ஒரு நாடகம். ஸ்டண்டு பிளே. விடாமப் பாத்துக்கலாம். ஆமாண்ணே! இந்த மிராட்டிப் பொண்ண போயீ ஏங் கட்னீங்க? நீங்க தமிளவுங்க தானே? தமிளச்சி ஒருத்தி கெடைக்கலியா ஒங்களுக்கு?"

"ஏன் அப்டிக் கேக்கற?"

“ஒங்களுக்கு ஜம்னா பாபியை ரொம்ப நாளுப் பளக்கமா. இல்ல கிட்டனுசுலதானா பளக்கம்?”

“ஏங் கேக்கற?”

“சொல்லுங்களேன் ஏன்?”

“அவள பதிமூணு வயசுலருந்து தெரியும். தப்பா நெனைசுக்காத. ஒம் புருஷன் எங்கே?”

“தெரியும்ல இதக் கேட்பீங்கண்ணு தெரியும்ல? ஜம்னா பாபி சொல்லிடுச்சு—ஒங்களை இப்ப கிட்டனு சுலதாம் பளக்கம்னு. ஏம் பொய் சொல்றீங்க?”

“நீ ஏம் பொய் சொல்றே?”

“பொய்யா? என்ன பொய்யி ஏது பொய்யி?”

“ஒம் புருஷன் எவளோடயோ ஓடிட்டதா சொல்லிக்கிட்ருக்கியே—அது பொய்யில்லாம என்ன?”

“ஆங்—நெசமாதான்—பூக்கட்ற வசந்தாளோட ஓடிப்போச்சு?”

“நீ கலெக்டர் ஆஃபீஸுல வேல செய்யற—நட்ராஜனை மொதல்லியே பளக்கம் வெச்சுக்கிட்ருக்கியா? இல்லியா?”

ராஜலக்ஷ்மி விட்டத்தைப் பார்த்தாள்.

“அந்த ஆளு என்னே ஏமாத்திப் புடிச்சு. கட்னவன் ஓடிப் போய்ட்டான். என்ன என்னா பண்ணச் சொல்ற?”

“ராஜலக்ஷ்மி, ஒன்னத் தஞ்சாவூர் பஸ் ஸ்டாண்ட்ல நீ சின்னக் குட்டியா இருக்கும் போதே பாத்திருக்கேன். டாக்ஸி ட்ரைவர்லாம் ஒன்னச் சுத்திகிட்ருந்ததுந் தெரியும் எல்லாருக்கும்.

ஒரு மோசமான காலமும் அதுவே. அப்புறம் அதிர்ஷ்டமான காலமாகவும் அப்புறம் அதுவே நஷ்டமான காலமாகவும் ஆகுறது வழக்கந்தான். ஜம்னா என்னோட ஓடி வரல்ல. தெரியுமா? நாந்தான் அவளை இழுத்துகிட்டு வந்துருக்கேன். அவ எப்டி இருந்தாலும் சரி எனக்குச் சம்மதம். அவ யாரோட போனாலும் எனக்கு வருத்தமில்லை. நான் எப்படி இருந்தாலும் அவளுக்கு சந்தோஷம். ஒனக்கு இதெல்லாம் ஏஞ்சொல்றேன்னா ஜம்னாவ உனக்கு ரொம்பத் தெரியும்னு நீ பாட்டுக்கு எதையாவது ஒளற ஆரம்பிக்காத. இருக்கிற வரைக்கும் சந்தோஷமா இருப்போம். இதுக்குத் தாலி கட்டிக்கிறது—கூட்டி வச்சுக்கிறது—ஏம்

புருஷன்–ஏம் பொண்டாட்டி–அஞ்ச இஞ்ச போக்கூடாது. அஞ்ச பாத்தேன்–இஞ்ச பாத்தேன்–இப்போ–அப்போ–எப்போ அவள அவன் வச்சிருந்தான்–இவன் வச்சிருந்தான்–இதுக்கெல்லாம் மசியறவ ஜம்னா இல்ல. அது தெரிஞ்சுதான் நாங்க ஒன்னா வந்துருக்கோம். நீ இப்போ இப்டியே என்னோட படுத்துக் கிட்டாலும் நானும் உன்னை இப்போ அப்டியே அள்ளிக்கிட்டாலும் அதுக்காக வயிறெறிய மாட்டா ஜம்னா. ஒனக்குத் தெரியுமா? ஒளிக்கிறது–மறைக்கிறது–அவனையும் வச்சுக்கிறது–இவனையுங் கட்டிக்கிறது–தெரியாம ஒளிச்சு வஞ் சகமாஊர் மேயறது–இதெல்லாம் அவகிட்டக் கிடையாது. ஏஞ் சொல்றேன்னா ஒங்களோட வாழ்க்கை யெல்லாம் எனக்கு ரொம்பப் புடிச்சுருக்கு. பசிச்சுச் சாப்பிடுறீங்க. நாள் முழுவதும் ஒழைக்கிறீங்க. எதுக்குப் பொய்? முகமூடி இல்லாம வேஷம் போடாம நிதர்சனமா யாரோட வேணுமானாலும் சேந்து எப்ப வேண்ணாலும் பிரிஞ்சு, வாழ முடியுற ஒங்களுடைய இந்தக் கூட்டத்துலகூட ஏம் பொய்யி? நீ யாரோட வாழ்ந்தா என்ன? நட்ராஜன் என்னோட ஃப்ரெண்டுதான். உன்னைப் பத்தி அவன் நிறையச் சொல்லியிருக்கான். நான் சொன்னேன். முடிஞ்ச வரைக்கும் உன்னோட சேந்து வாழச் சொல்லி. அவந் தங்கச்சி அவுங்கம்மா–எல்லாரையும் நெனைச்சி அவன் கோழையாப் போயிட்டான். உம் புருஷன் ஓடிப் போயிட்டா என்ன? அவன்கிட்ட எல்லாத்தையும் நீ சொல்லியிருக்கலாம். நீ மட்டும் இல்ல. ரொம்பப் பேரு ஒளிக்கிறதும் வேண்டியவுங்ககிட்டேயே மறைக்கிறதும், வஞ்சிக்கிறது... ஏமாத்தறது–உங்க மாதிரி ஜனங்க இதுக்கு ஒரே முடிவுதான் வெச்சிருக்கு. என்னிக்காவது ஒரு நாள் திரும்பி வரும்போது யார் தலையையாவது யாராவது வெட்டித் தள்ளீடுவீங்க."

"நான் வர்ரேண்ணா. நீங்க சாப்பிடுங்க"

அவனுக்கும் பசி மந்தித்திருந்தது. சாப்பிடவில்லை. பட்டினி இருந்தது நன்றாய் இருந்தது.

குடிக்காதது மிகவும் நன்றாய் இருந்தது. கை கால்கள் கண்கள் எல்லாம் விழிப்பாய் இருந்தன.

இன்னும் ஜம்னா வரவில்லை.

மெதுவாக இறங்கிக் காளி கோயில்ப் பக்கமாக நடந்தான் பரந்தாமராஜூ. காளி கோயில் சுவரில் காவியும் நீலமும் கொண்டு தெருவாசிகள் ஏற்கனவே எழுதியிருந்த அசுரன் சித்திரத்தை அதன் மேலேயே கோணல் மாணலாக வரைந்து கொண்டிருந்தனர்.

"என்ன வரையறீங்க?"

"எங்க பாட்டன் காலத்துல வரைஞ்ச அசுரன் படங்க. வருஷா வருஷம் அது மேலேயே யாரையாவது விட்டு எழுதறது வழக்கம் இந்த வருஷம் யாரும் ஆம்படலே. எழுதுவோம்னு பாத்தோம். ஹி... ஹி... ஹி..." என்றார்.

"ஏம் பெரியவரே? இந்த வருஷம் இந்த அசுரன் படத்த கண்ணாடி ஒட்டுப் படமா செஞ்சா நல்லாருக்காது"

"கண்ணாடி ஒட்டுப்படமா? அப்புடீன்னா"?

"அதாவது இந்த அசுரன் படத்தையே வரையாம முகம் பாக்குதா கண்ணாடியை துண்டு-துண்டா ஒட்டி இந்த வரையற எடம் எல்லாத்தையும் கண்ணாடியால ஒட்டி வரைஞ்சு எடுக்கிறது பெரியவரே"

"அடேயப்பா அதெல்லாம் ராஜா காலத்துச் சமாச்சாரமில்ல. நானும் பாத்துருக்கேன் அரண்மனைல.அதையெல்லாஞ் செய்யறதுக்கு இப்ப ஆளு யாரு இருக்கா? ஊர்ப்பட்டது செலவாகுமே தம்பீ! யாரு செய்ய!"

பரந்தாமராஜூவின் உள்ளிருந்து குரல் ஒலித்தது. "ஏன் நாஞ் செஞ்சு தரட்டா?"

"காசு-கூலி"

"நீங்க கொடுக்கறதக் குடுங்க-நான் வாங்கறபடி வாங்கிக்கறேன்"

"சரி செய்யுங்க ஆனா முன்னால காசு கேக்கப்படாது!"

"நல்லா இல்லைன்னா பின்னாலகூடத் தர வேண்டாம்"

அந்தக் கிழவர் பரந்தாமராஜூவை விசித்திரமாகப் பார்த்தார். செய்கிற வேலைக்குச் செய்த பின்னாலும் காசு வேண்டாமாமே? பரந்தாமராஜூ நடந்தான்... நடந்தான். கடைத் தெருவெல்லாம் சுற்றினான். கண்ணாடிப் படக்கடை ஏகாம்பரம் பிள்ளையிடம் போய் நின்றான்.

"வாங்க தம்பி"

"நமஸ்காரம் ஏகாம்பரம் பிள்ளை. எனக்குக் கொஞ்சம் உதவி பண்ணனும்"

"ஒங்களுக்கில்லாமலா-அப்பா ஏதாவது சொல்லி அனுப்பிச்சாங்களா? சொல்லுங்க தம்பீ?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க-இப்போ நான் ஒரு மிராட்டிப் பொண்ண சேத்துக்கிட்டு தனியாய் போய்ட்டேங்க."

"அடப்பாவி! ஓங்கப்பா ஒன்ன எப்டி வளத்தாரு?"

"நான் இல்லேன்னா சொன்னேன். இப்ப நாந் தனியாப் போய்ட்டேன். என் பொண்டாட்டி பூக்கட்றா. ஜரிகை வேலை பண்றா. நான் இந்தப் படங்கிடம் ஒட்டி கம்பம்-செவுத்துல மாட்ற தட்டு-இதெல்லாம் பண்ணி வித்தா ஏதோ பொளப்பு ஓடும்"

"அடப்பாவி ஒனக்கேன்டா இந்தப் புத்தி? அப்பா லட்சாதிபதி. புள்ள ஒட்டுப்படம் ஒட்டுது"

"அதெல்லாம் எதுக்குங்க? எனக்கொண்ணும் நீங்க பெரிசா ஒதவி பண்ண வேணாம். நானும் அவளும் பொளைக்கிறதுக்குக்கூட அவளே சம்பாரிச்சுடுவா. அஞ்ச ஒரு கோயில் இருக்குதுங்க. அதுக்கொரு கோயில் செவுத்துக்கு ஒரு கட் க்ளாஸ் பெய்ன்டிங் தருமத்துக்குப் பண்ணித் தரதாச் சொல்லியிருக்கேன். அதுக்கு உங்க கடையில நீங்க கண்ணாடி அறுக்கறப்ப மிச்சம் வுளுவுற வேஸ்ட்-கண்ணாடித் துண்டு-முகம் பார்க்குற கண்ணாடித்துண்டு-கலர் கண்ணாடித்துண்டு-அப்புறம் ஸ்டேன்-க்ளாஸ் பூ கண்ணாடி-டாட்டட்-இதெல்லாம் ஒரு அஞ்சாறு கிலோ அல்லது பத்து கிலோ இருந்தாப்போதும் தருவீங்களா?"

"நாங்க வேஸ்ட்டெல்லாந் திருச்சி வியாவாரிக்கு வெலைக்குப் போடறோம். நீங்க அந்த வெலை கொடுக்கிறியா?"

"வேணுண்ணா வேலை முடிஞ்சவுடனே தர்றேன்"

"அது முடியாதுப்பா. ஓங்கப்பா கணக்குலேன்னா..."

"எங்கப்பா கணக்கு தீந்துடுச்சுங்கோ-அதப் பத்தி பேசாதீங்க"

பரந்தாமராஜூ நடந்தான். தஞ்சாவூரிலிருந்த அத்தனை கண்ணாடிப் படக்கடையிலும் ஏறி இறங்கினான். ஒன்றும் பலனில்லை. பசி... பட்டினி... நேற்று சாப்பிட்டது. என்ன சோதனை? சிரித்துக் கொண்டான். இதைவிடப் பெரிய சோதனை என்ன? பசி... நிஜமாகவே இது அவனுக்கு வேண்டியதுதான். இது நாள் வரை வாழ்ந்த வாழ்க்கைக்கு நாயனாதான் காரணம் என்பது தெள்ளத் தெளியத் தெரிகிறது. அவர் காரணமாய் இனி நானிருக்கமுடியாது. கூடாது... கண்கள் இருண்டன. ஒரு சோதனை ஜம்னாவின் மூலம் தெரிந்து கொண்டான். இனி அடுத்தது உடம்பின் தூசியல்ல. உடம்பைப் பிளந்தாக வேண்டும். அதன் முகிலைக் கிழித்தாக வேண்டும். வாழ்வதின்

காரணத்தை வேறு முறையில் கிழித்துக் கண்டுபிடித்தாக வேண்டும். அப்படி ஒன்றில்லையாயின் வாழ்க்கைக்குப் புதிய அர்த்தத்தை உண்டாக்கியாவது ஆக வேண்டும். வாழ்வின் இருண்மையையும்–அதன் இருப்பையும் துளைத்து அதன் இருப்பை நிர்ணயித்தாக வேண்டும். இல்லையேல் இன்மையில் புதைய வேண்டும். எல்லாம் ஒன்றும் இல்லாமையினின்று உருவானவைதானே. முன்பிருந்து உருவானவை இங்கே ஏதுமில்லை. விஞ்ஞானமாய்க்கூட ஒன்றை வேறொன்றாக மாற்றலாம். ஒன்றை உருவாக்க முடியாது அல்லவா? பசி... இருட்டும் கண்கள்... நம் நாட்டில் எத்தனை கோடிப் பட்டினிச் சாவுகள்–ஆஃப்பிரிக்காவிலும் கரையோரத்தில் எத்தனை நாடுகளிலிருந்து கையேந்தும் கரிக் குழந்தைகள்–எலும்பும் தோலுமாய் வானத்தை நோக்கி நீட்டும் கைகள்–எத்தனை? வெயிலின் உக்ரம் தணிந்து இருளில் ஆட்சி அவன் வண்டிக்காரத் தெருவில் நுழைந்து தன் சிறிய தெருவில் திரும்பியதும் விழுந்தான். தூரத்தே ஓடி வருவது யார்?

“எங்கே போனீங்கோ மஹ்ராஜ்? நான் என்னா செய்வேன்.? இது என்னா கோலம்? ஏன் இப்படி வந்தீங்கோ?” கூட்டம் கூடியது.

ராஜலக்ஷ்மி, சுலோசனா, காத்தையன், செவித்தியான், லூர்து பெயர்கள்... பெயர்கள்... எல்லோரும் விலக குடிசையில் வந்து கீழே உட்கார்ந்த அவனைப் பார்த்ததும் ஜம்னா கத்தினாள்.

“இனிமே நீங்கோ எங்கியும் போகக்கூடாது. உங்களையும் விட்டுட்டு நானென்ன செய்ய?”–அவள் கதறினாள். அவன்–பரந்தாமராஜூ–அவளருகே நெருங்கி வந்தான். அவள் அவிழ்ந்த கூந்தலுடன் “என்னெ விட்டுட்டு எங்கியும் போகாதீங்கோ”–அவன் மடியில் புரண்டு கதறினாள்.

# 6

இரவு ஒன்பது மணிக்கு ஜம்னா திண்ணையிலிருந்து பதினைந்து ரூபாய் பூக்கட்டுக் கூலியுடன் கீழே இறங்கினபோதுதான் அவளுக்கே பூலோகப் ப்ரக்ஞையே வந்தது. வாழ்க்கையில் தனக்காக வென்று எந்த வேலையையும் செய்தறியாத நவ்கரீப்பெண் அவள். பதின்மூன்று வயதிலேயே அவளுக்கு யாருமில்லை. அதற்கு முன்னேயே அப்பா அம்மாவின் முகமும் பிறந்த ஊரும் பேசிய பாஷையும் எல்லாம் மறந்து போயிற்று. மராட்டிய வீடுகளில் அவள் செய்யாத வேலையில்லை. அடித்தார்கள், உதைத்தார்கள், இரவு பகலாகப் புரட்டி எடுத்தார்கள். பெண்ணாக வயதுக்கு வந்து கையும் காலும் மாரும் நெஞ்சும் சதை வைத்துத் தின்ற சோறெல்லாம் ஒன்றும் கழியாமல் சதையானபோது அதையும் மராட்டியர்கள் கேட்டார்கள். அப்போதுதான் ஜம்னா அடிமையானாள். மாதம் ஒரு முறை ரத்தம் வடிந்த வேளைகளிலும் எவனாவது ஒருவனுடன் கட்டிப் புரள வேண்டிய இரவுகளின் கொடுமை விடிந்த பிறகும் அவர்களுடன் அபத்தமாக மராட்டியில் கொஞ்சிக் கொண்டு உருண்டு கொண்டும் பசிநேரச் சோற்றுக்காக மறுபடியும் மறுபடியும் அவர்களின் ஈனக்கிரயமான ஜம்னா–முதலில் சம்பாதித்த–தனக்காகவே தன் மனிதனுக்காக–தன் சுய வாழ்வின் விடுதலையைக் கொடுத்த அவனுக்காக–சம்பாதித்த இந்த

நூற்றாண்டின் வியர்வையில் ஊறிய காசு–அந்தப் பதினைந்து ரூபாய். இந்தப் பதினைந்து ரூபாயை தினமும் சம்பாதித்துவிட்டால் மஹ்ராஜ் எங்கும் போக வேண்டாம். அவள் கண்ணீர் வடித்தாள். அவனுடன் புறப்பட்ட முதல் நாளே பயங்கர சூறைகள் சுழலும் இந்த உலகை எதிர்த்து தாக்கத் துடிக்கிற பரந்தாமராஜூவின் புஜங்களோடு புஜங்களாய் சேரந்து நிற்கத் துடிக்கும் அவளுக்கு, இந்த உலகம் துச்சம். அந்தப் பதினைந்து ரூபாய் நிரந்தரமாகிவிட்டால் இந்த உலகை அந்தப் பதினைந்து ரூபாய் கொடுத்து வாங்கி விடுவாள். கோல்ஹாப்பூரில் ராஜஸ்தானில் ஹௌராவில் அவள் பல்லக்குத் தூக்கியிருக்கிறாள். அப்போது ஒரு பைசா யாரும் கொடுத்ததில்லை. மராட்டி ராஜாவின் பெரிய வீட்டுக் கட்டில்களில் எவனெவனோடெல்லாம் மல்யுத்தம் செய்து விடியலில் ரெண்டு காசுக்காகக் கெஞ்சிய நேரமுண்டு. இல்லையென்றால் முப்பது வயதில் இந்த தலைமுன் நரையும், தொங்கலும் ஏது? தொங்கினால் என்ன? அவளுடலில் சதையில்லை. அதையெல்லாம் விற்றாகிவிட்டது. அறுத்து அறுத்து விற்றாகிவிட்டது. எத்தனை ராணி பாய் சாஹிப்கள் உடல்களை எண்ணை தேய்த்துக் குளிப்பாட்டி, காட்டுக்கறி தின்று, பன்றிக்கறி வறுத்து, ராணி பாய் சாஹிப்களின் மூல வியாதிக்கு வைத்தியம் எத்தனை பார்த்திருக்கிறாள்? மராட்டியக் குடும்பங்கள் ராஜப் ப்ராதனிகளின் அந்தப்புரங்களில் எத்தனை இரவுகளில் எத்தனை அலிப் பெண்களையும் அலி ஆண்களையும் படுக்கையில் போட்டு அந்த அரச குலக் கொழுந்துகள் சவைத்துத் துப்பும் கோரக் காட்சிகளுக்கு விளக்குப் பிடித்திருக்கிறாள்? அந்த அலிகள் ரத்தம் சொட்டச் சொட்ட இவளிடம் அழுது கூக்குரலிட்டு காசுக்காக அந்தப்புரங்களிலும் அடுப்படிகளிலும் மறுபடியும் சாப்பாட்டுக்காக உழன்று வேலை செய்து அந்த இடிந்த சுவர்களிடையே மட்கிப்போன எத்தனை சடலங்களை அவள் கைகளால் புதைத்திருக்கிறாள்? யாரும் ஒரு காசு கொடுத்ததில்லை. அவள்தான் நவ்கரீ ஜம்னா பாய்! பதினைந்து ரூபாயைக் கையில் ஏந்தியபோது இந்த உலகமே அவளுக்காகக் காத்திருப்பது போலிருந்தது. அந்த உலகத்தைச் சாத்தியப்படுத்தி அவள் கையில் வழங்கியவன் யார்? பரந்தாமராஜூ என்ற அந்த சைத்ரீகன் அல்லவா? இனியும் அவள் நவ்கரீ ஜம்னா பாய்ந்தான். இந்த வெட்டவெளி உலகை இந்த இருபத்தோராம் நூற்றாண்டிலும் புதைந்துபோன சரித்திரக் கிடங்கின் ஆழத்திலிருந்து அவளை மீட்டெடுத்த கரங்கள் யாருடையவை? மஹ்ராஜ் பரந்தாமராஜூவினுடையவை. நவ்கரீ என்றால் சம்பளமில்லாத–விலையில்லாத–உரிமையாளனில்லாத

கால காலத்துக்கும் தாசி என்றர்த்தம். இடிந்து பொடிந்து கொண்டிருந்த காலப் புழுதியில் இருந்து நிர்வாணமாக அவளை தனக்கென்று தேர்ந்த கொண்டவன் ஓர் ஆண்பிள்ளை. அவனைத் தேர்ந்து கொண்ட அவள் என்றைக்கும் அடிமை. இந்தப் பதினைந்து ரூபாய் அவள் விலை. ஜம்னா கதறி அழுதாள். அவள் அழுததன் காரணத்தை வாழ்க்கையின் விமர்சகர்களால் புரிந்து கொள்ளமுடியாதென்றால் பூக்கட்டுகிற ராஜலக்ஷ்மிக்கும் ராமலக்ஷ்மிக்கும் என்ன புரியும்? சம்பளத்துடன் திண்ணையிலிருந்து இறங்கி அவள் உடனே தேடியது மஹ்ராஜைத்தான். அவனுடன் புறப்பட்டு ஓடி வந்த அவள் பன்னிரண்டரை மணிநேரம் ஓயாமல் பூ கட்டி முடித்தபின்னர்தான் இறங்கி இருக்கிறாள். இனி அவன் வேண்டும். எங்கே அவன்? சாப்பிட்டானா? தூங்கினானா? கனவு கண்டானா? அவளைத் தேடினானா? அவளை அழைத்தானா? நெஞ்சு விம்மியது. தனக்கென்று வந்தவன்–தன்னை வாங்கிக் கொண்டவன்–தன்னை ஏற்றவன்–தனக்கே தனக்கானவன்–எங்கே அவன்? ஒரு ஆண் ஒரு க்ஷணத்தில் ஜம்னாவுக்கும் நேர்ந்தன. அவனில்லாவிட்டால்? ஐயோ அப்படிக்கூட ஒரு காலம் உண்டா? ஜம்னாவின் மார்பு ஏறி இறங்கியது. எப்படி இருந்தவை அவை? ஜம்னா குனிந்து அவற்றைப் பார்த்தாள். கைகளிலும் கால்களிலும் இத்தனை உரத்தையும் பலத்தையும் அவளுக்குத் தந்த ராஜ குடும்பத்துச் சாப்பாடு அவளை ஒடிசலாகவே வைத்திருந்தது. விதி என்னவாக இருக்கும்? அவளது மார்புகள் ஏறி இறங்கிக் கொண்டிருந்தன. அவளால் தாங்க முடியவில்லை. அவையும் மனித அங்கங்களைப்போல் வியர்வையில் ஊறி நனைந்த அந்த ஜாக்கெட்டுக்குள் ஜம்னாவின் உடம்பின் சாரத்தை ஏற்றவைபோல் விம்மின. ராஜலக்ஷ்மி, சுலோச்சனா, ராமலக்ஷ்மி ஆகியோர் கைகால்களை நீட்டி சொடக்கு விட்டு நெட்டி முறித்துக் கொண்டு ஜம்னாவையே–அவள் அவனைத் தேடி அலைவதையே–வினோதமாகப் பார்த்துக் கொண்டு நின்றனர். ஜம்னாவின் 'பறந்த பறப்பு' அவர்களுக்கு அங்கே பழக்கமில்லை. அங்கே புருஷனைத் தேடி அழுது கொண்டு நிற்கும் எந்தப் பெண்ணையும் காண முடியாது. ஒழுக்கம் அவர்களுக்கு அனாவசியம். அக்ரமம் புரியாவிட்டால் அவர்களுக்குத் தேவையில்லை. எந்தத் தளத்திலும் புருஷனாகத்தான் வரவேண்டும். இவள்கள் அவன்களைத் தேடி இரவிலும்கூடப் போவதில்லை. அநேகமான பெண்களின் புருஷர்கள்–கல்யாணமாகாத பெண்கள் உள்பட–(அவர்களுக்கும் புருஷர்கள் இருந்தார்கள்)–வேறு எவளையாவது தேடிக் கொண்டிருப்பவர்கள் உள்பட யாருமே

தங்களின் ஜோடிகளை தேடி அழுதுகொண்டு நிற்பதில்லை. ஏனென்றால் அவர்களின் வயிற்றுப் பசி-எல்லாவற்றையும் காவு கொண்டு விடுகிறது. அதற்காக இவை எல்லாவற்றையும் புரிந்து கொண்டிருக்கிற ஜம்னாவும் பரந்தாமராஜூவைத் தேடாமல் இருக்க முடியுமா? இடத்துக்கு இடம் வாழ்க்கை முறை வேறுபடுகிறது. காலத்துத்துக் காலம்-மனிதருக்கு மனிதர்-மதிப்பீடுகளும் வாய்ப்புகளும்கூட வித்யாசப்படுகின்றன. நவ்கரீ ஜம்னா தன்னந்தனியாக இத்தனை வருஷம் எத்தனையோ விதமாக எத்தனையோ வாழ்க்கையை வழிகளை மிதித்து வந்துவிட்டவள். பரந்தாமராஜூவை அவளது நெஞ்சில் தாங்கி இருக்கிறாள். நெஞ்சோடுதான் அது இனிப் போகும். நெஞ்சோடுதான் அது எரியும்.

இருண்ட தெருக்களிடையே ஜம்னா அவனுக்காய் அலைந்து கொண்டிருந்தாள். பலரும் ஆறுதல் சொன்னார்கள். அந்தத் தெரு ஆண்கள் அவளை விசித்ரமாகப் பார்த்தார்கள். சிலர் கூப்பிட்டார்கள். புருஷனைத் தேடித் தருவதாக அழைத்தார்கள். ஒருவன் கையைப் பிடித்திழுத்தான். அந்தத் தெருப் பெண்களின் வழக்கமான கூப்பாட்டை அவன் எதிர்பார்த்தான். ஜம்னா அவனை மறுகையால் குப்புறத் தள்ளி விட்டு இருட்டில் மறைந்தாள்.

பரந்தாமராஜூவைக் காணோம்.

யார் துணையும் வேண்டி நிற்கிற சோணங்கிப் பெண்ணல்ல ஜம்னா. தன்னந்தனியாக இனி முடியாது. அவன் வேண்டும். அவனைவிட முடியாது. போக வேண்டுமென்றால் ஒரேயடியாகத்தான் போக வேண்டும். தெருமுனையில் முகமெல்லாம் புழுதியுடன் இருட்டை அறுத்துத் துளைக்கும் கண்களுடன் இரவு பதினொன்று-பன்னிரண்டு... ஒன்று... மணிகள் ஆளரவமற்றுக் கிழிந்தபோது அங்கேயே நின்று கொண்டிருந்தாள். அப்போதுதான் இருட்டில் பசியில் தள்ளாடிய படியே வந்து விழுந்தான் பரந்தாமராஜூ. அவனைத் தனியாக ஒற்றைக் குரலில் கதறி வரவேற்றாள் ஜம்னா. திண்ணைகளில் அயர்ச்சியில் தூக்கத்தின் பிடியில் உருண்டு கிடந்த ராமலக்ஷ்மி எழுந்து கத்தினாள்.

"அக்காவோ-மச்சான் வந்துட்டுது. ஜம்னாக்கா எங்க? ஜம்னாக்கா மச்சான் வந்துட்டுது"

எதிர்வீட்டு செவுத்தியான் நன்றாகக் குடித்துவிட்டு வந்து அவன் மனைவியை திண்ணையில் போட்டு மிதித்துத் துவைத்து

எடுத்துக் கொண்டிருந்தான். அந்தத் தெருவின் குழாய் ஒன்றில் பகல் முழுக்கவும் வராத தண்ணீர் கொஞ்ச நேரத்துக்கு முன் வர ஆரம்பித்ததால் எல்லாக் குடிசைப் பெண்களும் அடுத்த தெரு பறை ஜனங்களும் வினோதமான அலுமினிய பாத்திரங்களுடன் விசித்திரப் போர் தொடங்கி இருந்தனர். விளக்கில்லாத தெருச் சகதியில் குழந்தைகளும் இளம் பெண்களும் இரவு முழுதும் வரப்போகிற தண்ணீருக்காகக் குதித்துக் கொட்டமடித்தனர். பக்கத்தில் புதிதாய்க் கட்டப்பட்ட குடிசை ஒன்றில் நாளைக்கு நடக்கப் போகும் அந்த வீட்டு கல்யாணம் ஒன்றுக்காக வெள்ளையடித்துக் கொண்டிருந்தார்கள். கூச்சல்கள் நிகழும்போது மறுபுறம் அமைதியாக வீடுகளின்பின்னே கள்ளச் சாராயத்தின் எரிப்பு நெடி எழுந்து கொண்டிருந்தது. ஊத்தம் போட்டிருந்த சாராய ஊறல் பானைகளை பதின்மூன்று வயது நிரம்பாத சிறுமிகள் தூக்கிக் கொண்டு போய் ஊற்றிக் கொண்டிருந்தார்கள். இடையிடையே அந்தப் பெண்கள் உடம்பில் வழிந்த ஊறல் வழிசல்களைத் துடைத்துக் கொண்டு எதிரே கைத்தாங்கலாக பரந்தாமராஜூவை அழைத்து வரும் ஜம்னாவைப் பார்த்து "சேப்பு மராட்டிச்சீ– வ்ருட்டி என்னா வெல?" என்று கத்தினார்கள். ஊறல் பானையில் கலக்கிக் கொண்டிருந்த கடா மீசைக்காரன் கலியன் "ச்சீ நாயிங்களா–பாட்டுகல்ல பாடுதுங்க. நீங்க போங்கம்மா" என்று கத்தியபடி இருட்டில் கைவீசி லாவி கைகளில் அகப்பட்ட ஒருத்தியை "பாட்டா பாடுற, பாட்டு" என்றபடியே அவள் முதுகில் அறைந்தான்.

இருண்டு கிடந்த குடிசைக்குள் அடுப்பெரியும் வெளிச்சத்தில் ஜம்னாவும் அவள் மஹ்ராஜூம் வாசல் கலுங்கில் கோட்டு வாய்விட்டபடி ராமலக்ஷ்மியும், பரந்தாமராஜூவின் வெகு அருகே ராமலக்ஷ்மியும் ஜம்னாவின் பின்னால் கருப்பும், வெளித்திண்ணையில் சுலோச்சனாவும் எதுவும் பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். அடுப்பில் சோறும், கொடி அடுப்பில் குழம்பும், குழம்புச் சட்டியின்மேல் மூடிச் சட்டியில் ரசமும் ஒரு சேரக் கொதித்துக் கொண்டு இருந்தன. ஒரே நேரத்தில் இத்தனை வேண்டுமா? என்றிருந்தது. அத்தனை பேருக்கும். ஜம்னாவின் கை பாகம் அவர்களுக்கு வியப்பளித்தது. அவர்கள் எல்லாம் இதை விருந்து என்று நம்பினார்கள். கொஞ்ச நேரத்தில் அதே அடுப்பு வெளிச்சத்தில் பரந்தாமராஜூவுக்கு அவள் சோறு போட்டபோது ஏதோ நாடகம் பார்ப்பதுபோல் எல்லோரும் மகிழ்ந்து பார்த்து சொக்கிப் போனார்கள்.

"மச்சான் எனக்கொரு உருண்டை" என்றாள் கருப்பு.

பரந்தாமராஜூ இருளில் அவளை உற்றுப் பார்த்தான். கையிலிருந்து கறியோடு எச்சிலோடு ஒரு உருண்டை குழம்பு சாதத்தை-கொஞ்சம் பெரிய உருண்டைதான்-அவள் கருப்புவின் கைகளில் கொடுக்க நீட்டினான்.

"எனெக்கு-எனெக்கு" என்று இருளில் குரல்கள் நீண்டன.

பக்கத்திலிருந்த ராமலக்ஷ்மி "மச்சான் ஆ" என்று வாயைத் திறந்து தலையை முன் நீட்டி அவனுக்காக வளைந்து இருண்டு கைகளைத் தரையில் ஊன்றி வாயில் வாங்கிக் கொண்டபோது ஜம்னாவின் கண்கள் கண்ணீரில் சுடர்ந்தன.

"பேயிங்களா-பேயிங்களா-அதுங்கள சாப்புட வுடுதா பாரேன். எந்திரிங்கடி-அல்லாம் அவ அவ திண்ணைக்கிப் போ. ஓம்புருசனாடி இஞ்ச வடிச்சுக் கொட்றான். தேவுடியா முண்டைகளா-நாறக் கழுதைங்களா-ஆன்னுல வாயப் பொளந்துகிட்டுப் போறா-அந்த சினிமா டிக்கட்டுக் கிளிக்கிற தேவிடியா மவன்ட்டப் போயி வாயப் பொள. நாயி நாயி" என்று கத்தினாள் ராஜலக்ஷ்மி.

"நாம் மச்சானக் கட்டிக்கப் போறேன் ஜம்னாக்கா" என்று கத்தியபடி இருளில் ஓடி மறைந்தாள் ராமலக்ஷ்மி. போகும்போதே அவனை முதுகில் கட்டிப்பிடித்து ஜம்னாவையும் கன்னத்தில் தட்டி விட்டுத்தான் அவள் ஓடினாள். இது விளையாட்டா? வினையா? என்று தெரியாமல் சந்தோஷத்தில் சிரித்தான் பரந்தாமராஜூ. அது வினையும்தான் என்றறிந்தாள் ஜம்னா. எல்லோரும் சிரித்தபடி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார்கள். புறப்பட்டார்கள்

"கதவத் தாப்பாப் போட்டுக்கடி" என்று உபதேசம் செய்த ராஜலக்ஷ்மி இன்னும் பரந்தாமராஜூவிடம் உருண்டை வாங்கித் தின்று கொண்டிருந்த சுலோச்சனாவை தலையிலடித்தாள். அடுப்பு வெளிச்சம் நன்றாக மேலே படக் குனிந்து பரந்தாமராஜூவின் முகம் நோக்கியபடியே "வர்ரேன் மச்சான். கதவச் சாத்திக்கங்க" என்று அறிவித்தபோது அவளை நன்றாகப் புரிந்தது பரந்தாமராஜூவுக்கு. ஓரே நாளில் சில மணிகளில் இவர்களை எப்படி இப்படியெல்லாம் மாற்றி விடுகிறது இந்த விதி? நேற்றிரவு வேறு-இன்றிரவு வேறு-இவர்களின் வேஷங்கள் பிடிபடாமல் போனால் எத்தனை நன்றாயிருக்கும்? ஜம்னாவும் இவர்களுடன் வேஷம் கட்டிவிட்டாள் என்பதை அவன் கறுக்காக உணர்ந்தான். அவள் அழுது ஊர்கூட்டிய பிலாக்கணம் புருஷன் புருஷன் என்று இந்தச் சேரிப் பெண்களுக்கு அவள் காட்டிய முகமூடிகள்-பணம்-பசியை-ஒழிக்க-உடம்பை

ஒழிக்க-தினவை அடக்க எல்லாவற்றுக்கும் அது வேண்டும். அதற்கு வேறு முகம் வேண்டும். முகத்தாலே விபச்சாரம் செய்ய வேண்டும். இந்த முக விபச்சாரம் இல்லாமல் இன்று யாரிருக்கிறார்கள்? அவனுக்கு இருப்பது புரிகிறது. அவள் இருப்பின் இருப்பு புரியவில்லை. ஜம்னாவின் இருப்பு புரிகிறது. அவள் இருப்பின் இருப்பு ஆச்சர்யமாயிருந்தது. எல்லாம் அவனுக்காகவா? அந்தப் பெண் ராமலக்ஷ்மி எத்தனை வினையாக அவனைத் தூண்டிவிட்டு விட்டுப் போய்விட்டாள்? எங்கும் லல்லுக்கள்தான். சரளாக்களின் வேஷங்கள்தான். பாபியின் யோனிகள்தான். எல்லோரும் அதற்குத் தயார். ஆனால் வேஷத்தின் நாற்றம் குடலைப் பிடுங்கும்போது அவன் தனியாகிப் போகிறான். ஜம்னா! உன் உடம்பின் உஷ்ணம் குறையும்போது உன் தொங்கிவிட்ட முலைகள் என் ஞாபகத்தை அறுக்கும் நாள் வரும்போது-சுருங்கிய உன் தோலின் மணம் என் நாபியைச் சுருட்டும்போது நானும் வேடமிட்டு முகமூடி தரித்து உன்னோடு சேர்ந்து-ஜம்னா-அந்த நாள் வேண்டாம். அதற்கு முன்னே நான் போய்விட வேண்டும். என் இருப்பின் இருப்பை முறிக்க வேண்டும்.

"என்னா ஓஸரிட்ரிக்கிங்கோ மஹ்ராஜ்? எத்தெ முறிக்கணும்? உள்ளெ வந்து படுங்கோ. வெளீலே பனி கொட்டுதூ. ஓங்களுக்கு கொஞ்சமா பாயாஸ் அரைச்சுக் காச்சி வெச்சிருக்கேன்"

அவன் கண்கள் திடீரென்று இருண்டு கலங்கின. இவளென்ன மனுஷி? கண்களில் வழியும் கண்ணீரோடு அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் பரந்தாமராஜூ

மண்கலயத்தில் இருந்த பாயாஸை அவன் உதடுகளில் வைத்து ஊட்டினாள் ஜம்னா. புறங்கையால் கலயத்தோடு தள்ளினான் பரந்தாமராஜூ. "பாயாஸ் காய்ச்ச எவ்ளோ ரூவா கொடுத்தே" முதல் முறையாக அவனிடம் அடி வாங்கவேண்டுமென்று ஆசையுடன் பார்த்தாள் ஜம்னா. எச்சில் கைகளுடன் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஜம்னா எழுந்து எச்சில் கைகளோடேயே அந்தப் பதினைந்து ரூபாயை எடுத்து அவன் முன்னே வைத்தாள்.

"மஹ்ராஜ் நீங்கோ எந்தெ வேலையுஞ் செய்யக்கூடாது. ஆப் நவ்கரீ நாஹின். நீங்கோ வேலெ செஞ்சா நான் செத்துப் போவேன். நீங்கோ ஒக்காந்து படம் எளுதுங்கோ. தூங்குங்கோ. சாப்பிடுங்கோ. வேணும்னா ஊரெல்லாஞ் சுத்திட்டு வாங்கோ. உப்புப் புளி மொளகா ஆட்டுக்கறி எல்லாம் நான் பாத்துக்குவேன். ஆப் கலாகார். உங்க கை என்னோட நெஞ்சு. ஓங்களெ மண்ணுல கொண்ணாந்து நான் போட்டிரிக்குதூ. ஏம் பாபம்-கர்மா-நீங்கோ

எனெக்கு என்கூடக்க இரிந்திட்டிரிந்தாலே போதும். இன்னிக்கு ஒங்க்ளெக் கானூரன்னு சொல்ல நான் ரொம்ப பயந்து போனேன். என்னெ வுட்டுட்டுப் போய்ட மாட்டீங்களே மஹ்ராஜ்?"

அவள் விம்மி விம்மி அழுதாள். அழுது கொண்டே இருந்தாள். அவளது அறியாமை ஒரே நேரத்தில் அவனை துக்கத்திலும்-அதிலிருந்தே எழும்பிய சந்தோஷத்திலும் கொண்டு போய்க் கரை சேர்ந்தது. பிறகு நீண்ட நேரம் அந்தக் குடிசை மௌனத்தில் ஆழ்ந்தது. அவள் தன்னிடமிருந்த இரண்டு மூன்று புடவைகளையும் கீழே விரித்து அவனைப் படுக்க வைப்பதற்கழைத்தாள். சட்டி பானைகள்-சாப்பிட்ட பாத்திரங்கள் எல்லாம் அப்படியே கிடந்தன. அடுப்பு வெந்நீருடன் திகுதிகுவென்று எரிந்து கொண்டு இருந்தது. அடுப்பு வெளிச்சத்தில் நேரே ஒருவரை ஒருவர் பார்த்தபடி உட்கார்ந்து இருந்தார்கள். உடுத்தியிருந்த ஒற்றைச் சேலையையும் அமரிக்கையாக அவிழ்த்துச் சுருட்டி அவனுக்குத் தலையணையாய் வைத்தாள். மெல்லிய பாவாடையில் பதினான்கு வயதுப் பெண் போலிருந்தாள். இருவருமே அலுத்துக் களைத்திருந்தார்கள். அவன் பக்கத்தில் சரிந்து படுத்தபோது அவளொரு சிறு குழந்தை போலத் தோன்றினாள். எட்டு வயது சிறுமியாய் அவளைப் பார்த்தான் பரந்தாமராஜூ. பாவாடை-பட்டுப்பாவாடை-குடையாய்க் கவிழ்ந்து விரிய-காலில் சதங்கைகள் பொன்னாய் மலிய-பிச்சிப்பூ சூடிய கூந்தல்

ஒற்றைப்பின்னலாய் வளைய-சுற்றிலும் சந்திர பீடா அலங்காரங்கள் அபய ஹஸ்த முத்திரையுடன் தஞ்சாவூர்ச் சித்ரப் படப் பொன்மேனி மினுக்கத்துடன் தங்க ரேக்குகளால் இழைத்த ஜம்னா பாயாய்-அந்த அடுப்பு வெளிச்சத்தில் ஒரு தஞ்சாவூர்ச் சித்ரப் படம் உயிர உருக் கொண்டது. அவன் தொடுவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. அவள்தான் எடுத்துக் கொண்டு வந்திருக்கிறாள். அவள் பவானியம்மன் புலிகளின்மேல் சவாரி செய்த வனஸ்பதி வாணி. மராட்டியச் சிங்கம் வாய் பிளக்கக் கிழித்தெறிந்த சூலி-முலையிலிருந்து காளிதாஸன் வாயில் பாலைப் பீய்ச்சி அடித்த ஆரண்ய காளி. அவனை இழுத்து மடியில் போட்டுத் தாலாட்டத்தான் ஆசித்தாள், அந்தத் தாயுமானவள். அவள் கால்களை ஆட்டியபடியே அப்போதும் அவள் மடியில் படுத்து இருந்தான்.

"வென்னி யாருக்குப் போட்டு வச்சிருக்கே?"

"ஒங்களுக்குத்தான் மஹ்ராஜ்"

"இனிமே என்ன மஹ்ராஜ்ன்னு கூப்புடாத. ராஜூன்னு கூப்புடு"

"எனக்கு "ஊ" பிடிக்காதே. என்னா செய்றது?"

"செய்றது இல்லே. அதுல மட்டும் 'ஊ' பிடிக்குதா?"

அவள் குனிந்து அவனை முத்தாடினாள். கொஞ்ச நேரமல்ல. க்ராம்பின் மணம் அவள் உடம்போடு பிறந்ததா?

"பாயாஸ்–உடம்பில் பூசுகிற பழக்கம் யார் கற்றுக் கொடுத்தது.?"

"நீங்கோதான் ஓங்களுக்காகத்தான். ராஜூ சரியா?"

நீண்ட நேரம் வென்னீர் கொதித்துக் கொண்டிருந்தது. அவன் அவளைத் தொடவே இல்லை. அவள் மடியில் படுத்திருந்தபடியே கொட்டுக் கொட்டென்று விழித்துக் கொண்டிருந்தான். கூரை வெளியிலிருந்து கீற்றைக் கிளப்பிக் கொண்டு காற்றடித்துக் கொண்டிருந்தது. அவனை மடியில் போட்டபடியே தூங்கிப்போனாள் ஜம்னா. அவளது பழம் புடவைகள் மெதுவாக ம்ருதுவாக அவனுக்குள் நெடியேற்றியது. பழம் புடவைகளெல்லாம் தனித்தனி கலை வடிவங்கள் என்று தோன்றியது. நூற்றாண்டுப் பெண்மையினை அப்படியே பதிவு செய்துவிடும் நுண்மை, பரந்தாமராஜூவுக்கு எப்போதும் ஆத்திரமான ஆசையைக் கிளப்பும். குழந்தையாய் இருந்தபோது அவன்–அவ்வா (பாட்டி)வின் புடவைகள் ஆச்சர்யமாக கனவுகளைக் குவிக்கும். அந்தப் புடவைகளில் படுத்துப் புரள்வான். அவன் குழந்தையாய் இருந்தபோது அதே புடவைகள்–அம்மாவின் புடவைகள்–நாலாய் எட்டாய் பதினாறாய் மடித்த அம்மாவின் புடவை மெத்தைகள்–அவன் வாழ வேண்டிய கலையைக் கற்றுக் கொடுத்தன.

இப்போது ஜம்னாவின் புடவைகள், ஜம்னாவின் சன்னமான குறட்டை–நிச்சலனமான தூக்கம். அவனை ஆச்சர்யம் கொள்ள வைத்தது. எப்படி இவள் விடுதலை பெறுகிறாள்? அவளுடன் புணர்ந்து கிடந்த நேற்றிரவுகூட அவள் எத்தனை முழுவதுமாய் அவனிடம் தர முடிந்தது? உடம்பு ஒரு குரூர விளையாட்டு. காலை மடக்கி காலை விரித்து முக்கோணங்கள் பொருந்த, முலை கூறுகள் சரியாகப் படிய, அந்தச் சில கணங்களில்கூட எத்தனை வேஷங்கள். மாறி மாறி மறையும்? எத்தனை பொய் சவால்கள்? விட்டேனா பார் என்று எத்தனை முறுக்கு? நாலே நாலு அழுத்தல்களில் கக்குகிற விந்து. அதற்கு முன்னா? பின்னா? எங்கே இருக்கிறது. அந்த கணம்? வாரிக் கொடுத்து எங்கே கொடுத்தோம் என்று

தெரியாத வெட்ட வெளி. பொட்டல். ஆவுடையார்-நாதவித்து கலாதீ நமோ நமோஹ்ற-எங்கும் விந்து-எங்கும் விந்து பரவி சூழ்ந்து-ஜம்னா நீ எந்த விந்து? ஜம்னா என்ற வேஷம்-ராஜூ என்கிற வேஷம்-ஒப்பனை-முக்கோணப்புள்ளியில் தினம் தினம் உன்னுடன் படுத்துப் புரளும் அந்த அருவருப்பு மீண்டும் மீண்டும்-சாவு-உயிர்க்கும் போதே சாவு-சாகும் போதே உயிர்ப்பு-ஆவுடையார்-லிங்கத்தில் இருந்து பிரியும் ஆவுடையார்-மறுபடி மறுபடி வேஷம்-மறுபடி மறுபடிக் தலைப்பு-ஜம்னா! நீ ரொம்பக் கஷ்டப்படுவாய்! அடீ ஜம்னா! உன்னைச் சும்மா விடுவேனென்று நினைக்கிறாயா? உன்னை த்வம்சிக்கத்தான் நான் வேஷங்கள் குலைய உன்னைக் குலையறுப்பேன் நான். உன்னை-உன் இருப்பின் இருப்பை-ஆச்சர்யம் கொண்டு பிளந்தெறியப் போகிறவன் நான்-லல்லுவின் இல்லை இது-பாபியிடம் கறந்து போயிற்று-இன்னும் எத்தனை பேர்களிடமும் இதையே நான் பரிசோதிக்க வேண்டுமோ? நாளையே இது ராஜலக்ஷ்மியாயிருக்கலாம். முலையரும்பா பாபியாக இருக்கலாம். முலையுந்தி வந்தி ராமலக்ஷ்மியாகவும், தெரு நடுவில் கால் தூக்கி நிற்கும் அந்தக் காளியாகவும் இருக்கலாம். அடுப்பு-எரிந்தடங்கி இருந்தது. குடிசைக்குள் இருட்டு பரவியிருந்தது. அடுப்பில் அடுப்பின் தணல்-நெஞ்சில் தஞ்சாவூர்ச் சித்ரப்படமாகி இருந்தது. கால பைரவியின் நடமிடும் காலோசை. ஊத்தைச் சடலங்களை மிதித்தேறி இதோ அவன் தலையிலேறி கபால நடனமிடும் கால பைரவி சதங்கை ஓசை சிதறி மண்டையோடுகள் நொறுங்கி ஒற்றைத் தலையினில் பரந்தாமராஜூவின் தலை. அதன்மேல் நடனமிடும் கால ரௌத்ரீ வேறு யார்? ஜம்னா பாய்.

# 7

கொல்லையில் நின்ற ஆமணக்குச் செடி பெரிதாகத்தான் வளர்ந்திருக்கிறது. ஆமணக்குச் செடி இத்தனை செழிப்பாக—உயரமாக ஒரு மரம் மாதிரிக் கொழுப்புடன் வளர்ந்திருந்ததை அவன் வேறெங்கும் பார்த்ததில்லை. காலையிலேயே அந்தக் குட்டி ராம லக்ஷ்மியுடன் பூச்சந்தைக்குப் போய், ஏராளமான சமையல் சாமான்கள்—காய்கறி அரிவாள்மனை - அம்மிக்கல் - கலவடை உரல்—திருவை அலுமினியப் பாத்திரங்கள்—கால்கள் கட்டின ரெண்டு கோழி—உப்புமாவை—சமூசா சக்கரக் கரண்டி—கரியடுப்பு—தோசைக்கல்—மண்ணெண்ணெய் டின் எல்லாவற்றையும் ஜம்னாவும் அவளுமாக ரெண்டு கூலி ஆட்களுடன் கொண்டு வந்து போட்டு வேலையை ஆரம்பித்திருக்கிறார்கள். ஏழரை எட்டு மணிக்கு மேலும் பரந்தாமராஜூ தூங்கிக் கொண்டு இருந்தான். திடுமென விழித்துப் பார்த்தபோது அவன் படுத்துக் கிடந்தமூலையில் கயிறொன்று கட்டி அதில் ஜம்னாவின் சேலைகள் துவைத்து உலர்ந்தன. அவனையும் மறைத்தன. திரைபோல அவற்றை மடித்து மடித்துக் காயப் போட்டிருந்தாள். தனி அறைபோலப் பிரித்திருந்தாள். சாகஸக்காரி ஒரு வேளை இவளும் மூளையில் கட்டியடித்துவிட்டாளோ அவனை? திடுமென எழுந்து உட்கார்ந்தான். கண்ணாடி வளையல்கள் சலசலக்க பாத சலங்கை சப்திக்க

கையில் ஒரு கண்ணாடி டம்ளரில் 'சாயா'வுமாக திரையைத் தள்ளிக் கொண்டு வந்த ஜம்னாவை எழுந்து நின்று இடுப்பு வேட்டியை சரி செய்து கொண்டு அவளை ஒதுக்கியபடியே கொல்லைப்புறம்போன அவனைத் தொடர்ந்துபின் வந்தாள் ஜம்னா. அவன் மூர்க்கம் அவளுக்குப் பழக்கம்தான். பின்னாலிருந்தவாறே சொன்னாள்: "டீ வேணாமா?" "பல்லு விளக்க வேணாமா?" அவள் லேசாகச் சிரித்துக் கொண்டே "ஆச்சர்யமாத்தான் இருக்கு. பல்லுகூட வெளக்குவீங்களா? வேஷம், புருடா இதெல்லாம் செஞ் சாத்தானா? அப்புடீன்னு கத்துவீங்களோ? குளிக்காம முழுகாம தண்ணியடிச்சுட்டு பாயா ஏத்திகிட்டு ஊர சுத்தீட்டு இருந்த ஆளுல்லே நீங்கோ? உர்ன்னு மூஞ்சியைத் தூக்காதீங்கோ. நானா பல்லு வெளக்கறேன்னி சொன்னேன்"

பரந்தாமராஜூவுக்கு அவனைத் துருவித்துருவி ஆராய்கிற இந்த ஜம்னாவையும் ரொம்பப் பிடித்திருந்தது. அவள் ரொம்ப ஜாக்கிரதை என்று அவனுக்குத் தெரியும். இந்த ஓரிரண்டு நாளைப் பழக்கத்துக்குள்ளேயே ஓர் ஆண் இவ்வளவு படிந்து போவது—ஒரு பெண் இவ்வளவு விட்டுக் கொடுத்து விடுவது என்பதை இருவராலும் நம்ப முடியவில்லைதான்.

என்றாலும் ஜம்னாவும் சரி. பரந்தாமராஜூவும் சரி ஒருவரை ஒருவர் ஏமாற்றிக் கொள்ளத் தயாரில்லை. இந்தக் காலத்தில் எந்தச் சட்டங்களும் அவர்களுக்கில்லை. இவள் சொல்வது உண்மைதானே! பரந்தாமராஜூ கவலையுடன் நினைவு கூர்ந்தான். அவன் மாறிவிடவில்லை. அவனது நம்பிக்கைகள் அப்படியேதான் இருந்தன, ஜம்னா சுட்டிக்காட்டும் வரை. அவன் இப்போது அவற்றிலிருந்தெல்லாம் வழுவிக் கொண்டிருக்கிறான் என்ற பயங்கரம் தெரிந்தது. ஜம்னா ஆபத்தானவள். எழுந்து வாசனையற்ற அவளது கூர்மை–புத்தியின் அச்சம் இன்மை–நடவடிக்கைகளில் திறந்த தன்மை–அவளது பெண்மையின் முரட்டுத்தனம்–பரந்தாமராஜூவின் உள்க்குருத்துகளை ஜில்லிட வைத்தன. அவன் நேற்றிலிருந்து போதை போடவில்லை. பாயாஸ் அவன் கைகளில் கொடுக்கப்பட்டும் அவன் குடிக்கவில்லை. கஞ்சா சாராயம் அலுமினிய க்ளாஸில் அப்ப்டியே இருக்கிறது. கஞ்சா பீடிகளை அவன் தேடவில்லை. ரெண்டு நாளாக அவன் வேறு யாரிடமும் பேசுவதுமில்லை. இந்த சேரிப் பெண்களினுடைய சாகஸம்கூட அவனை அலுக்கடித்தது. இதெல்லாம் என்ன? குளிப்பது–பல் விளக்குவது இவற்றையெல்லாம் செய்ய ஆரம்பித்துவிட்டானே என்ற ஜம்னாவின் பார்வை, கேலி

உண்மையில் உஷ்ணத்தை அவனுக்கு நினைவூட்டியது. ஜம்னா பயங்கரமானவள். நேற்றிரவு அவள் இவனை நெருங்கவே இல்லையே? தலை சூடேறியது. அவள் உடம்பு எத்தனை ஆச்சர்யம்! அவளை அப்படியே சாப்பிட்டுவிட வேண்டும். அவளை அப்படியே விழுங்கித் தீர்த்துவிட வேண்டும். அவள் உடம்பின் க்ராம்பு மணம் அப்போதும் வாசமடிக்கிறது. அந்தப் பெரிய ஆமணக்குச் செடியைப் பார்க்கும்போதும் அந்தத் தேவடியாள் ஜம்னா மாதிரி இருக்கிறதே. பின்னாலும் ஜம்னாதான் நின்று கொண்டிருக்கிறாள். கிட்டே வந்தாலென்ன? எவ்வளவு படித்திருந்தால் இப்படிக் கிட்டே இருந்து விலகிக் கொடுத்து ஆட்டி வைக்க முடியும்? ஏய் லஞ்சா!–ஒரேய்! நாலஞ்சா! இப்புடு நின்னே விடிச்சு பெட்டானு. மரீ சூஸ்த்துனே உண்டு. நன்னு நின்னு சம்பபி பாரவேயாலி. ஒன்ன என்ன பண்ணப் போறேன்–பாத்துக்கிட்டே இரு. அந்த ஆமணக்கு செடி இத்தனை செழிப்பாக கடும் பச்சையாக பளபளக்கும் இலைகளுடன் நாலு புறமும் கைவீசிக் கொப்போடு வளர்ந்திருந்தது என்றாலும் ஜம்னா மாதிரிதான். மெல்லிசாக ஒடிசலாக ஒல்லியாக சதைப்பற்றில்லா சதைப்பற்றாக எப்போதுமே நெய் பூசிய கொழுப்பாக எங்கேயும் தள்ளிக் கொண்டும் துருத்திக் கொண்டுமில்லாமல் பதினாறு பதினேழு வயசுப் பெண்ணின் வாளிப்பைப் போல முப்பத்தைந்தைக் கடந்திருந்தது. ஆமணக்கு இலை ஒன்றைப் பறித்து, நீளமாகச் சுருட்டி, குச்சிபோல் உருட்டி, அதை வைத்துப் பல் துலக்கியபடியே– 'லஞ்சா லஞ்சா' என்று தெலுங்கில் திட்டியபடியே அவளைப் பார்க்காமலேயே, எப்போதாவது அவளுக்காகத் திரும்பாதது போலத் திரும்பி, காறித் துப்பிக் கொண்டும் அந்தக் குடிசை கொல்லைப்புறத்தில் ஆமணக்குச் செடியோரம் நின்று குடிசைக்குப் பின்னிருந்த கன்னாபின்னாவென்று காணப்பட்ட சிறு சிறு குடிசைகளின் வழியே செம்மண்ணில் புதைந்து கிடந்த சதுரக்கற்களில் நின்று கொண்டு மண் பானைகளில் இருந்த தண்ணீரை மொண்டு மொண்டு தங்கள் ஆயாசம் தீர குளித்துக் கொண்டிருந்த நைட் ட்யூட்டி பார்த்துவிட்டு வந்திருந்த ரயிலமுக்குப் போக தண்ணீரை சிதறடித்துக் கொண்டிருந்த குட்ஸ் யார்டு கூலிகள் பரந்தாமராஜுவின் பார்வையை வேறுபுறம் சாட்டினர். வட கிழக்கு கிழக்காக சரிவில் தனியாக இருந்த ஒரு சிறிய திண்ணையில்–அதுவும் ஒரு குடிசைதான்–அங்கிருந்த படியே எருமைத்தோல் ஒன்றை மிருதங்கக் கட்டை ஒன்றின் வாயில் வைத்து இறுக்கிக் கொண்டிருந்த பறையன் லாசரு இவனைப் பார்த்து முறை வைத்துக் கூப்பிட்டுக் கத்தினான். "ஏம் மச்சான், ஒங்க

பொண்டாட்டீ ம்மிராட்டிச்சியா?" எங்கிரபுந்து புடிச்சாந்தீங்க? நீங்க என்ன க்ளாக்கனா-இல்ல ட்ரான்ஸ் போட்ல இருக்கீங்களா?"

மிருதங்கத்துக்கு அவன் 'தும்தும்' என்று தட்டிப் பார்த்தபடியே கால்களால் மிருதங்கக் கட்டையைக் கவ்விக் கைகளால் ஒன்று விட்டு ஒன்று என்று வாரை மாற்றி மாற்றி இழுத்து இறுக்கியது. அபாரமாக சர்க்கஸ் போல இருந்தது. அவன் கவனம் முழுதும் மிராட்டிச்சி மேலிருந்தது. ஜம்னாவின் நிறம் இந்தத் தெருவிலுள்ளவர் எல்லோருக்குமே ஓர் ஆபத்து மாதிரி இருந்தது. ஆண்கள் வெறுப்பது சகஜமாகப் போய்விட்டது. வந்த ஓரே நாளில் அவர்களுக்கு நடுவே அவர்களைப் போல அவர்களோடு அவர்களாய் ஓயாது வேலை செய்து திரிந்தது அவர்களுக்கு ஆச்சர்யம். ஆனால் அந்தத் தெருப் பெண்களைப் போலக் கூசிக்கொண்டும், நாணிக்கொண்டும், இளித்துக் கொண்டும் புளித்துக் கொண்டும், பெண்களைப் பெண்கள் அடித்துக் கொண்டும் ஆண்களுடன் சரிசமமாக நின்றாலும், தொட்டுப் பேசினாலும் ஆண்களுக்கு முன்னே 'ஆ ஊ' என்று மூடிக் கொண்டும், பொத்திக் கொண்டும், இல்லாத நொடிப்புகளை எல்லாம் காட்டாமல், எவனையும் தூக்கியடித்து மூலையில் எறிந்து விடுகிற ஜம்னாவின் முரட்டுத்தனம், அங்கிருந்த யாருக்கும் பிடிக்கவில்லை என்பது பரந்தாமராஜுவுக்கு சுவாரஸ்யம்தான்.

"நான் எந்த வேலையும் பண்ணல. ஓங்கிட்ட மிருந்தங்கம் இருக்கா? ஏம் பொண்டாட்டி மிருதங்கம்கூட வாசிப்பா"

முதல் முறையாக ஜம்னாவைப் பெண்டாட்டி என்றழைத்தைக் கேட்ட ஜம்னா, அங்கே கிணற்றடியிலிருந்தபடி "டீ ஆறுதுய்யா" என்றாள். அந்தத் தெருப் பெண்களைப் போல. உடனே அவன் தலை திருப்பி அவளைப் பார்த்தபடியே "ஜம்னா. எனக்கு ஒரு அம்பது ரூவா வேணுண்டீ. கண்ணாடீல்லாம் வாங்கணும். படம் செதுக்கப் போறேன். காசிருக்கா? ஒரு எழுநூறு ரூவா இருந்தா படம் முழுசும் பண்ணீரலாம்" என்றான் அவளை உற்றுப் பார்த்தபடியே. இப்போது தான் தெரிந்தது அவளும் ராமலக்ஷ்மி மாதிரி கை இல்லாத ஜாக்கெட்டும், பாவாடை இல்லாத புடவையை சுங்கு விட்டுக்கட்டும் மாதிரியில் உடம்பை இறுக்கிக் கட்டியிருந்தாள் என்பதும், அதுதான் லாசருவின் கண்களைக் கொய்தது என்பதும், நேற்று இரவு அவன் அனாவசியமாகவே செய்து கொண்ட பிகு, விரைப்பு, எல்லாம் இப்போது பசியாக பகலையே இரவாக மாற்றினால் என்ன என்கிற வெறியையும் அவன் உணர்ந்தான்.

"என்னா? ஒரு வேலையுமில்லையா? அதுசேரி, இங்க எவனுக்குத்தான் வேலெயிருக்கு. கெடச்சா செய்வோம். இல்லன்னா தண்ணியடிச்சுட்டு உருண்டு கெடப்போம். ஜாலியா இருங்க மச்சான்"

"யோவ் கருக்கு மட்ட ஒன் வேலெயப் பாருய்யா. இத்கு புத்தி சொல்றக்க. நீ ஆளு இல்லே. நீ குட்ச்சுட்டு உருண்டு தொலெ. இத்கு நீ ஆளுல்லே"

"சரியான ஆளும்மா நீ. சண்டைக்கு வராத. இஞ்ச ஆம்பளங்களோட பொம்பளைங்க சண்டை போட மாட்டாங்க"

"என்கிட்டே வெச்சுகிட்டா எவனாயிருந்தாலும் ஏக் மார் தீன் துக்டா. இதுவே ஆம்ப்ளே–பொம்ப்ளே ஒண்ணுமில்லே ஜாக்ரதெ"

அதற்குமேல் லாசரு வாயைத் திறக்கவில்லை. அவனிடம் நெருங்கி நடந்து வந்த ஜம்னாவிடம் "ஏன்டீ இவனகளோடெல்லாம் ஒனக்கென்ன பேச்சு? பணமிருக்கான்னு கேட்டேனில்ல. உடனே வேணும். கண்ணாடில்லாம் வாங்கிட்டு வந்து அறுத்து பட்டை தீட்டி நெறைய வேல இருக்கு. என்னால குடிசக்குள்ளாற தூங்கிட்டிருக்க முடியாது"

"ஏங்கிட்ட காசெண்ணுமில்லே. சப்ஜாட் காலீ. வீட்டு சாமான் எல்லாம் வாங்கியாச்சு. ஒரு மாசத்துக்கு யாருகிட்டேயும் கை நீட்ட வேண்டாம். இஷ்ட்டமில்லேன்னா ரெண்டு பேரும் வேலக்கி பேகோ வேண்டாம், சம்ஜே?"

"நாம் பணங் கேட்டேன்"

"என்னாத்துக்கு மச்சான் பணம். நாந் தரேன். பூக்கட்டுன கூலி எம்பது ரூவா வச்சுருக்கேன். மச்சானுக்கு வேணுமா? வேணுமாயென்ன? எடுத்துக்க"

"யார்ரீ அது?" கோபத்துடன் திரும்பினாள் ஜம்னா. கொல்லை சீமைக் கருவை மரங்களுக்கிடையிலிருந்த வேலியைத் தாண்டி ஒரு குட்டிப் பசு போல ஓடிவந்த ராமலக்ஷ்மி, பரந்தாமராஜுவுக்கு மேல் உரசியபடி வந்து பராக்குக் காட்டினாள். ஜம்னா அவளைப் பார்த்து "மேரீ ஜான் என்னோட கண்ணுக்குட்டி! ஓங்கம்மாக்குத் தெரிஞ்சா என்னா சொல்லும்? ஓங்கப்பா திட்ட மாட்டோங்கோ?" என்று கூறியபடியே தன் சம்மதத்தை மறைமுகமாகச் சொல்லிவிட்டாள் கொடு என்று கேட்க முடியுமா?

"அப்பனாவது? ஆத்தாளாவது? ஏங் காச யாருக்குங் கொடுக்குறது என் இஷ்டமில்ல?" ராமலக்ஷ்மி திரும்பிப் பாய்ந்து ஓடினாள்.

"மஹ்ராஜ் ராமலக்ஷ்மீ பணங்கொணாந்து கொடுத்தா வேணாம்னு சொல்லிடாதீங்கோ. அப்பா கிட்டே போக வேண்டாம். பணங் கேக்க வேண்டாம். நம்மள்க்கு அவுங்க பணம் வேண்டாம். யார் பணமும் வேண்டாம். திர்ப்பிக் கொடுத்தூடலாம்."

"என்ன மஹ்ராஜ்ன்னு கூப்புடாதேன்னு சொல்றேன்ல?"

"ராஜூன்னு கூப்ட்டா ஒங்குள்க்குப் புடிக்கும். தெரியும். ஆனா நீங்கோ மஹ்ராஜ்தான்" அவளையே பார்த்து மெய்ம்மறந்தான் அவன்.

ஜம்னாவை மீண்டும் பார்க்கத் தொடங்கினான். டீ ஆறி விட்டிருந்தது. கிணற்றடியில் நின்று ஒரு காலை மடக்கிக் கிணற்றில் முதுகிற்குப் பின்னால் இருந்த தூணில் உதைத்து .மெதுவாக உடலை முன் தள்ளி சற்றே கையுயர்த்தி அவள் நின்றது- ஏரி நிறையத் தண்ணீரில் தனியாக மிதக்கும் படகுபோல்-அன்றையக் காலை வானத்தின் நீல வெளியில் அவள் மிதப்பாய் இருந்தது. அவளும் அவனைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். "போதும் தேகோ டீ ஆறிப் போச்சே போலாமா?" சிரித்தாள்.

"இனிமே எனக்கு டீயும் வேணாம்."

"வேற என்னா வேணுமாம்?"

"சொல்லட்டா?"...

"நாஞ் சொல்லட்டா?"

"ஓரேய்! லஞ்சா!"

"லஞ்சான்னா என்னாங்கோ?"

"லஞ்சான்னா-தேவுடியா..."

"ம்?"

"பஜாரின்னு அர்த்தம்"

அவள் கை நீட்டி கன்னத்தில் ரத்தம் வரக் கிள்ளினான் "ஹமார் லஞ்சா?"

"ஆமா, என்னோட... தேவுடியா. இனிமே உன்னெ எங்கியும் விட்றதா இல்ல"

"இன்னும் கட்டிக்கவே இல்லீயே! முக்காடு ஒண்ணேத்தான் எட்துருக்கீங்கோ. கானா குட்த்தாப்போதுமா? கருகமணிகட்டி 'ஹளது' செய்ய வேணாமா?"

"கல்யாணந்தானே? எப்ப வேணாலும் எங்கே வேணாலும்!"

"டீ வேணான்னாக்கா பாயா இருக்கூ... கொண்டாரட்டா?"

"இனிமே பாயாஸ், கஞ்சா, பாப்பீ– கள்ளு– சாராயம்– காப்பி–டீ–தண்ணி ஒண்ணும் வேண்டாம். எனக்கு நேத்திலேர்ந்து எல்லாமே வேண்டாம்னு ஆய்டுச்சு. இனிமே அதெல்லாமில்ல. வேற ஒண்ணைத் தேடிக்கிட்டே இருக்கேன்"

"அரே பஹ்வான்! என்னா மனுஷன் நீங்கோ! எத்னி நாள்ப் பழக்கம்? நிறுத்திட்டீங்களா? முடியுமா? ஏன் நிறுத்தணுமாம்? போதலை நீங்கோ ஆடிகிட்டு இருக்கும்போது நீங்கோ ரொம்ப அள்கா இருப்பீங்கோ. எனக்கு ரொம்பப் பிடிக்கும். கண்ணு ரெண்டும் பளபளப்பா கோழீமுட்டே மாதிரி ஜோராருக்கும். ராத்ரீலே கூடொ வெளிச்சம் போட்டா மாதிரி இருக்கும்"

"யேய், நிறுத்துடீ!"

"டீ சொன்னா என்னா அர்த்தம்!"

"முண்டேன்னு அர்த்தம்"

"ஏன் முண்டே சொல்றீங்கோ? நீங்கோ தானிருக்கீங்களே?"

"ஓஹோ. அர்த்தந் தெரியிதா? எனக்கு போதைக்கி இனிமே இதெல்லாம் போதாது"

"ச்சீ"

பரந்தாமராஜூ எழுந்து அவளது பிருஷ்டத்தில் கிள்ளினான். திரும்பிப் பார்க்காமல் குடிசைக்குள் நுழைந்து போனான். அவள் வாயிலிருந்து பிடுங்கிய மிட்டாய் இழந்த குழந்தைபோல் மேலும் கிணற்றின் திண்ணையில் சாய்ந்து கொண்டு அவன் போனவழி பார்த்தபடி ஆறி ஜில்லிட்டிருந்த டீயை உறிஞ்சி ஒருவித ஆத்திரத்துடன் மடக்கு மடக்கென்று குடித்து விட்டு வாயில் வந்த ஆடையைத் "தூ" என்று துப்பினாள்.

'தொம்–தொம்–தொம்' என்ற மிருதங்க சப்தம் அந்தத் திண்ணையிலிருந்து வந்து கொண்டிருந்தது. அவளுடம்பின்

மத்தகத்தை தட்டித்தடவிக் கொடுப்பதுபோல் இருந்தது. எழுந்து அவன்பின்னால் பித்துப் பிடித்தவள்போல் ஓடி அவன் கால்களைக் கட்டிக் கொண்டு அவனை வீழ்த்தி அவன் முலைப் பிரதேசத்தில் பாய்ந்து உறிஞ்ச வேண்டும்போல் தோன்றியது. என்றாலும் கைகளைக் கிணற்றின் மேலூன்றி மார்புகளை லாவகமாக முழங்கைகளால் ஒடுக்கிக் கொண்டு கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தபடி "ரேய்–லஞ்சா?" என்று கத்தினாள்

"லஞ்சான்னா என்னாக்கா?"பின்னால் இருந்து குரல் கேட்டது திடுக்கிட்டாள். திரும்பினாள். விம்மும் நெஞ்சுடன் ராமலக்ஷ்மி கையில் பணம். மூச்சு வாங்கியது அவளுக்கு. அவளையே நன்றாகப் பார்த்தாள் ஜம்னா.

"லஞ்சான்னா... ஓங்க மச்சானோட இன்னொரு பேரு. உள்றக்க போயீ அவருகிட்டே லஞ்சான்னு கூப்டு. எப்டி லஞ்சா இருக்கேன்னு கேளு. கட்டிப் புடிச்சு ஒனக்கு முத்தங் குடுப்பாரு" என்று கையில் பணத்தை வாங்கியபடியே சிரித்தாள் ஜம்னா.

# 8

மறுநாளைக்கு மறுநாள் மூன்று நாள்களுக்குப்பின் இரவு மணி மூன்றிருக்கும் வானம் நரைத்து பனியில் நனைந்திருந்தது. மேகங்கள் வானப் பள்ளத்தில் சந்திரனை ஈரத்தில் பிதுக்கித் தள்ளப் பார்த்துக் கொண்டிருந்தன. பொதுவாகவே நனைந்த ஈரமான சந்திரன் வெகு அழகு. ராமலக்ஷ்மி வீட்டுத் திண்ணையில் ராமலக்ஷ்மி மட்டும் அழுக்குத் துணியில் வியர்த்துக் கிடந்தாள். அந்தப் பனி வேளையிலும் பயத்தில் அவளுக்கு வியர்வை பொங்கி வந்தது. மூன்று நாள் பழக்கத்தில் இப்படி ஒரு பைத்தியம் அவளுக்குப் பிடித்தது அவளுக்கு பயமாக இல்லை. எப்போது அவளை அவன் தூக்கிக் கொண்டு போவான்? என்றிருந்தது. குளிக்கும்போது அந்த சினிமா டிக்கட் கொடுக்கிற மாமன் வீட்டுக்கு வந்தபோதுகூட அவனுக்குத்தான் இவள் என்று எல்லாருக்கும் தெரியும். வரும் போதெல்லாம் பூ-தேங்காய்ப் பூபன்-ஜாக்கட் பிட்-வளையல்-ஜிமிக்கி-ப்ளாஸ்டிக் ஸ்லைடு எல்லாம் கொண்டு வருவான். வீட்டில் யாரும் இருக்க மாட்டார்கள். அல்லது இருப்பார்கள். "கொஞ்சந்த தண்ணி கொண்டா ராமு!" என்று கேட்டு விட்டுப் பின்னாலேயே உள்ளே வருவான். முரட்டுத்தனமாக ஒரு பிடி. மூச்சுவிட முடியாது. சாராய நாற்றம்-கழுத்தில் அவன் கட்டியிருக்கும் துவாலையின் நாற்றம்-இதோடு

ரெண்டு நிமிடம் 'அம்மா' என்று கத்துவாள். திண்ணையில் பூக்கட்டிக் கொண்டிருக்கிற அம்மா "என்னடி சும்மாக் கத்துற? ஊரக் கூட்டாதே" என்று திண்ணையிலிருந்து பதில் வரும். வெளியில் எல்லாரும் சிரிப்பார்கள். ரெண்டு வருஷமாக அவள் பெரிசானதிலிருந்து வாரத்தின் ஏதாவதொரு நாளில் மாமன் இப்படிப் 'பிடி' போடுவான். ரெண்டு நாளைக்கு ராத்திரி தூங்கும்போது மட்டும் நடு ராத்திரியில் யாரோ நெஞ்சைப் பிடிக்கிற மாதிரி. அவனது மட்டகரமான சென்ட் வாசனையுடன் மூச்சை அமுக்குகிற மாதிரி இருக்கும். இந்த மூன்று நாளாய் இப்போது அதெல்லாம் மறந்து போய் அவளை வான மண்டலத்துக்கே கொண்டு போய்விட்டான் பரந்தாமராஜூ. அவளை மட்டுமல்ல, என்பதையும் பொறாமையுடனும் தாங்கமுடியாத அழுகையுடனும் ராமலக்ஷ்மிக்கு அடிவயிற்றில் ஏதோ குறுகுறுவென்று வேதனை செய்தது. இந்த மூன்று நாளில் மூவாயிரம் முறை பரந்தாமராஜூ அவளை உடைத்து வார்த்திருந்தான். இத்தனைக்கும் எல்லாருக்கும் மத்தியில்தான் எல்லாமே நடந்தது. கருப்பு–பரந்தாமராஜூவோடேயே ஒட்டிக் கொண்டாள். சுலோச்சனா பூக்கட்டப் போகறதில்லை. எதிரே இருக்கிற பறத் தெருவிலிருந்து நாலு பெண்களா வருவார்கள்? நாச்சி–வெங்கம்மா–சுப்புரமணி–சிப்பி வெள்ளை நாலும் ஜாதி கெட்ட நாயிங்க. அந்த நாலு பேரும் பரந்தாமராஜூவுக்கு ஒஸ்த்தி. மாயம் பண்றான். வீட்ல ஒருத்திய வச்சுக்கிட்டு இந்தக் குட்டிகளோட லூட்டி. காளியாயீ சக்தியுள்ள தெய்வம். கண்ண அவிக்கப் போவுது. ரெண்டு நாளா தெருப் பொம்பளைகள்ளாம் வாயப் பொளந்துகிட்டு நிக்கறாளுக. ராஜூ படம் பண்றாரு. ஜாக்குரத. தொடாத. எட்டி நில்லு. கிட்டப் போகாத. சாரத்து மேல ஏறாத. பரண்ல நிக்காத. ஒருத்தியா? ரெண்டு போரா? அஞ்சியே நிக்கிறாளுவ. சிப்பி வெள்ளை சொல்றா, "ராத்ரியெல்லாம் படம் வரஞ்சிங்கள்ளே, இப்படியே செத்தத் தூங்குங்களேன். ஒட்டுனது காயட்டும்? பரந்து சொல்லுது 'படுக்க எடமில்லாம' வெக்கங் கெட்டவ பதில் சொல்றா.' இந்தப் பரணைலயே படுத்துக்கயேன். அதான் விடியப் போவுதுல்ல. நானு கண்ணாடிக்கு புளிங்கொட்ட பசை அறச்சுக்கிட்டுருக்கேன். ரேக்கு ஒட்றேன்–ரேக்கு ஒட்றேன்னு இந்தக் கருப்பு முண்ட பரந்து பக்கத்லயே ஒக்காந்துகிட்டு இருக்கா" ன்னு மச்சான் சொல்லுது. 'இப்டியே ஒக்காந்துங்க. ஒம்மடில படுத்துக்கறேன். கூச்ச நாச்சமில்லாட்டியும் பயங்கூடவா இல்லாமப் போயிடும்! பேசாம உக்காந்து தொடய மடிச்சுக் காட்றா. படுத்துக்க மாமாங்குறா. பேரப் பாரு. சிப்பி வெள்ளையாம்.

சிப்பி வெள்ள செங்கல்லுன்னு வெச்சுக்கரதுதானே. மச்சானும் லேசுப்பட்ட ஆளில்லை. பேசாம அவ சொன்னா மாதிரி சிப்பி வெள்ளக்குட்டி மடீல தலையை வெச்சுப் படுத்துருச்சு. இந்த கருப்பு என்னப் பாத்துக் கண்ணச்சிமிட்றா. நாம் பாத்துக்கிட்டே இருக்கேன். பற சனத்த சும்மா சொல்லக்கூடாது. படுன்னு மடிய விரிக்கிறாளே. அத்தோட தூக்கி எறிஞ்சுப்புட்டு ஊட்டுக்கு ஓடி வந்துரணமின்னுதாந் தோணிச்சு. இந்தக்கா ஜம்னா பாயி இருக்கே அதச் சொல்லணும். மச்சான படம் பண்ண வுட்டுப்டு இது வூட்டுக்குள்ற தூங்கினா, அது ஊருமேயாம என்ன செய்யும்? மொத நாளே எனக்குத் தெரியும். கருப்பையும் மச்சானையும் காணும். சுப்ரமணிக் குட்டிக்கிட்ட மச்சானக் காணுமேடி எங்கேட்டு இருட்ல கையக் காட்றா. எங்க மச்சாம் போனீங்கன்னு? கேட்டா ஒண்ணுக்கடிக்கப் போனேங்குது. இந்தக் குட்டி–கருப்பு சிரிச்சுக்கிட்டு பக்கத்லயே நிக்கிறா. எனக்கென்ன? எவ எப்பிடிப்போனா எனக்கென்ன? சாமி காரியம். ஆத்தா–காளியாயீ நீதாங் கேக்கணும். எல்லாம் பொட்டுப் பொட்னு போவணும். என் வயித்தெரிச்சல் சும்மா வுடாது. நான் ஓளச்ச பணத்ல படம் எழுத ஆரம்பிச்சுருச்சு மச்சான். நல்லபடியாப் படம் முடிஞ்சி நல்லாப் படியா மச்சானும் எழுந்திரிக்கணும். மச்சானுக்கு ஒரு கொற வரக்கூடாது. பாவி மவ பாவிமவ–எந்தலை எளுத்து சினிமா டிக்கட் விக்கிறவனையும் தெருப்பொருக்கியையும் கட்டிக்க வேண்டி இருக்கு. அப்பா! மச்சானும் ஜம்னாக்காவும் என்னா மாதிரி சந்தோஷமா எப்பப் பார்த்தாலுஞ் சிரிப்பும் வெளையாட்டுமா கொஞ்சிக்கிட்டு–மச்சான் மாதிரி புருஷன் யாருக்குக் கெடைக்கும். மன்சனா அது. ஜம்னா பாயி அக்காவ வெரலாலக்கூட தொடுமோ என்னமோ. ரெண்டு பேரும் ஒருத்தர ஒருத்தர் கொஞ்சம் பலமா திட்டிக்காமக்கூட பொளைக்க முடியுமா? காசில்லேன்னு பட்னியா ஒக்கார வக்யமாட்டா மகராசி ஜம்னாக்கா. பூக்கட்ட ஆரம்பிச்சான்னா மனுஷி, மனுஷியேயில்ல. பேயி மாதிரி வேகம். கையெல்லாங் குங்குமமாப் போவுது. தெருவுல ம்மிராட்டிச்சி ம்மிராட்டிச்சிங்குறாளுவ. ம்மிராட்டிச்சியா அவ. என்னெக் கண்டாலே அதுக்கு அப்டி சந்தோசம் வருது. அன்னிக்கி மத்தியானங்கூட மச்சாங் குப்புறக் கெடக்குது. பரண்மேல. மூணுநாளா ராத்திரி பகலா வேல செய்றோம்ல. எவளுக்காவது ஒருத்திக்கு அலுப்பூன்னு வரணுமே. மச்சாம் மாதிரி படம் வரையிறதுக்கு யாராலமுடியும்? ராத்திரி மூணு மணிக்கி ராமலக்ஷ்மி, என்னமோ முதுகுல புடிச்ச மாதிரியிருக்கு. இப்டியே படுக்குறேன். அப்படியே முதுகுமேல ஏறி ரெண்டு

மிறி மிறிடீன்னுது. எனக்கு ஒடம்பே குப்புனு வந்திருச்சு. கீள வுளுந்துட்டேன்னா மச்சான்?ங்றேன்... 'சிப்பி வெள்ள மடீல தலய வெச்சுக்கறேன். அவ கையப் புடிச்சுக்க. கீள விளமாட்ட. ஏ களுத சிப்பி வெள்ள'... 'ம் ம்'ங்குது. கீள இருந்து கருப்பும் வர்றா மேல சிப்பி வெள்ள கையையும்'... கருப்பு கையையும் புடிச்சுக்கிட்டு மச்சாம் முதுகுல நிக்கிறேன். ராத்திரி நேரம். வெளிய கீள தெரு ஜனம் ஒக்காந்து கிட்டும் நின்னுக்கிட்டும் பாத்துக்கிட்ருக்கு. தெருப் பசங்க அரை டிராயரோடெல்லாம் நின்னுட்டுப் பாத்துக்கிட்டே இருக்கான். யாருக்கும் ஒரு கல்மிஷமும் இல்லியேடி. ஒரு தப்புந் தெரியல்லியேடி—காளியாயீ—தாயே—எனக்கு மட்டும் ஏன் இந்தப் பாவம்? மேலெ மிறிச்சுக்கிட்டே இருக்கேன். பெட்ரமாக்சு ரெண்டு கா்ருனு சத்தம் போட்டுக்கிட்டே எரியிது. முக்கா மண்ணேரத்துக்கு மேலே மிறிச்சிருப்பேன். எறெங்குன்னு சொல்லணுமே ஒரு வார்த்த. அடக் கீள நிக்கிற பெரிய மனுசன்—பாட்டனுவ—கெளவனுவ... டீக்கட நாயரு—அண்ணங்கலியன்—யாரும் "போதும்மா எறங்கு—வயசுப்புள்ள"—ஒரு வார்த்த உண்டா? இல்லியே. சிப்பி வெள்ள சொல்றா "என்னா மெறி மெறிக்கடி நீயி? நீ எறங்குறியா—நாம் மெறிக்கட்டா?' பற முண்டக்கிப் பேச்சிப் பாறேன்." "எல்லாம் எங்களுக்குத் தெரியும். ஒன் வேலயப் பாருடி"ன்னு மூஞ் சில அறஞ்ச மாதிரி சொன்னேன். என்னா சொல்லி என்ன? நம்ம தெருவு செறுக்கிகளுக்குத் துளுத்துப் போச்சு. காளியாயி சமாச்சாரம் இல்லன்னா மச்சான் இருக்குற இருப்புக்கு—மச்சானாகக் கூடலை இளுத்துப் போட்டு வூருக்கு மின்னாடிக் கொண்டு போயிருவேன். மச்சானையும் சும்மா சொல்லக்கூடாது. தெருப் பசங்களாட்டம் பின்னாலேய அலையிறது. ஆம்ப்ட்டா தொட்டுப் பாக்றது. கடைல கெடைல பாத்தா இடிக்கிறது. அவுசப் பேச்சுப் பேசறது. ஒண்ணுங் கெடையாது. அண்ணக்கி விடிய விடிய மச்சானோட நாந்தான இருந்தேன். நாலு மணிக்கி எனக்குங் கண்ண அசத்திட்டிச்சு. பரணக் கட்டேயிலேயே சிப்பி வெள்ளயும் சுப்புரமணியுஞ் சாஞ்சிட்டுத் தூங்குறாளுவோ. மச்சானுக்கு லைட்டுப் புடிக்கிறேன் நானு. பெட்ரமாக்சு லைட்டு ஆவி மூஞ் சில குப்புக்குப்புன்னு அடிச்சுக்கிட்டே இருக்குது. தூக்கங் கண்ண அசத்துது. கொஞ்சம் அசந்தா பெட்ரமாக்சு மேமூடியால காலு கொப்பளிச்சுப் போயிடும். மேமூடி அப்படிப் பளுத்துருக்கு. 'ஏ சிப்பி வெள்ள, நாயி, புளியம்பச என்னாச்சி? பச கொஞ்சங் காஞ்சிதுன்னா ஒம்மண்டய ஒடச்சுடுவேன். அறைச்சுக்கிட்டே இருன்னு சொன்னேன்ல்ல. முப்பது வருசத்துக்காவது நிக்கணும். படம் பேந்துதுன்னா ஒன்னப் பேத்துப்புடுவேம். பாருன்னு மச்சாங்

கத்துது. சிப்பி வெள்ள அசந்துட்டா. மச்சான் என்னத் திரும்பிப் பாக்குது.அப்பதான் நானு படத்தையே பாக்குறேன். என்னம்மா வரஞ்சுருக்கு. எல்லாங் கண்ணாடி ஒட்டு போட்டுப் பொட்டா பொட்டுக் கண்ணாடி ஒட்டி—என்னா வேல? அசுரங் கண்ணு ரெண்டுலயும் தீ பறக்குது. ஆன்னு வாயப் பொளந்துக்கிட்டு வானத்துல கையையுங் காலயும் நீட்டிப் பறக்குற அசுரன். வான மெல்லாம் நீலம். மச்சானுக்கு இதெல்லாம் எப்படித் தெரியுமோ? சாரத்துல எறங்கி அதுவே கொஞ்சம் பசய அறச்சி சிமிட்டீல கொளப்பி கைல எடுத்துகிட்டு மேல ஏறுது. மச்சானப் பாக்குறேன், ரத்த வேர்வ—ஒடம்பெல்லாம் நூறு மூட்ட நெல்லு தூக்கினாலும் தூக்கிரலாம்—எட்டு மாடி சாரத்துல ஏறி நெதம் நூறு சட்டி சிமிட்டிக் கலவை தூக்கியாறலாம். சல்லடம் ஒண்ணப் போட்டுக்கிட்டு குனிஞ்சு குனிஞ்சு மச்சான்—ஏம் மச்சாங் கண்ணாடி ஒட்றத இதெல்லாம்விடக் கஷ்ட்டம். மேல ஏறி வரும்போது கால் பெசகி நேரா முப்பது அடி ஒயரத்துலேருந்து கீள 'ஐயோ'... நாம் பெட்ரமாக்சையும் கீள போட்டுட்டேன். என்னால கத்தக்கூட முடியல. தொண்டையில் ஏதோ அடச்சுக்கிடுச்சு. கீள இருட்டு. காளியாத்தா...ன்னு கத்தணுன்னு பாக்குறேன். முடியல்ல. எல்லாந் திண்ணையில தூங்குதுவ. ஒரு ஈக்காக்கா முளிச்சுல்ல. ஆம்பளய பகலெல்லாங் கல்லுல சாந்து அறைக்கிதுவ தூங்காம என்னா பண்ணுவாங்க? அதுவே தண்ணி போட்டுந்தாந் தூங்கணும். சாதாரணமாகத் தூங்கமுடியாது. சாந்துன்னா என்ன? சாதாரண சுண்ணாம்பு—சிமிட்டச் சாந்தா? புளியங் கொட்டத் தோலு ! தோலு—இதோட முருங்கப் பிசினு எல்லாம் போட்டு மாவா இடிச்சு தேனாக் கொளப்பி வட்டமா கருங்கல்லு ரோதைய இளுத்து சுத்தி இட்லிக்கி மாவறைக்கிற மாதிரி பொங்கப் பொங்க ஆட்டி—மச்சாங் கீள போயிட்டியே'—கதறிக் கிட்டே ஓடுனா சாந்துத் தொட்டீல மச்சாங்... அவ மேல—அந்த நாச்சிப் பொண்ணு—நம்மளோட வராமலேயே பூக்கட்டப் போய்ட்ட எல்லாரு மேலேயுமே எனக்கு ஆசையாத்தானிருக்கு. ஒம்மேல எனக்கு வெறியே இருக்கு. நீ வாயத் தொறந்து சொல்லிட்டேடா ராஜா? இதக் கேட்டாலே ஓங்க தெருவு ஆம்பளைங்க வெட்டிக் குத்த வருவாங்க. ஆனா ஒனக்கு ஒண்ணு சொல்றேன், நீ கேட்ட புள்ளைய—புள்ளைக்காகக் கேக்றியா? இல்ல—என்னோட படுத்துகறதுக்காகக் கேக்றியா? எங்கிட்ட ராஜலக்ஷ்மி இத வந்தன்னிக்கே கேட்டாச்சு தெரியுமா? நான் என்ன மன்மதப் புடுங்கியா? இல்ல—பொம்பளப் பொறுக்கியா! ஒன்னோட... ஆசய என்னிக்காவது ஒரு நாள் நிறைவேத்தாமல் போகமாட்டேன். நீயும் எல்லா ஆம்பிளங்களையும்—விரும்பந்தாந்

செய்வ. எல்லாரையும் விரும்பீட்டா எல்லாரையுங் காதலிச்சிட்டா எல்லாரோடையும் படுத்த மாதிரிதான். இதோ பார். ஒன்ன எப்பவும் நான் எந்த நேரத்துலயும் மனசுக்குள்ள படுத்து கட்டிப்புடிச்சு ஒன்னக் குத்துயிராப் போற மாதிரி ஒன்ன இப்டித்தான் செஞ்சுக்கிட்டிருக்கேன்னு சொல்லிகிட்டே,

நட்ட நடு வெளிச்சத்துல நடுக் கோயில் வாசல்ல கட்டிப்புடுச்சி அந்த சொவத்தோரமா ஒக்காந்து கிட்டுத் தன்னோட மடீல அமுக்கி ரெண்டு நிமிஷத்துல என் உயிர எடுத்திடுச்சி. அது சொன்னது ஒண்ணும் எனக்குப் புரியலேன்னு அது நெனப்பு. மனுஷங்க ஏனிப்பிடி இருக்காங்க? ஒருத்தரு மேல ஒருத்தரு ஆச தனித்தனியா ஏன் ஓடணும்னு பாக்கறாங்க—இருட்டுக்குள்ற மச்சான் எனக்கு உசுரு. எங்கூர்ல எவனும் எம் மச்சானுக்கு ஈடில்ல. அது சொன்னபடிதான் நாங் கேப்பேன். இதே தெருவுலதாம் மச்சானோடையும் ஜம்னாக்காளோடயுந்தான் இருப்பேன். இருக்க வரைக்கும் அவங்களுக்கு ஒளச்சிப் போடுவேன். அது சொன்ன மாதிரி மாமனக் கட்டிக்கிட்டு மாமனோட மட்டும் பொளைப்பேன். மாமன் எப்படி இருந்தாலும் இனிமே எனக்கு பிடிக்காம்ப் போவாது. மச்சான நெனைச்சு அழுதுகிட்ருக்க மாட்டேன். மாமனுக்குப் புள்ள பெத்து குடுப்பேன். இதெல்லாம் எனக்குப் புரியாதுன்னு மச்சாஞ் சொன்னுச்சு. அது சொல்ற மாதிரி எல்லா ஆம்பிளையும் ஆசப் படனூன்னுதான் எனக்கும் ஆச. ஆனா எல்லா ஆம்பிளையும் அப்டி இல்ல. ஏம் மச்சாம் மூணே நாள்ல ஏம் மச்சானாய்ட்டான். அது மாதிரி எல்லா ஆம்பிளையும் மச்சானாவுமா? ஆகலாம்ன்னு மச்சாஞ் சொல்லுது. என்னைக்காவது ஏம் மச்சான் என்னியுந் தூக்கித் தலைல வெச்சுக் கரகமாடும்ன்னு நானு எப்பமும் காத்துக்கிட்டே இருப்பேன். பூக்கட்டி செறுக்கி—ஈனச்சாதீ—நாற முண்டையின்னு சொல்லிட்டுப் போட்டும். ஆனா ஒரு தடவ ஒரே ஒரு தடவ என்ன... என்ன... பழந்துணிக் குவியலைக் கட்டி இறுக்கி பரந்தாமராஜூவாக அந்தப் பழந்துணிக் குவியலுடன் புதைந்து அந்த அழுக்கு நாற்றத்திலேயே—அவளுக்கு ஒரே நாளில் அனுபவமான பரந்தாமராஜூவின் உடம்பின் வாசனையையும் அவன் தோள்களின் இறுக்கத்தையும் வியர்வை நெடியையும் உயிர்க்குறியாய் உருவகித்து, வியர்வைக் குளத்தில் மிதந்து—உயிர்க் குறியில் தன் நெஞ்சை, மார்புகளை இறுகப் பதித்து, குலுங்கிக் குலுங்கி அழுது வாயை அழுக்கு துணிக்குள் புதைத்துக் கொண்டு அடங்கிப்போனாள், அந்தச் சிறுமி ராமலக்ஷ்மி. விடிந்தது வெகு நேரமாகித்தான்.

# 9

அற்புதங்கள் எண்ணில் நிகழும் என்பது இந்தக் காலத்தில் சாத்தியமில்லை என்பார்கள். ஒரு வாரமாக—இல்லை பத்து நாட்களாக—அந்தச் சேரித் தெருவில் வேறென்னதான் நடந்து கொண்டிருக்கிறது? அற்புதத்தைத் தவிர? அந்த கீழ ரெண்டாவது வண்டிக்காரத் தெரு இருக்கும் நூறு நூற்றைம்பது குடிசைகளுக்கும்—அங்குள்ள பெண்டு பிள்ளைகள் மனிதர்கள் மாடு முதல் நாய் வரை எல்லாருக்குமே வேண்டியவனாகிப் போனான் பரந்தாமராஜூ. ஜம்னாவைத் தெரியாதவர்கள் யாரும் இல்லை. பொறாமை தாங்க முடியவில்லை என்றாலும் அந்தப் புராதனக் காளி கோயிலில் எதிர் சரகில் காளியாயியைப் பார்த்துக் கொண்டே காவல் தெய்வமாக உருவாகி இருக்கும் அற்புதமான இந்த அசுரனின் கலை— இந்த அற்புதங்களையெல்லாம் விளைவித்திருக்கிறது என்று சொன்னால் யாரும் நம்பவா போகிறார்கள்? காளிகூட வேண்டாம் பட்சம் ஆகிவிட்டாள் அவர்களுக்கு. குனிந்த புருவமும், நரம்போடிச் சிவந்து உருட்டி பயங்கரம் செய்யும் பெருஞ்சுடர் விழிகளும், வெளித்தள்ளி வாயில் தீ கக்கும் நாக்கும், இருபுறமும் வளைந்து உதடுகளின் கூர் முனை இரு பாரிசங்களிலும் கோரப்பற்களின் வளைவும், கங்கண மணிந்து சுக்குமாந்தடி தாங்கிய இடக்கரமும், கொலைவாள் தாங்கிய வலக்கரமும், கைக்கொரு ஆயுதமாய் நூறு கரங்கள்—இருநூறு

பற்கள் நூறாயிரம் கால்கள்—ஆஹா! படத்தை விவரிக்க முடியுமா? ஒரு ஓவியத்துக்குள் நூறு ஓவியம்-ஒரு கோணத்துக்குள் நூறு கோணம்-ஆயிரத்தெட்டு முக்கோணங்களில் அசுர முக்கோணம் ஒன்றே ஒன்று—ஏகம்-ஜகத்தானந்த ஹகதோத்தாரண ஜகத்ஸ்மித ஜகே நிரூபணம்—விளக்கமுடியாத பயங்கரம்—ஊழித்தீயை எரித்துப் பொடித்து சாம்பலாக்கிய மனித குலத்தின் பசியின் வடிவாய் அசுரன்! காவல் தெய்வம்! ஆனால் இங்கே காவல் காளிக்கில்லை. காளிக்கு வெளியே ஜகம்-உலகம்-ஜனம்-மடிந்த-மடிந்து கொண்டிருக்கிற-மறுபடி உயிர்க்கப் போகிற-ஜகத்துக்குக் காவல்! அழிவுக்குக் காவல்! பிறப்புக்கும் காவல்! இந்த மூலைச் சேரி கோயிலில் இத்தனை அர்த்தங்களுடனும் அந்த அசுரன்படம் இந்த ஜனங்களுக்குத் தேவையா? கலை விமர்சகர்கள் புலம்பினார்கள். அமைதியாகத் தெருக்களில் எந்தக் காரணமுமின்றி ஒரு பைராகிபோல் சுற்றிக் கொண்டிருக்கிறான் பரந்தாமராஜு. பூக்கட்டும் மனுஷ்யர்களெல்லாம் அவனை "தம்பி-தம்பி" என்று தலைக்குமேல் தூக்கினார்கள். அவர்களுக்குக் காவல் தந்தவனல்லவா? செத்துப்போன பழைய உத்தாரணங்களல்ல அசுரன் படம். அன்றாடம் வாழ்ந்து கொண்டிருக்கும் அந்த ஏழை மக்களின் குறியீடு அந்த அசுரன். அவர்களை ஒன்று கூட்டி மலையுடன் நிலைக்க வைக்கப் போகிற ஜடராக்னி அது. அது வெறும் பசியல்ல. பசியின் இழிவே அது தணிந்து விடுவதில் தானிருக்கிறது காமத்தின் அவலமே, அது அடங்கிப் போவதில்தான் உதிர்ந்து போகிறது. தேவீ மயாமயீ—பசிவடிவமாய் காமத்தின் வடிவமாய் எப்போதும் அசுரனாய் எங்களுக்குள்ளேயே இரு—பசியே விலகாதே. வறுமையே உன்னைச் சாய்க்க நான் வரவில்லை. உன்னை எப்படிச் சாய்க்கமுடியாதோ அதுபோலென் ஞானத்தையும் என் நெஞ்சின் அன்பையும் இவற்றையெல்லாம் அறிந்து கொள்ள முடியாத மூட ஜனங்களின் முனைப்பையும் ஒருக்காலும் அழிக்க முடியாதென்று அசுரன் கால் கை வீசிப் பறக்கிறான். எண்ணில் கோடி அண்டம்-முற்றும் சுழலும் அறியாமை—எத்தனை பேதம்? எல்லாம் பசி வடிவே. இயங்கும் இயக்கே-பசி... உன்னை என்றும் வணங்குகின்றேன். என்றும் எப்போதும் என்னுள் எரிந்து என் அறியாமையை நீக்குவாய். அசுர... தேவனைத் தேடி நான் ஓய்ந்து போனேன். பர மண்டலங்களின் சாளரங்களின் வழியே அவன் எட்டிப் பார்த்துக் கதவைக் கொட்டி அடைத்துக் கொண்டான். விஷ்ணும் விஷ்ணும் விஷ்ணும் நமோ நமஹ—என்று புலம்பினேன். வைகுண்டம் தெய்வ நகை பூண்டது. கபால ஓடுகளை மிதித்து சுடலைச் சாம்பல் பொடி பூசி சிவனை எட்டித் தொட்டேன். அது

உன்னுள்ளேயே என்றலறியது. என்னுள்ளேயே தேடிக் காணாமல் என்னுள்ளே நின்று கொண்டே இருக்க முடியவில்லை—கானல் தீவு. எல்லாம் கனவு என்றது. காமம் கடலெனப் பெருகி சாக்கடை சால்புரண்டது. பெண்கள் தங்கள் கால்களை எனக்குத் திறந்தபோது என் காலில் நான் மூழ்கினேன். முடை நாற்றம். இனிப்பாக சாக்கடை மணமூற தானே எனக்குள் நறுமணமாய்த்–தீயாய் எரிய ஆரம்பித்தேன். ஜகதீஸ்வரி–உன் அல்குல் ஒன்றெனக்குப் போதாது. உன் கல்முலைகள் இரண்டின் காடின்யம்–உன் குசத்தின் உன்னதத்தை நான் உன்னிடம் மட்டும் அருந்தினால் போதாது. கவிதையை, காவியத்தை, சித்திர சைத்ரீகத்தை–சில்ப லாவண்யத்தை இலக்கியத்தின் தீச்சுவையை யாதேவீ சாவ பூதேஷு நமஸ்தஸ்த்யை நமோ நமஹ–மன்னித்து விடடி கால பைரவி! உன் காமம் என்னை அடக்கப் போதாது. என் காமம் சாக்கடை. மலக்கும்பி. ஆனால் லக்ஷம் கோடி–கோடி கோடி அண்டத்துச் சாக்கடை–அதற்கு 'உன்னது' என்ற ஆழிசூல் அல்குல் ஒன்று மட்டும் போதாதடீ பேயே! மண்ணில் உழலும் உனது கோடி யோனிகள் வேண்டும்.

அது தினமும் இச்சித்து கண்டவனையெல்லாம் கலந்து மனசால் உடலால்–மனசுக்குள் கலந்து வாழும் வகையற்ற திறனற்ற வெறும் யோனிகள் கோடி கோடி வேண்டும். இந்த மலமெல்லாம் இந்த பூமியிலேயே உரமாகும். அசுரன் வருகிறான். கன்னுமாந்தடி சுற்றி இவற்றை மண்ணிலேயே எழுப்ப வருகிறான்.

மதிய வெயிலில் உச்சி நேரத்தில் பறத்தெருவில் எந்தவித முனைப்புமற்று நடந்து கொண்டிருந்த பரந்தாமராஜூ இந்த பூமியில் இல்லாததால், அவன் கால்கள் பின்ன அவன் ஜபித்துக் கொண்டிருந்த பசியில் நாம ஜபத்துக்குள் செம்மண் புழுதியில் தலை தெறித்து விழுந்தான். தாழ்ந்த குடிசைகள்–நாய்கள் அவனையே பார்த்துக் கொண்டு குரைத்தன. அங்கும் எங்கும் அவனைப் போலவே பசியில் மூழ்கிய பெண்கள் இரவு கணவனை–மகனை–அண்ணனை அரிசிக்காகக் காத்து நிற்கும் பெண்கள்–இவன் கீழே விழுந்ததைப் பார்த்ததும் ஓடி வந்து இழுத்துப் பக்கத்து வீட்டுத் திண்ணையில் போட்டார்கள். ஒரு மண்பானைத் தண்ணீரை அவன் தலையில் கவிழ்த்தார்கள். சுற்றிலும் கால்கள். அவன் கண் விழித்தபோது எங்கும் கால்கள். கறுத்த கால்கள். பசியின் கால்கள். இதென்ன சோகம்? இதென்ன தலை பாரம்? இவர்களுக்குத்தானே பசி வாட்டம்? ஆனால் இந்தச் சுமை அவர்களுக்கில்லை. இந்த நெஞ்சின் தீச்சுனை

அவர்களுக்கில்லை. வெள்ளை விழிகள் மேலேற அலமலந்து அவர்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டே யாருக்காவது நாளைக்கு சாகப் போகிறோம் என்ற பயம்-எப்போது சாகப் போகிறோம் என்பது தெரியாத அநித்யத்தின் பயம்-இந்த உலகை அவர்கள் கையிலிருந்து தட்டிப்பிரித்து அவர்களை எங்கோ அனாமதேயத் தீவில் எறியப் போகிற தனி நிலை துக்கம்-ஒன்றிலும் ஒண்ணுமில்லை எனும் அச்சம்-இவர்களில் ஒருத்தருக்கும் இல்லையே? அது எப்படி? சிரிக்கிறார்கள்-பரந்தாமராஜூவால் சிரிக்க முடியவில்லை. பசி வந்தபோதும், உண்ண ஒன்றுமில்லாதபோதும் அவர்கள் கணவர்களுடன்-எதிர்வீட்டுக்காரனுடன்-யாரோ தெரியாதவனுடன்-விரும்பாமலேயும், தெரிந்தும் தெரியாமலேயும்-ஓயாமல் அவர்களின் எஜமானர்களுடனும் படுத்துப் புரண்டு தங்கள் காமத்தை மேலும் எரித்துத் தீயாக்கிக் கொள்கிறார்களே? கிடைத்த ஒரு கவளம் சோறுபோதும். அடுத்த நாளுக்கு மறுகவளம்-அதில் பாதிகூடப் போதும்-எந்த தார்மீகமும் இவர்களுக்கு வேண்டாம். இந்தப்பொழுது கழிந்தால் பரமானந்தம்-இங்கே எனக்கும் இவர்களுக்கும் உள்ள ஒரே வித்யாசம்-இவற்றைப் புரிந்து கொண்டும் நான் அலைந்து கொண்டிருக்கிறேன். இவர்களோ இதைப் புரியாமலேயே அலைந்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள் புரிந்து கொள்வது நல்லதா? புரியாமலேயே இருப்பது நல்லதா? 'Being nothingness'-இதுதான் வேத ஸ்ருதி. நேதி-நேதி-நேதி-அசுரன் வருகிறான். Our mada, who are in mada, mada by the name, thy will be in mada in mada as it is mada... நௌஷா... நௌஷிகா-"கற்ற கல்வியெல்லாம் கழிநீராய் அரித்தோட மீண்டது மணற்காடு" D. G நாராயணசாமி-எவளோ ஒருத்தி கேட்டாள். "நாராயணசாமியா! அது இல்லியே மீனு வித்துப்புட்டு ராத்திரிதான் வரும்"-இன்னொருத்தி சொன்னாள்-பெரிய எடத்துப் பையன்-குடிச்சுப்புட்டு என்னா பொலம்பு பொலம்பிக்கிட்டுப் பொரளுது பாரேன்-தூக்குங்கடீ வண்டைகளா-தூக்கீட்டு-போயி... இந்த ம்மிராட்டிச்சி வூட்டுத் திண்ணையில போட்டுட்டு வந்துடுங்கடி. பாவம் அந்த பொண்ணு இவனக் கட்டிக்கிச்சு பாரேன்."

"ந்தா-நீ மாத்தரம் என்னா பண்ணியாம்? அவன எங்க வுட்ட இப்ப? முந்தானைல முடிஞ்சு வச்சுக்கிட்டா இருக்க? முடிஞ்சதா ஒன்னால? எவனையோ வச்சுக்கிட்ட ஓங்கத எனக்குத் தெரியாதா? நாரமுண்ட. என்னப் பத்தியா பேசுற" கூச்சல் மிகுந்தது. காட்டத்தோடு ஆண்களின் குறிகளைப் பற்றியும்-அது எங்கெங்கே நுழைந்து அது எத்தனை ஜாதிகளைப் பிளந்து

மறுபடியும் இங்கேயே வந்தது என்பதைப் பற்றியும்அவர்கள் பேசிய அற்புதமான வார்த்தைகள். எந்த போதையாலும் கீழே உருண்டு கிடக்காத பரந்தாமராஜூவை நிஜமாகவே போதை கொள்ள வைத்தது. அசிங்கமான திட்டுகள்–வண்டை வண்டையான சந்தோஷங்கள்–ஒவ்வொருவொருவருக்கும் எந்த வயதிலுமே சந்தோஷம் தருகிற அசிங்கமான வார்த்தைப் ப்ரயோகங்கள்–பரந்தாமராஜூ கைகளை ஊன்றி எழும்பியபோது அந்த உடல்களின் மணத்தை அறிந்தான். நிறையக் கைகள்–கால்களில் கொண்டு வந்து அவன் குடிசைத் திண்ணையில் போட்ட கைகள்–எல்லோருக்குமே அவன் வேண்டியவனாய் இருந்தும் வேண்டாதவனாய் இருந்தான். அந்தத் தெரு அவன் தெருவாகிவிட்டது. மிராட்டிச்சி அவனுடையவளாக இருப்பதைப் போலவே அந்தத் தெரு பெண்கள் எல்லோருக்கும் ஒருவித அசிங்கமான உறவு பேரளவிலேனும் இருந்து கொண்டே இருந்தது.

தலைதூக்கி எழுந்தபோது அவன் முன்னே மீன் துண்டுகளும் சோறும் அலுமினியத் தட்டும் வைக்கப்பட்டது. பசியின் ருசி அறிந்தவன். கண்களில் பசியின் போதே–எதிரே அழுது கொண்டே பரிமாறும் கருப்பு–என்ன செய்துவிட்டான், அவர்களுக்கு? ஒருபடம்–அல்பமான ஒரு ஓவியம்–பாரம்பரியமில்லாத கண்ணாடி ஒட்டுப் படம்–இது இந்த மனிதர்களை எப்படி ஒன்றச் செய்திருக்கிறது? என்ன மாயம்? ஒன்றுமில்லை. முப்பதடி இருபதடி நீளச் சுவரொன்றில் ஒட்டிய கண்ணாடிச் சுவர்–வைரமில்லை! தங்கமில்லை!–மீன் துண்டுகள் முள்ளுடன் மென்று விழுங்கினான்.

“முள்ளு மச்சான்! எடுத்துட்டு சாப்புடக்கூடாது” ஜம்னா எதிரே நின்று கொண்டுதான் இருந்தாள்–எல்லோரும் அவனையே பார்த்தார்கள். பரந்தாமராஜூ வந்தால் முந்தி மாதிரி இல்லை. தெருக் கூடிவிடும். சோறு என்றவன் கேட்க வேண்டியதில்லை. யார் வீட்டிலிருந்தாவது ஏதொரு பெண்ணாவது எதையாவது போட்டுப் பிசைந்து எடுத்துக் கொண்டோடி வருவார்கள். தெரு முனையில் நின்றால் நாயர் சொல்லாமலேயே டீ ஃபுல் ஒன்று கொண்டு வந்து வைத்து விடுவான். தெருக்கிழவர்கள்–வயதானவர்கள்–அவனைப் பார்த்தால்போதும். ‘வாங்க தம்பீ–திண்ணல குந்துங்க. ஏய் பாய எடுத்துப் போடுறா. ஏட்டீ! டீ வாங்கியா. பன்னு வாங்கியா–ஏந் தம்பீ–சிரட்டு?” என்று கீழேவிடமாட்டார்கள். என்ன அன்பு இது? கல்யாணமான பெண்கள் குழந்தைகளை அவன் கையில் கொடுப்பார்கள். கல்யாணமாகாத வயசுப் பெண்கள் அவனைப் பார்த்ததும் மலரச் சிரிப்பார்கள். உடனே வந்து அவனிடம்

பேசுவார்கள். அந்தத் தெரு ஆண்களிடம் நெளித்துப் புளித்து வெட்கப்படுகிற–தட்டிக்குப்பின்னால் மறைகிற–தேவைப்பட்டால் உள்ளே அழைக்கிற–இருட்டுக்குள் மறைகிற–'அந்த' ரேங்கு'கிற காரியமெல்லாம் பரந்தாமராஜூவிடம் வைத்துக் கொள்ள மாட்டார்கள். அசுரன் தானா? சும்மாவா? வானத்தை அளக்கிற அசுரன்–அண்ட சராசரங்களைக் கிழித்துப் பறக்கிற அசுரன்–தஞ்சாவூர் சித்ரப் படத்துக்கு இந்த மௌஸ் வருமா? பத்திரிகைக்காரர்கள் எடுத்து பிரசுரித்த அசுரன் படம் பரந்தாமராஜூவின் பெயரை திசைதிசையாகப் பிரித்துக் கொண்டு போய்க் கொண்டே இருந்தது. நடைபாதையில் ஒரு கோயில். அதில் ஒரு கலா சாசனம். விலையில்லா மாணிக்கம் என்றெல்லாம் கும்பாபிஷேகத்தோடு பரப்பினார்கள். பரந்தாமராஜூவுக்கு இந்த பேயாட்டங்கள் ஒன்றும் உவப்பாயில்லை. ஜம்னா திரும்பத் திரும்ப அவனைப் பாதுகாத்துக் கொண்டிருந்தாள். ஒன்றையும் கட்டுப்படுத்த மாட்டாள். எதிலும் அழுத்தம் கொடுக்க மாட்டாள். உரத்துப் பேச மாட்டாள். எப்படி அவனை இப்படி முற்றும் முழுதும் அவள் படித்துக் கொண்டாள். பட்டினி கிடப்பதில் அவனுக்கேன் இத்தனை ஆனந்தம்? சோறில்லையா வீட்டில்? ஜம்னா இப்பொழுது ரெட்டை சம்பாத்யம் செய்கிறாள். அவளைக் காண்பதே பகலில் அரிதாயிருந்தது. நாலு மணிக்கு விடியற்காலைப் பூச்சந்தைக்குப் போய் விடுவாள். தஞ்சாவூர் பூச்சந்தை மிகப் பெரியது. மூட்டை மூட்டையாக மரிக்கொழுந்து வந்து இறங்கும். புற்றீசல் போல விடியற்காலையிலேயே பெண்கள் ஆண்கள் என தஞ்சாவூரைச் சுற்றியுள்ள கிராமங்களிலிருந்தெல்லாம் ரோஜாப்பூவைக் குவியல் குவியலாகக் கொண்டு வந்து தள்ளுமிடம் பூச்சந்தை. ஜம்னாவுக்கு மாலை கட்டுகிற வேலை. ஒரு மாலை கட்டிக் கொடுக்க ரூபாய் இருபது கேட்டாள். ஜரிகை வைத்து ரோஜாப்பூ மாலை கைகையாக அளவெடுத்து அவள் செய்கிற செய்நேர்த்தி மின்னல் வேகம். பரந்தாமராஜூவுக்கு ஜம்னா மாலை ஏழு எட்டு மணிக்குத்தான் கிடைப்பாள். இப்போதெல்லாம் ஜம்னா காசை எண்ணி அவனிடம்தான் கொடுக்கிறாள். அவனிடமிருந்துதான் வாங்கிக் கொள்கிறாள். பூக்காரத் தெருப் பெண்கள் மாதிரி சுங்குவிட்டுப் புடவை கட்டிக் கொள்கிறாள். ஒரு பக்கம் விலகிய மாராப்போடு அவள் விலை சொன்னால், காசை அள்ளி எடுத்துக் கொடுத்துவிட்டுப் போகிறவர்களைத்தான் பார்க்கிறாள் ராமலக்ஷ்மி. எதையும் வாங்க மாட்டாள். மத்யானம் பரந்தாமராஜூ வீட்டுக்கு வருவதற்கு முன்னால் பாய்ந்தோடி வருவாள். அதற்கு முன்னேயே சுலோச்சனா வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருப்பான்

பரந்தாமராஜு. கறிச்சட்டியை எடுத்துக் கொண்டு அவள் வீட்டுக்குள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பரந்தாமராஜுவின் இலையில் இவளும் ஒரு அகப்பை கறியைப் புரட்டி விட்டு வருவாள் அள்ளி வைத்துக் கொள்ளுவாள். இப்போதெல்லாம் கருப்பு, சுலோச்சனா ஆகியோர் ஒருவரை ஒருவர் தேடிக் கொள்வதில்லை. எல்லோருக்குமே தெரியும். பரந்தாமராஜுடன் இருப்பார்களென்று. இருந்தும் பரந்தாமராஜு ஏன் பட்டினி கிடக்கிறான்? என்பது எல்லோருக்குமே புரியாத புதிராக எப்போதும்போல் இருந்து வந்தது. அவர்களுக்கு பசி என்பதும் தீர்ந்து போவது என்று நம்பிக் கொண்டிருப்பவர்கள் தானே! ஜம்னா எப்படி சந்தோஷமாக இருந்தாள் என்பதும் அவர்களால் விளக்கிக் கொள்ள முடியவில்லை. ஒரு நாளின் பதினைந்து மணி நேரம் வேலை செய்கிறவள் ஜம்னா என்பதுகூட அவர்களுக்கு விளங்கவில்லை. ஒன்பது மணிக்குமேல் வரும் ஜம்னா ஏற்கனவே தூங்கிக் கிடக்கும் பரந்தாமராஜுவை எழுப்பாமலே படுத்துக் கொள்ளும் விசித்ரம்–வெகு வியப்பு–ராமலக்ஷ்மிக்கு. ராமலெக்ஷ்மி பெரும்பகுதி நேரமும் அவர்களிருவரின் வேலைக்காரியாகவே இருந்தாள். கருப்பு, ஜம்னாவிடம் எல்லாவற்றையும் சொல்லி இருக்கிறாள். சுலோச்சனாவும் வெள்ளையம்மாளும் ஜம்னாவுக்கு ராமலக்ஷ்மியின் வெறியைப் பற்றி ஓயாது கோள்மூட்டுவது வேலைதான். ஜம்னா சிரிப்பாள். 'அதுங்க படுத்துக்கட்டுமே? என்ன இப்போ? என்ன அது கேக்குதா? எஞ்சே போறே? எஞ்சே வரே? எவனோட பேசுறே? யாரோட படுக்கறேன்னுட்டு? ஜம்னாவுக்கும் அந்த சந்தேகம் எப்போதும் உண்டு. அவன் பசி, அவனது பட்டினி–அவன் தேவையில்லாத புலம்பங்கள்–எல்லாருடனும் எல்லாவற்றையும் பேசுகிற அல்லது பேசாமலேயே இருந்து விடுகிற சாமியார்த்தனம்–பெண்கள் அவனை எப்போதும் இச்சிக்கும் பயங்கரம்–எப்போதும் அவன் பறவையாக ஊர் சுற்றும் அவனது அலட்சிய அனாசய அர்த்தமற்ற சோகம்–எல்லாம் அவளுக்கு அவனைப் போலவே நிரம்ப சந்தோஷத்தைக் கொடுத்தது. எனவே அவளுக்கு அவனுடன் பேச்சும் செயலும் வெகுவாய்க் குறைந்து, புரிந்து போயிற்று. அவன் எப்போதும் அவளை அழைக்கவே மாட்டான். 'ஜம்னா' என்று கூப்பிட மாட்டானா? ஒருமுறை பளிச்சென்று கட்டி இந்த நாய்களுக்கு முன்னாலேயே புரண்டு விழ மாட்டானா என்று உடல் கிடந்து பறக்கும். ஆனால் அவனே சொல்கிற மாதிரி 'ஜம்னாக் குட்டி–ஜம்னாக் குட்டி'ன்னு உன்னையே சுத்திச் சுத்தி வர வேண்டாமா? என்று அவன் பொட்டில் அறைந்தாற்போல் அவளது எல்லா உணர்ச்சிகளையும்

கட்டி இறுக்கி விடுகிறான். அவள் கேட்பதில்லை. அது ஒரு சுகம். இன்று வரை ஜம்னாவுக்கு எந்த ஆணிடமிருந்தும் கிடைக்காத ஆண் தந்த சுகம், உடம்பு முழுதும் அவன் நிரம்பி அவளைப் பேயாய் உலுக்கி அருந்துகிற இந்த சுகம்-உடம்பிலிருந்து கிடைப்பதல்ல. என்றாலும் அவன் கீழடங்குகிற அந்த உடம்பில் இந்தச் சுகத்தையும் உடம்பின் வழியாகவே தருகிற அசுரபலமும் பரந்தாமராஜூவின் நரம்புகளுக்குண்டு. ஜம்னா ஊட்டிவிட அவன் சாப்பிட பக்கத்தில் இருந்து ராமலக்ஷ்மி பார்த்துக் கொண்டு விசிறிவிட ஒவ்வொரு இரவும் சில வேளைகளில் ஜம்னாவுக்கும் ராமலக்ஷ்மிக்கும் கிடைக்கும். ஒருவேளை இன்று அழைப்பானோ? என்று இருவருமே பூரிப்பில் இருக்கும்போது ராமலக்ஷ்மியின் மாமன் வந்திருப்பதாய் அவள் அம்மா வந்து கூப்பாடு போடும்போதும் ராமலக்ஷ்மி எவ்வளவு நேரமானாலும் திரும்ப வந்து தனித்தனியே உறங்கிக்கொண்டிருக்கும் அவர்களிருவரையும் வருத்தத்துடன் பார்த்து விட்டு, அங்கேயே அவர்கள் இருவரின் காலடியில் படுத்துக் கொள்வதும் திடீரென்று விழித்துப் பார்க்கும்போது நிலைகுலைந்து கிடக்கும் ஜம்னாவின் ஆடைகளை சரிப்படுத்தி போர்த்தி விடும்போது மட்டும் ராமலக்ஷ்மிக்கு அவர்களிருவரின் ரகசியம் புரியும். இப்படி ஒரு ஆம்பளையும் பொம்பளையுமா? என்று ஏங்கிப் போவாள் அவள். பெரும்பாலும் விடிகிற நேரத்தில்-நாலு மணி அரை இருளில்-அவனை ஒரு வித மூர்க்கம் ஆட்கொள்ளும்-அப்போதுதான் ஜம்னா எழும்பிப் பூச்சந்தைக்குப் போக வேண்டிய நேரம். கிளம்பிக் கொண்டிருப்பாள். இருட்டில் கொல்லையில் குளித்துப் பாதரசம் ஒலிக்கப் பிக்கலிட்டு குஞ்சலம் குலுங்க மறுபடியும் மறுபடியும் அரிக்கேன் விளக்கின் வெளிச்சத்தில் அலங்காரங்கள் செய்து தலையை அழுந்தி ஒருவிதமான தமிழ்ச் சாயலான அந்தத் தெருப்பெண்ணாய் உருக்கொள்ளும்போது பின்னாலிருந்து தேவையில்லாமல் நீளும் பரந்தாமராஜூவின் வேட்கை அவன் கரங்களாய் அனலேறும்.

"இதே வேலையாப் போச்சு! ராத்திரி தூங்குறது., விடிஞ்ச வொடனே தூக்றது ச்சி! இப்பதான் சேலே கட்டிக்கிட்டேன். குளிச்சாச்சு. அஞ்சு மணிக்கு வாடிக்கெ வந்துடும்" தலையைத் தூக்கிப் பார்ப்பாள் ராமலக்ஷ்மி. ஜம்னா விடவே மாட்டாள். மறுபடி மறுபடி முரட்டுத்தனமாய் சேலைக்குள்ளே கையை விட்டு அவனுக்குத் தெரிந்த எல்லாவித அசிங்கங்களையும் செய்வான் பரந்தாமராஜூ. எப்படி ஆனாலும் என்ன? முரட்டுத்தனம் செய்தாலும் ஜம்னா விடவே மாட்டாள். மறுபடி மறுபடி ஒரு மல்யுத்தம் மாதிரி நடக்கும் சீறலும் அழுகையுமாய் காலையில்

அவனைக் குப்புறத் தள்ளிவிட்டு மறுபடிக் கண்ணாடியில் பார்த்தபடி அலங்காரங்களைச் சரி செய்தபடி வேகமாய் இருளில் படியிறங்கிப் பூச்சந்தைக்குப் போகும்போது அவனுக்கு விட்டுக் கொடுக்காத அந்த முரட்டுத்தனத்தின் சந்தோஷம் கடைசி வரை அவனை உதைத்துத் தள்ளிய ஒரு பூரண சந்தோஷம் அவளுக்கிருக்கும். இதில் வருத்தமே இருக்காது.

அங்கே இருட்டுக்குள்ளே பரந்தாமராஜூ எழுந்து வெளித் திண்ணையை நோக்கிப் போவதைப் பார்த்து அவன் வழி மறித்து இறுகத் தழுவி பச்சையான ஒரு திறந்த காற்றுப்போல் அவனைச் சுற்றி அடிப்பாள். அந்தச் சின்ன வயசு பெண். பரந்தாமராஜூ முகத்தை மூடிக் கொண்டு கேவிக் கேவி அழுவான். அவள்–ராமலக்ஷ்மி–இனிமேலும் அவனை ஒன்றும் செய்ய முடியாத சோர்வில் அவன் ஸ்பரிஸம் போதுமென்று அவனை மறுபடி மறுபடியும் ஒட்டி உரசித் தீயை ஊதி கனலேற்றும் பரிதாபம் அவனுக்கு மிகுந்த அருவருப்பைத் தரும். அவன் மீதேறி சில நாட்களில் இந்தத் தோல்வியை உடைத்திருக்கிறாள். அவன் அந்த நேரங்களையும் அவளுக்குத் தந்ததில்லை. அவள் தொடை இடுக்கில் அவளே தன் கை விரலையே உட்செலுத்தி மறுபடியும் வெகுநேரம் அயர்ந்து கிடப்பாள் ராமலக்ஷ்மி.

வெளியில் வந்த பரந்தாமராஜூ தன் மூஞ்சியில் தானே அறைந்து கொள்ளும்போது, ஜம்னாவின் தொங்கலிட்ட மார்புகளும் சற்று முன் அவன் முகத்தில் அறைந்த இளமையின் மார்புக் கடினமும் அவனை உள்ளுருக வைத்து அதன் அர்த்தங்களை மேலும் மேலும் துருவிச் செல்லும் விரக்தியையும் தந்தன. ராமலக்ஷ்மியின் விரலாய் அவன் மாறி வெகுநேரம் கசங்கிக் கொண்டு இருந்தான் என்பதும் அவனுக்குத் தெரியும். தினமும் இது நடைபெற்றால் அவன் விரலை வெட்டியிருப்பான் எங்கோ... எப்போதோ... எல்லார் வாழ்விலும் இந்த சாக்கடை சால்கள் அவர்கள் தலையிலேயே சந்தனச் சால்களாக கவிந்து கொண்டேதான் இருக்கும். விடிந்தால் ஒரு நாள் முழுவதும் ஜம்னாவையும் இந்தச் சிறுமியையும் அவன் பார்க்கவே முடியாது.

# 10

“மச்சான் எந்திரி, ஏந்றீங்கறேன்ல. யாரோ வந்துருக்காங்க பாரு. உன்னப் பாக்கனுமின்னு இதோட பன்னண்ணு தடவ எளுப்பியாச்சு. குப்புறப் படுத்துக்கிட்டு எந்திரிக்கவே மாட்டேங்கிற. விடிஞ்சு பத்து மணியாவுது. திண்ணையில உக்காந்துருக்காங்க. அவுங்க காதுல வேற வுளுவுது. என்னால கத்த முடியாது. ஏந்திரிங்கறேன்ல” வெகு நேர உசுப்பலுக்குப் பிறகு சுருண்டு விரிந்து எழுந்து உட்கார்ந்தான் பரந்தாமராஜு. அடித்தடித்து எழுப்பிக் கொண்டிருந்தவள்–கருப்பு. எதிரில் பல் விளக்க ஆமணக்கு இலை–சுருட்டி நீட்டினாள். பக்கத்தில் வெந்நீர் சுட வைத்து விளாவி இருந்த அண்டா ஆவியை கக்கிக் கொண்டிருந்தது. இட்டிலிப் பானையில் புளித்த மணத்துடன் இட்லி வெந்து கொண்டிருந்தது. கருப்பு அவனையே பார்த்துக் கொண்டு “எந்திரி மச்சான்–காத்துக் கிட்ருக்காங்கல்ல–நீ பெரிய ஆளுன்னுதானே எஞ்ச எஞ்சேருந்தல்லாமோ தேடீட்டு வந்து போட்டோ புடிக்கிறாங்க. இவுங்களைப் பாத்தாக்கூட பேப்பருக்காரங்க மாதிரிதான் இருக்கு. ஆனாப் பொம்பள. சீக்கிரம் ஆவட்டும். நீ பல்ல வெளக்கீட்டு வந்தீன்ன அவுங்களுக்குஞ் சேத்தே பலகாரங் காப்பி கொடுத்துறலாம். ஏந்திச்சு வர்றியா?”

“பொம்பளையா? யாரது? எஞ்சேர்ந்து வர்றாங்கன்னு கேட்டியா?” என்று கேட்டபடியே

எழுந்து ஜம்னா கொண்டு வந்திருந்த புதுப்பட்டுக் கைலி–சிங்கப்பூர் சரக்கு–எடுத்துக் கட்டிக் கொண்டு சட்டையைத் தேடினான். கருப்பு பின்னாலிருந்தபடியே வெகுநேரம் படுத்திருந்த காலைப் புழுக்கத்தால் முதுகெல்லாம் வழிந்திருந்த வேர்வையை அவனைக் கேட்காமலேயே துடைத்துக் கொண்டிருந்தாள்.

"ந்தா, கையைத் தூக்கேன். அத வேற சொல்லணுமாக்கும்? சீக்கிரம் போ, ஒன்னயும் பாக்க வர்றாங்களே? தூங்குமூஞ்சிப் பண்டாரம்" என்றபடியே அவன் அக்குள்களையெல்லாம் துடைத்தாள்.

"ஏண்டீ? புருஷன் வந்துட்டா எனக்கிப்டித் தொண்டூளியம் பண்ணுவியா?" என்றபோது கருப்பு அவனுடன் சேர்ந்து நின்றாள். அவன் முதுகை–இடுப்பை–சுத்தமாகத் துடைத்து–முகத்தைத் துடைத்து–வாணி விட்டிருந்த கோட்டுவாயையும் எச்சிலுடன் சேர்த்துத் துடைத்தாள். அவள் மேலிருந்து வந்த வயசுக் குட்டிகளுக்கே உள்ள ஒரு தேக நெடி அவள் மஞ்சள் தேய்த்துக் குளித்திருந்த கார்வையோடு கலந்து ஒருவிதக் கற்றாழை நாற்றமும் கலந்து அவனை வேறு உலகத்துக்குக் கொண்டு போய்விடும் போலிருந்தது. அதற்காகவே காத்திருந்தவள் போல அவன் காதுகளில் "யாராவது பாக்கப் போறாங்க, பாத்து" என்றாள். வழக்கமாக இந்தக் குட்டிகள் அவனை ரொம்பத்தான் சோதிக்கின்றனர். கடுமையாக உழைப்பவர்கள். எனவே கடுமையான உழைப்பும் உயிரும் வளர்ந்து உலுக்குகின்றன. இங்கே ஆண்கள் யாரும் கொஞ்சுவதில்லை. தொட்டுத் தடவி கண்ணிலொற்றிக் கொண்டிருக்க நேரமில்லை. தூர தூர இடங்களுக்கு வேலைக்குப் போகிற பெண்கள், பகல் முழுதும் ஏதாவது கட்டிடத்தில் சிமிண்டுச் சட்டி தூக்கி, செங்கல் சுமடைச் சுமந்து மாலையில் இருட்டித்தான் பத்து ரூபாய் கூலியுடன் வீட்டுக்கு வந்தாக வேண்டும். பெரும்பாலான ஆண்களுக்கு பெண்டாட்டிதான் பொழுதுபோக்கு. நன்றாகக் குடித்தபின் வீட்டுக்கு என்று அவர்கள் கொடுக்கும் பணம் ஒன்றும் உதவாது. சாராயத்துக்கே சரியாய் இருக்கும். பெண் சம்பாதிக்காவிட்டால் இங்கே சோற்றுக்கு வழி இருக்காது. சோறு காய்ச்சித்தான் பழக்கம். அதாவது சமையல் இல்லை. சமையல் என்றால் அவர்களுக்கு விருந்து என்றர்த்தம். கல்யாணங்களில்தான் அது. கருப்பி ஒரு மதுரைக்காரி. ரொம்பத் தீவிரமான ஜாதி வெறி பிடித்த கிட்ணத்தேவர் மகள். அவருக்கு மூன்று பெண்டாட்டி. அக்கா தங்கைகள். ஏழெட்டு பெரிய உருப்படிகளும் பத்துப் பன்னிரெண்டு சிறு உருப்படிகளுமாகக் கருப்பி வீட்டு சங்கதி. ஆண்களெல்லோருமே பயங்கரமாகக்

குடிப்பார்கள். இதையெல்லாம் கருப்பியே அவனுக்குச் சொல்லியிருக்கிறாள். கருப்பி இல்லாவிட்டால் அந்தக் குடும்பம் சுக்குச் சுக்காகிவிடும். அந்த வீட்டைக் கட்டி வீடாக வைத்துக் கொண்டிருப்பவள் அவள். நிலவுதித்த இரவுகளில் அந்தத் தெரு ஜனம் முழுதும் தெருவில் வந்து படுத்துப் புரண்டு கிடப்பார்கள். அப்போதும் திண்ணையில் ஓயாமல் பூக்கட்டுவாள் கருப்பி. அவள் தப்பிக்கவேமுடியாது. இன்னும் எத்தனை வருஷங்களானாலும் அவர்கள் யாரும் மதுரைக்குத் திரும்ப முடியாது. அவள் வீட்டுப் பெண்கள் யாருக்கும் இங்கே கல்யாணம் பண்ண முடியாது. காசு கெடையாது. நினைத்துக்கூடப் பார்க்க மாட்டார் கிட்ணத்தேவர். அவருக்கு அந்தி வந்தால் 'மருந்து' வேண்டும். வருஷந்தோறும் இன்னும் பிள்ளை பெற்றுக் கொண்டிருந்தார். வளர்த்ததென்னவோ அந்தத் தெருதான். கரிக்குழந்தைகளாய் அந்தத் தெருவில் அவர் குழந்தைகள் அலைந்து கொண்டேயிருக்கும். வியாதி, வெக்கை, எப்போதும் வீட்டில் யாராவ ஒருத்தருக்கு ஈளை பிடித்து உலுக்கிக் கொண்டிருக்கும். கருப்பு ஒரு மந்தமான பெண். ஆனால் புத்திசாலி. இதையெல்லாம் பரந்தாமன் தலையிலேற்றிக் கொண்டு புழுங்கினான் என்றால் அவளும் அப்படித்தான். மனிதர்களை நேசிக்க எங்கிருந்தோ அவள் கற்றிருந்தாள். பரந்தாமனுக்கு மனிதர்கள்மேல் எப்போதும் சந்தேகம். மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் வித்தியாசமே இல்லை என்ற பொதுவான விஞ் ஞான உண்மை கருப்பாயி இந்த ஒரு மாதமாக–ஆமாம், ஒரு மாதம் கழிந்து போய்விட்டது–புத்திசாலியாகிவிட்டாள். அதற்குக் காரணம் பரந்தாமராஜூ. இப்பொழுது பரந்தாமராஜூ படத்தை ஓவியமாக வரைந்து கொண்டே வந்தால் கருப்பு தன்னந்தனியாக ரேக்கு ஒட்டி விடுவாள். அவன் கண்ணாடி கொடுத்தால் அவன் சொல்கிற மாதிரி நறுக்கி ஒட்டித் தேய்த்தறுத்து சுத்தப்படுத்தி விடுவாள். அவன் பசை அரைத்தால் அவள் முட்டை கடைச் சரக்குகள் எல்லாம் நைஸாக கலந்து தந்துவிடுவாள். அவசரமாகக் 'கண் திறக்கய மேலே ஏற வேண்டியிருந்தால் கை மடக்கி உட்கார்ந்தபடி 'இந்தத் தோள் மேல காலவச்சு ஏறு மச்சான். பசை இறுகிடப் போவுது. அப்புறம் நாந்தான் களுத்தறுபடணும். புளுக்க புளுக்கை யாத்திட்டுல" என்று அவனுக்கு முன்னே பாய்வாள் கருப்பு. சொல்லப்போனால் தஞ்சாவூர்ச் சித்ரப்பட வேலையில் அங்கு இருந்த பெண்களில் ரொம்ப ஈடுபாடு காட்டிய கலைத்துவம் உள்ள பெண் அவள்தான். அவள் இல்லாமல் சூரன் படம் தயாராகி இருக்காது. சின்ன சாணைக்கல் ஒன்றைச் சுற்றியபடி கண்ணாடித் துண்டுகளை அவன் கேட்ட

வளைவு–நெளிவு–சுளிவுகளிலெல்லாம் ஒத்து வருகிற மாதிரி இழைபிசகாமல் தேய்த்து அவனது கற்பனைகளுக்கெல்லாம் கண்ணாடியில் (ஆபத்து ரசக் கண்ணாடி என்பது தெரிந்தும்) பரந்தாமராஜூ கேட்ட வழியிலெல்லாம் வேலை செய்து கொடுத்தவள். அடுத்து வர்ணம்–பூசுகிறதில் அவன் சொன்னதை யெல்லாம் அப்படியே பின்பற்றித் துணை செய்தது, சிப்பி வெள்ளைக் குட்டி. கண்ணாடிகளுக்கு பதில் ஆபரணங்கள்–ஆயுதங்கள் காண்கின்ற இடங்களிலெல்லாம் உபயோகிக்க எவர்ஸில்வர் தகடுகள்–பித்தளைத் தடுகள் இவற்றையெல்லாம் வெட்டி அவன் சொன்னபடி எல்லாம் நெளிவெடுத்துத் தகடடித்து–அடுப்பில் வைத்துச் சூடேற்றி–'டெம்ப்பர்' ஏற்றி முழு அளவில் உதவி செய்தது ராஜலக்ஷ்மி. அந்தத் தெருவில் அந்தச் சூரன் படத்தைப் பார்த்து சந்தோஷப்படாத, வியப்படையாத ஆண், பெண் யாருமில்லை. அந்த ஓவியத்தை அவர்கள்தான் உண்மையில் செய்திருக்கிறார்கள். என்பது அந்தப் பூக்கலைஞர்களுக்குத் தெரியாது. கருப்புக்குட்டி இனிமேல் இந்தக் கலையில் தயாரானால் அவனுக்கு ரொம்ப உபயோகம். ஆனால் தெருவிலுள்ள பெண்கள் கருப்பை பரந்தாமராஜூ வைத்திருப்பதாக வழக்கம் போல அவள் அப்பாவிடமே சொல்லி இருக்கிறார்கள். இங்கேயெல்லாம் ஆண்–பெண் உறவை விட்டுவிட்டு வேறுபொழுது போக்குக் கிடையாது. படுக்கிறது பற்றித்தான் பெரும்பாலும் பேசுவார்கள். அதைவிட்டால் சினிமா. ஆண்களுக்கு–பெண்களுக்கு என்று உரிமைப் பிரச்சனைகள் எல்லாம் இங்கே கிடையாது. பரந்தாமராஜூ மேல் ஜாதிக்காரன் என்று அவர்கள் நினைப்பு. அவன் மனைவி 'முரட்டுத் தேவிடியா' என்பார்கள். சிப்பி வெள்ளை பறத் தெருவிலேயே யாரிடமோ சொன்னாளாம். 'என்ன அந்தப் படம் எடுக்கிறவருதான் வெச்சுக்கிட்டாரு. அவரு குடுத்த சேலைதான் இது' என்றாளாம். பறத்தெருவிலிருந்து இந்த செய்தி பூக்காரத் தெருவிலும் பரவியது. அவனிடம்கூட அந்தத் தெரு லாசரு கேட்டான். 'என்னா மச்சான், அந்த மொசக்குட்டி சிப்பி வெள்ளையையும் தட்டிப்புட்டீங்களாம்ல. லேசுல படியாதது. என்னா போட்டிங்க? எத்தன தடவ போட்டீங்க? மயங்கிக் கெடக்குறாளம்ல. தாலி ஒண்ணயுங் கட்டிப்புடுங்களேன். ஒண்ணுக்கு ரெண்டாகக் கெடக்கு" என்றான். சிப்பி வெள்ளை நினைத்தாலே மனசு சந்தோஷப்படுகிறது. பத்துப் பதினைந்து நாட்கள் இரவு பகலாக சூரன் படம் வடித்தபோது கண்ணயர்ந்த தெல்லாம் அவள் மடியில்தான். சோறு தின்றதெல்லாம் அவள் உருட்டிக் கொடுத்ததுதான். கீழிறங்காமல் வேலை செய்யவும்

அவன் கற்பனை மூளியாகாமல் இடைவெளிவிடாமல் கரிக் கோடுகளைக் கிழித்துக் கிழித்துப் புதுப்புது உருவங்களை ஒன்றுக்குள் ஒன்றாய் சமைப்பதற்கு உதவியதெல்லாம் சிப்பி வெள்ளைதான். பலருக்கும் கோவில் சம்பந்தப்பட்ட பெரியவர்களுக்கும் இது அறவே பிடிக்கவில்லை என்றுபின்னால் தெரிந்தது. அடுத்து சிற்பி வெள்ளை ஒரு தூங்குமூஞ்சி. ஆனால் வேலையிலல்ல. கண்ணயர்ந்தால் விழிக்க மாட்டாள். அப்படி ஒரு பேய்த் தூக்கம். சிற்பி வெள்ளை நிஜமாகவே அவனை விட்டுப் போகமாட்டாள். அன்றைக்கு அவள்தான் ஓடிவந்து சொன்னாள்.

“ஐயா! நம்ப சூரம் படத்த கலேட்ரு-தாசில்தாரு எல்லாம் வந்து ஜீப்புல நின்னுகிட்டு சுத்தி சுத்திப் பாக்குறாங்க. நம்மளுக்கு பத்தாயிரம் ரூவா குடுக்கப் போறாங்களாம்ல. பேசிக்கிறாங்க. ஏய்யா! எனக்குங் காசு குடுப்பீங்கள்ல! எவ்வளவு தருவீங்க?” அவள் வரிந்த விழிகளின் ஆச்சர்யமும் ஆர்வமும் எத்தனை சந்தோஷம் தந்தன? சாதாரணமாகக் கிடைக்கக் கூடிய திருப்தியும், சந்தோஷமுமா இவை? அப்புறம் மீதி இருக்கிறது ராமலக்ஷ்மி. இவர்களெல்லாரையும் பற்றி வந்திருக்கிற அந்தப் பெண் பத்திரிகையாளரிடம் சொல்வதற்காக ஆரம்பத்திலிருந்து முழுவதுமாக ஒரு தடவை உருவகித்து நினைத்துப் பார்த்தபோது தன்னையும் மறந்துவிட்டான். சூழ்நிலையையும் மறந்துவிட்டான். கருப்பு அவன் கைகளுக்குள், இன்னும் அவன் மார்பில் சாய்ந்து கொண்டுதான் நின்றாள். இதென்ன எங்கு தொட்டாலும் அங்கேயே போய் நிக்கிறதே? வாழ்க்கை இத்தனை குரூரமானது என்று அவனுக்குத் தெரிந்ததால் மட்டுமல்ல, எட்டு வயதுப் பையனாக இருந்த காலத்திலிருந்தே அவன் அம்மா லோசனாவின் அசாத்யமான அன்புதான் எல்லாப் பெண்களையுமே ஆசைப்படவும், எல்லாம் பெண்களையும் விரும்பவும், காதலிக்கவும் கலந்துவிடவும் மனதாலேயே எந்தப் பெண்களுடனும் வாழவும், என்றைக்குமாக பரந்தாமராஜுவாகவே நிலைக்கவும் கற்றுக் கொடுத்தது என்பதை எந்தக் காலத்திலும் யாரிடத்தில் சொல்லியும் புரிய வைக்க முடியாது. வந்திருக்கும் பத்திரிகைக்காரிக்கு-அதிலும் பெண்-சொல்லிப் புரிய வைத்துவிடமுடியுமா? இந்தத் தெரு பெண்கள் உலகின் எந்த இடத்துக்குப் போனாலும் எந்த ஆண்களுடனும் கூடி வாழ முடிந்தவர்கள். எந்த ஜாதிக் காரர்களிடமும் மகிழ்ந்து குழந்தை பெறக் கூடியவர்கள். ஆனால் தங்கள் சுயஜாதிக்காரர்களினால் பிறந்ததிலிருந்தே நாசமாக்கப்பட்டவர்கள்-என்பதெல்லாம் அவர்களுக்கே சொல்லி விளங்க வைக்க முடியாது என்னும்போது இந்தப் பத்திரிக்கைக்காரி யாராக இருக்கும்? இன்னும் கருப்பு

அவனை விட்டு விலகாது இருந்தது அவனுக்கு மிகுந்த தன்னம்பிக்கையைக் கொடுத்தது. "என்னாடி குட்டி அது? மச்சான மோந்துக்கிட்டே இருக்கியா?" என்று அவளை பிருஷ்டத்துடன் தூக்கி பக்கத்தில் கிடந்த டூலின்மேல் நிறுத்தி "நல்லாருக்கா வாசன?" என்றபடி அவள் கதர்ப் புடவையில் முகத்தால் ஒரு முறை முகர்ந்து தன் தாயின் மணத்தை முகர்ந்தவனாகி திண்ணையை நோக்கி நகர்ந்தான். திண்ணையிலிருந்து இத்தனையும் பாத்தும் கேட்டும் உட்கார்ந்திருந்தது வேறு யாருமல்ல, ஓவியர் திலகம் மீனாக்ஷிராஜூவின் செக்ரட்ரி சரளாதான். அவனை ஏறிட்டுப் பார்த்த சரளாவின் கண்கள் லேசாக அருந்தி இருந்த விஸ்கியை நினைவூட்டின. அவள் அவனைப் பார்த்து "இதுதான் ஓங்க வீடா?" என்றாள்.

"ஏன்? எப்படித் தெரியுது?" என்று வெடித்தான் பராந்தாமராஜூ "என்னா விஷயம்?"

"ஒண்ணுமில்ல. நான் அந்த மாதிரி வரய மாட்டேன். படமே வரைய மாட்டேன். ஓவியத்துல கவித எழுதுவேன்–நீங்க எழுதற தெல்லாங் குப்ப கண்ணாடி ஒட்டுப் படம்–மசுரு–கலையில்ல–வெண்டிக்கா–அப்டீன்னுல்லாம் அப்பாட்ட லெக்ச்சர் அடிச்சுட்டு சேரில வந்து அப்பா செஞ்ச வேலையையே இருவதுக்கு முப்பது சைஸ்ல சினிமா பேனர் மாதிரி சூரன் ஒண்ண செஞ்சு வெச்சுட்டா கலையாயிடுச்சா? ஒரு கவித எழுதியிருந்தீங்களே? ரொம்ப நல்லக் கான்ட்ராஸ்ட். இப்பப் பப்ளிஷ் பண்ணியிருக்கான். அந்தப் பத்திரிகை பூரா பைத்தியக்கார ஒளறல். இப்போ நீங்க நடத்திட்டு இருக்கிற வாழ்க்கைக்கு–பண்ணிக்கிட்டிருக்கிற கலைக்கு ரொம்பச் சரியா? வினோதமாப் பொருந்தி இருக்கு. கவிதை எனக்கே மனப்பாடமாகிப் போச்சு. ஓங்க உருப்படாத கவிதை இதோருக்கு" என்று அவன் முன்னே அந்த கவிதையை எறிந்தாள்.

"எனக்குத் தொழில்
கவிதை
இல்லை
சோரம்.
நாளும் சோரம்
வேறென்ன?

வாழும் உலகின்
வசமான

வழிகள்
எனக்கில்லை

கவிதையின்
நுண் அலை நாதம்
என் நெஞ்சில் இல்லை!

கனவின் ஒளி வீச்சு
எழுத்தில் வரும்
திறமை
எப்போதும் எனக்கு
காத தூரம்!

அருளைப் பெற்று
கனவை வெல்லும்
கற்பனை வடிக்கும்
சிறபத் திறம்
எனக்கில்லை

வாழ உழைத்து
உழைத்து
வாழும்
உலகின் நயம்
எனக்கு
எப்போதும்
அற்பம்

- என்றாலும்
உலகத்தோடு
ஒட்ட
ஒட்ட
ஒழுகி

நக்கும்
நாயாய்
சுமக்கும்

கழுதையாய்
நாளும்
சோரம்போய்

உடல் விற்றுப்
புழுக்கும்
தெருச்
செறுக்கியாய்
இருப்பதில்
எனக்கு வெட்கமில்லை

காரணம்
இன்று
இந்தச்
சமூகத்தில்
எந்த வேலையும்
இந்தத் தரத்தை
- மீறாது!
மீளாது!

எனக்குத் தொழில்
ஆம்!
கவிதைச்
சோரம்!

*அந்தச் சிறு இலக்கியப் பத்திரிக்கை ரொம்ப அழகாக அச்சாகி இருந்தது. பரந்தாமராஜுவுக்கு இப்பொழுதெல்லாம் கவிதைக்கு நேரமில்லை. இந்தத் தெரு முழுவதும் கவிதைகள் திரிகின்றன. அவனுக்கெதற்குக் கவிதை? வேஷங்களின் வேஷம். இதோ எதிரே உட்கார்ந்திருக்கிறாளே இவள் மாதிரி. ஆனாலும் இப்போது சரளாவை வெறுக்கவில்லை.*

*"சரி கவிதயக் கொண்டு வந்து குடுத்ததுக்காக ரொம்ப தேங்க்ஸ். மோர் வ்வாட் கேன் ஐ டூ ஃபார் யு? இதெல்லாஞ் சேரி யாச்சே. உங்க காலத் தூக்கி வெச்சு இந்த மாதிரி இடத்துக்கெல்லாம் வரமாட்டீங்களே ஐ மீன்... ஹைஜீன்... சுத்தம் பாப்பீங்களே. ரொம்ப சுத்தம் பாப்பீங்களே!"*

"அதிருக்கட்டும். உள்ள ஒரு குட்டிய வச்சிக்கிட்டு ரொம்ப நேரமாக் கட்டிப்புடிச்சு என்னமோ செஞ்சிட்ருந்தீங்களே? யாரவ? பதினெட்டு வயசுகூட இருக்காது போலருக்கு. பாவம்-டேர்ட்டி கேர்ள். இதுக்கு வசதியா இருக்கும்ணு சொல்லித்தான் சேரில வந்து ஒக்காந்துகிட்டீங்களா? எந்த சுபுத்தி செப்பினாகூட துன்ன போந்து ஊயிலோ துன்னப் போத்து சுதா?"

"நீ என்ன வேணா சொல்லிக்கோ. நீ வாழ்றது விபச்சாரம். நீ வாழ்ற வாழ்க்கை விபச்சாரம். நல்லதையெல்லாம் ஒசந்ததை எல்லாம் தர்மத்தையெல்லாங் கைல எடுத்து வச்சுகிட்டு ஒங்களுடைய போலித்தனமான வாழ்க்கைய நெஜம்ன்னு ஆக்கப் பாக்றீங்க. அதெயெல்லாம் ஒருவழியா பரந்தாமராஜூ வுட்டுட்டு வந்தாச்சு"

"அதாம் பாக்குறனே? கஞ்சாவக் காணோம். சாராய வாசனையில்ல. எல்லேஸ்டி போடல. பாப்பிரஸ்-பங்க் லாந்தான் எழுதியிருக்கானே! படிச்சுக்கிட்டேதான் இருக்கேன்-ஒங்களோட புகழ் இங்க்லீஷு-ஜெர்மன் பத்திரிக்கைல எல்லாங்கூட ஒங்களோட சூரன் படம் ட்றேன்ஸ்பலன்ஸ்ஸி வித் ஓர்ரிஜினல் கலர்ஸ் வெளி வந்துருக்கே. பெரிய மானுட சேவைங்கறானெ அவன் கவர் ஸ்டோரீல. இதே வேலயத்தானே நாங்களும் பண்றோம்-பத்து இருவது வருஷமா, ஒரே ஒரு வித்யாசம் நாங்க பண்றது ட்ரடிஷனல். நீங்க பண்றதும் அதேதான். ஆனா வெள்ளைக்காரன் என்னா பண்ணிகிட்ருக்கானோ அவன் வாலப் புடிச்சுகிட்டுத் தொங்கறீங்க. PC சேத்தீ ஒங்கள 'நியூயார்க் ஹெறால்ட்'ல தலைக்கு மேல, தூக்கிட்டு ஆடி எழுதியிருக்கான். கலை கலைன்னுட்டு நீங்க பண்ற ரௌடியிஸம்-நிஹிலிசம்ன்னு நீங்க பண்ற அவுட்லா விஷயங்கள்-இன்னும் நீங்க சொல்ற எக்ஸிஸ் டென்ஷியலிசம்-ந்யோ ப்ளாஸ்ட்டிசிஸம்-கம்யூனிசம்-மக்கள் சேவை-இப்போ ரோட்ல இறங்கி இருக்கீங்களே. இந்த போஸ் எல்லாம்-அவுங்களுக்குத் தெரியுமா பாவம்?-நாக்கு அந்த்தா தெலிசிந்தி! மீரு ஒக்க மொக வேஸ்யா-யெஸ்-யூ ஆர் எமேல் ப்ராஸ்ட்டிட்யூட் அன்ட் அல்ஸோ எ ஸேடிஸ்ட்" அவள் கைகள் மேலோங்கி வந்தன. குரல் உச்சத்திலிருந்தது.

நீண்ட நாட்களுக்குப்பின் ஓங்காரக் கூச்சலிட்டுச் சிரித்தான் பரந்தாமராஜூ. குலுங்கிக் குலுங்கிச் சிரித்த அவனை ஆத்திரத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள் சரளா. அதே நேரத்தில் மிக அழகான மெல்லிய அந்தத் தெருவுக்கு ஒவ்வாத-இன்னொரு பெண்ணும் அங்கு வந்து சேர்ந்ததை வியப்புடன் பார்த்தாள் சரளா. அப்பபா.

அந்தப் பொண்ணுக்குத்தான் எவ்வளவு தலைமுடி! நல்ல சிவுப்பு நிறம்! அந்தத் தெருப் பெண்கள் மாதிரிப் புடவைக் கட்டு அது மட்டும் ஒட்டாமல் இருந்தது. சரளா அவளையே இமைக்காமல் பார்த்தாள். உண்மையிலேயே மிகவும் அழகான முகம். அழகு என்றுகூடச் சொல்ல முடியாது. சரளாவுக்கு மூச்சு முட்டியது. இவள் யாரென்று தெரிந்தாக வேண்டும். எவ்வளவு பெரிய கண்கள்! எவ்வளவு கருப்பு நிறம்–வெள்ளை விழிகளில், கருநாவல் பழம்போல். வந்தவளவ இவளைப் பார்த்து "ஆயேனா ஜீ–வாங்கோ. வாங்கோ. என்ன மஹ்ராஜ்! இவுங்களுக்குக் காப்பீ கொடத்தீங்களா?" என்று கூறியபடியே உள்ளே போய்விட்டாள்.போனவளின் பின் கழுத்தில் புதுத்தாலி மஞ்சள் கயிறின் முறுக்குத் தென்பட்டதை சரளா கூர்ந்து கவனித்தேவிட்டாள். நேற்றிரவு கட்டிய தாலி என்பது அவளுக்கெப்படித் தெரியும்? வீட்டுக்குள் அவள் பெட்டியின் பாவனியம்மான் படத்தின் முன்னால் அவளழுத பின்னால் பரந்தாமராஜூ அவளைத் திட்டியபடி அவளுக்குக் கட்டிக் கொடுத்த தாலி அது. சொல்லப் போனால் ஜம்னாவுக்கும் அந்தத் தாலிக்கும் சம்பந்தமில்லை. அதைவிடாமல் கட்டச் சொல்லி அழிச்சாட்டியம் பண்ணி ஜம்னாவைத் தூபம் போட்டுத் தயாராக்கியது வேறு யாருமில்லை, ராமலக்ஷ்மிதான். சரளா எழுந்துவிட்டாள். கனத்த சோர்வு. அவளில் தெரிந்தது சோகமும்கூட.

"அப்றம்" என்றான் அவன்.

"ஒட்டிலேது"

இருவரும் கீழே இறங்கினார்கள்.

அவனை லேசான வியப்புடன் பார்த்தாள். அவன் வெறும் உடம்புடனே அந்தத் தெருவாசிகள்போல் லேசான ஒரு கூனலுடன் கூழைக் கும்பிடோடு பேசுவதுபோல் "நன்னு க்ஷமிஞ்சுரா சர்ளீ" என்றான்.

"எந்த்துக்கு அட்ல செப்புதாவு. மேரீ ஏமி அபத்தமுசேலதே. மீரு நன்னு க்ஷமிச்சஞ்சி. இப்புடு வட நேனு...நேனு... மீரு தகரா... ஐ வான்ட்... யூ-ஐ னீட் யூ–ஏம் பொய் சொல்லணும். ஐ ஹேவ் லாஸ்ட் மை செல்ஃப் ஐம் கோயிங் டு லீவ் தின் கன்ட்ரி சூன். ஐ ஹேவ் லாஸ்ட் மை ஐடென்ட்டி–ராஜூ நேனு எக்கட உன்னானு? ச்செப்பண்டீ–சேசின தந்த்தா ஜீவிஞ்ச்சின தந்த்தா மட்டி கோபுரமலாகா தஹிபொத்தொந்தி–பூமிலோ ந கேமீ உத்தீ? ஒக்கெடெ–மை விஸ்க்கி செஸ்ட்–ஒன்லி ரெமிடி."

புழுதிக் காற்றும் பக்கத்து சாணக் குட்டையின் சாணிக்கும்பி வாசனையும் குடலைப் புரட்டியது. அப்பொழுதுதான் பூமிக்கு வந்திருந்த சரளா அந்தத் தெருவின் நிலையைப் பார்த்தாள். கீழே சாக்கடை ஓடைகள். தெரு முழுதும் அலுமினியப் பாத்திரங்கள். பைப்படியில் மயிருபிடி சண்டை. ஒவ்வொருவரும் அவரவர் கணவன்மாரின் வீர்யத்தைப் பற்றி உச்சக் குரலெழுப்பி தங்கள் சுத்தத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்.

"ஹௌ கேன் யூ லிவ் இன் சச் எ ரெச்செட் ப்ளேஸ்? ஐ ஹேட் திஸ் பீப்பிள். ஹௌ கேன் யூ டாலெரேட் ஆல் திஸ் திங்ஸ் ஹியர்!"

பரந்தாமராஜூ மறுபடியும் பலமாகச் சிரித்தான். எங்கேயோ கையை நீட்டி அவளுக்கு எதையோ சுட்டிக் காட்டினான். அவள் திரும்பிப் பார்த்தாள். உண்மைதான். அது ஒரு தனி உலகம். வன்மையுடன் போராடும் போராடுகிறோம். என்றுகூடத் தெரியாது, போராடும் ஜனங்கள்–ஒரு நிமிஷத்திற்குப் பதினாறு வீதம் இறந்தும்–ஒரு வினாடிக்கு இருபது வீதம் பிறந்தும் இன்னும் பத்தாண்டுகளில் இந்த பூமியில் நிற்க இடமில்லாமல் பெருகி வழியப் போகும் மானுட இனம். எதிரே பிரும்மாண்டமாக வானில் பறந்தபடி அதை நினைவுறுத்தினான் அசுரன். அவள் கண்ணாடியைக் கழட்டித் துடைத்தபடி அசுரனையே அசையாமல் பார்த்தாள். அவளறியாமல் கண்கள் கலங்கின.

"மை டியர் ராஜூ யு ஹேவ் டன் எ வெரி ஃபைன் ஸ்மார்ட் ஓர்க். தஞ்சாவூர்ச் சித்திரப்படத்துக்கு–இட்ஸ் எ டர்னிங் பாய்ன்ட். நீங்க மட்டும் இந்தச் சேரிய விட்டு வந்தா யு வில் பிகம் எ வெரி பிக் ஆர்ட்டிஸ்ட் ஆஃப் காண்ட்டெம்ப்ரரி வோர்ல்ட்..."

பலமாகச் சிரித்தான் பரந்தாமராஜூ.

"டோன்ட் லாஃப்?"

"ஆர் யூ அஃபென்டெட்?"

"இல்லியே. அர்த்தமுலேகா எந்துக்கு நௌதாரு? மீரு ஒக்க ராக்ஷஸு யூ ஆர் எ பீஸ்ட்"

"அப்பாவோட இருந்து இருந்து ரொம்ப சொலபமா இந்த ஐரோப்பிய வேஷம் உனக்குக் கைல வருது. சரளா டேக் இட் யீஸி. நான் வேஷத்தை யெல்லாங் கழட்டி ஒண்ணு ஒண்ணாத் தூர எறிஞ்சாச்சு. இன்னும் ஒண்ணே ஒண்ணக் கழட்ட முடியல. அதுதான் இந்த உடம்பு. அத நீ செக்ஸ்ன்னு சொல்லிக்கோ. ஐ

டோன்ட் பாதர். லஸ்ட்ன்னு வேணும்னாலும் சொல்லிக்கோ. நான் இனிமே ஓங்க உலகத்துக்கு வரமாட்டேன். நீ ஸ்டேஸ்க்குப் போய்டு. முடிஞ்சா அப்பாவயே கல்யாணம் பண்ணிக்கோ. அப்டி அசிங்கமாப் பாக்காத. உன்னால அமெரிக்கால–அமெரிக்க ஆம்பிளைங்களோட கல்யாண வாழ்க்கை வாழ முடியாது. யூ ஆர் என் இண்டியன். பீஸ்ட். உனக்கு அதிகாரம் பண்ற புருஷந்தான் லாயக்கு. என்னத் தேடாத. ஐ ஹேவ் லாஸ்ட் மைஸெல்ஃப் இன் ஜம்னாபாய்." முதன்முறையாக 'பாய்' என்பதையும் சேர்த்து உச்சரித்தான் பரந்தாமராஜூ. புழுதி சுழன்றடித்தது. பக்கத்திலிருந்த வைக்கோற் போர் ஒன்று வானேறிச் சுழன்றது. சூறைக்காற்றில் கண்மண் தெரியாத புழுதியில் வைக்கோல் பிரிகள் சுழன்று வானுக்கும் பூமிக்குமாகத் தூண் ஒன்றை நிர்மாணித்துச் சுழன்றது.

சரளாவைப் புழுதிச் சூறையில் காணவில்லை. தன்னையும் காணாமல் அவன் திணறினான். சரளா போய்விட்டிருந்தாள். போலும். எதற்காக வந்தாள்? சொல்லவேயில்லை. சொல்ல வேண்டாம். அந்தப் புழுதியிலும் குடிசைகள் மறைந்தன. என்ன சூறை! சாணிப் பிசுக்கு மணம் எங்கும். கருப்பாக யாரோ நெருங்குவது தெரிந்தது. கருப்புதான் வந்திருந்தாள். "ஏம் மச்சான் அவுங்கள அனுப்பிச்சிட்டீங்க? அவுங்களப் பாத்தா நம்ம தெரு மொனைல இருக்குல்ல அண்ணா படிப்பவம் அதுலருக்க இந்துரா காந்தி படம் மாறியே இருக்காங்க. ஆனா அளகால்ல. அக்கா கூப்புடுது. திலும்பியும் பூக்கட்டப் போணுமாம். இப்பயே ரெண்டு ரூவா போச்சுங்குது" என்றாள்.

புழுதிப் படலம் இறங்க, இறங்க சுற்றும்முற்றும் படிப்படியாகத் தெரிந்தது.

"சூரம் படம் இந்தச் சூறைலயும் அப்டியே தெரியுதுல்ல. மச்சான்! இன்னும் பெரிய மாலயாப் போட்ருக்கலாம். நக்குனூண்டுருக்கு"

இன்னும் புழுதி குறைந்தபோதுதான் தெரிந்தது சரளா–எதிரே திண்ணையில் ஒரு வீட்டு முன்னே முழங்காலைக் கட்டிக் கொண்டு முகத்தைப் புதைத்துக் கொண்டு குலுங்கி அழுது கொண்டிருந்தது.

"ஏந்தே அவுங்க அளுவுறாங்க? அவுங்களக் கூப்டு வூட்டுக்கு பாவம்"

"வேண்டாண்டி முண்ட. அவுங்கல்லாம் இஞ்ச நம்ம வூட்லல்லாம் ஒக்கார மாட்டாங்க பட்டி முண்ட"

"ம்க்கும் திண்ணயில சாணீ மேல ஒக்காந்துருக்காங்க. பேசுற நீயி"

"அடிப்பாவீ"

நின்றபடியே உற்றுப் பார்த்தான். புழுதிச் சூறையில் இடந் தெரியாமல் திண்ணை ஒன்றின்மேல் ஏறி உட்கார்ந்ததில் சாணி உருண்டை ஒன்று நசுங்கித்தான் போயிருந்தது.

"போயி ஏன் அளுவுறாங்கன்னு கேளு மச்சான். நம்ப வூட்டுக்கு வந்தவுங்க அளலாமா?" என்று தளுதளுத்த குரலில் சொல்லி விட்டுக் கண்கலங்க அழுது கொண்டிருக்கும் சரளாவின் அருகில் போய் "யக்கா அளுவாதீங்க. எதுக்கு அளுவுறீங்க? மச்சான் அடிச்சிச்சா? அதுங் கொணமே அப்படித்தாங்–கைய நீட்டிப் பொடும். பெரிய்ய இது மாதிரி வூரான் வூட்டுப் பொட்டப் புள்ளைய கை நீட்டி அடிச்சிருக்கியே–ஓங்கைய முறிக்கோ" என்ற ததும்பிய கருப்பின் பேச்சைக் கேட்ட சரளா தாங்கமுடியாமல் அடக்கி வைத்த சாக்கடைச் சால்கள் நால்புறமும் வழிய "கோ"வென்று கதறியபடி கருப்பாயியைக் கட்டித் தழுவிக் கொண்டு–

"அயம் நாட் கோயிங் யெனிவேர். ஈஃவன் டு யுவர் ஃபாதர்ஸ் ஹௌஸ்–அயம் கோயிங் டு ஸ்டே வித் தீஸ் பீப்பிள்–நே எக்கடிக்கி போலேது. மரீ நன்னு இக்கடே உண்டு"

பரந்தாமராஜூவின் சிரிப்பு இப்போது எழும்பவில்லை. கண்களில் மட்டும் வியப்பு என்ன? என்ன செய்துவிட்டாள்? மறுபடியும் சரளாவோடு... ஒரே வீட்டில்... இங்கே தங்கி என்ன செய்யப் போகிறாள்? அவளால் தனக்கு என்ன நேரும்? மீண்டும் பழைய சிறை. விட்டு விலகவே முடியாது போலிருக்கிறதே? சரளா–பரந்தாமராஜூவையே பார்த்திருக்க அவளை நோக்கிக் கேட்டான்.

"ஆர் யூ மேட்?"

"நோ. நான் இனிமே எங்கியும் போறதா இல்ல. நீங்க சொல்றபடி எப்போதும் ஒங்களுக்கு ஒதவியா ஏதாவது பண்ண முடியுமான்னு பாக்கறேன்"

"நோ. இது வேற. வேற ஒரு பாதை. இதுல நீ செய்ய ஒண்ணுமில்ல"

"அட சும்மா நிறுத்துங்கறேன். திலும்பியுந் திலும்பியும் போபோன்னு தொரத்துறே. நீங்க வாங்க–இது கெடக்கு–இப்புடித்தான்

ஜம்ணாக்காவும் இதுவும் வந்திச்சுவ. இப்ப என்னமோ பெரிய இதுங்காட்டியும் நீ போ போங்குது. எங்ககூட நீங்க இருக்கலாம். வாங்க" என்று கருப்பு–சரளாவை இழுத்துக் கொண்டும், தழுவிக் கொண்டும் குடிசைக்குள்போனார்கள்.

பெருவெளியில் இறங்கிய பரந்தாமராஜுவுக்கு சரளாவின் இந்தப் போக்கு பயமாகவே இருந்தது. என்றாலும் இதையெல்லாம் யாராலும் தடுத்துவிட முடியாது. பெருவெளி அவளை இழுத்தது. சூரனை நிமிர்ந்து பார்த்து சிரித்தான். சூரனும் சிரித்தான்.

# 11

"காலம் மனிதனைத் தின்று கொண்டிருந்தது. மனிதர்கள் காலத்தை நொறுக்கிக் கொண்டு இருந்தார்கள். காலம் என்பது கற்பனை. அதில் இன்னொரு கற்பனை மனிதன்" என்றான் பரந்தாமராஜூ. இரண்டு மாதங்கள் மேலும் கழிந்தபின்னும் பரந்தாமராஜூ ஜம்னாவைத் தொடவேயில்லை. தொட முடியவேயில்லை. அந்த சின்னக் குடிசையில் அவர்களிருவருக்கும் மறுபுறம் ராமலக்ஷ்மியும் சரளாவும் தூங்கினார்கள். ஜம்னாவால் அவனை இப்படியெல்லாம் ஊருக்கு நடுவே அணைத்துக் கொள்ள முடியாது. சரளாவும் ராமலக்ஷ்மியும் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பார்கள். ஜம்னா அவளிஷ்டம்போல் சந்தோஷமாக இரவு முதல் விடியும் வரைகூட சில வேளைகளில் வீட்டிலேயே அவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்து நெட்டிப்பூ வேலை செய்து கொண்டிருந்தாள். ஜம்னா செய்து கொண்டிருந்தது ஒரு விதமான ஆர்ட் ஓர்க்தான்–நெட்டி பொம்மைகள். நெட்டியிலேயே தாஜ்மஹால், தஞ்சாவூர்ப் பெரிய கோயில் போன்ற புராதனக் கட்டிடங்களின் சிறிய மாதிரிகள் எல்லாம் செய்து கொண்டிருந்தாள். மராட்டிய அரண்மனைப் பாதாளக் கிடங்கிலிருந்து வெளி வந்த ஜம்னா அல்ல அவள். அவளைச் சுற்றிலும் அவளை ரசிக்கிற–அவளைப் பாராட்டுகிற–அவளைப்போல் இருக்க மாட்டோமா என்றேங்குகிற நூற்றுக்

கணக்கான பெண்கள், ஆண்கள் தோன்றிவிட்டார்கள். "பூக்கார ம்மிராட்டிச்சிம்மா" என்று சொல்லி அடையாளம் காட்டுகிற அளவுக்கு அவள் கைவேலை பிரபலமாகப் போயிற்று. சரளா எங்கும் போகிறதில்லை. குடிக்கப் பழகி இருந்ததால் அவள் அங்கே ஒரு வாரம்–தொடக்கத்தில்–ரொம்பச் சிரமப்பட்டாள். பரந்தாமராஜூ அவளைக் கட்டுப்படுத்தவில்லை.

"இங்க இதுதாங் கெடைக்கும்" என்று சாராயத்தை டம்ளரில் அவளுக்கு நீட்டினான்.

"புத்தி போவுது பாரு. ஏம் மச்சான்–பொட்டக் கழுதக்கி குடிக்கறதுக்கா ஊத்திக் குடுக்குற?–ஒன்னச் சொல்லணும். என்னா கொழுப்பு ஒனக்கு?"–ராமலக்ஷ்மி கத்தினாள். முழங்காலைக் கட்டிக் கொண்டு பாலியெஸ்டர் புடவையில் புழுங்கி வியர்த்துக் கொண்டு குடிக்காததால் ஏற்பட்ட படபடப்புடன் "பரவாயில்லே, உங்களோட வந்தாச்சு. இனிமே நானும் இதையெல்லாம் விட்டு வேற மாதிரி ஒரு உலகத்துக்கு ஆளாகணும். உங்களப் பாக்க எனக்கு ஆச்சரியம். அன்னிக்கு வந்ததோட திரும்பிப் போயிருந்தேன்னா பெரிய ஏமாளி யாயிருப்பேன் ராஜூ. என்னையும் ஓங்களோட சேத்துக்கங்க. என்னயும் இந்தக் கூட்டத்துல பொதைச்சுடுங்க. ஓங்க செடியா–ஓங்க மரமா–நான் வளருவேன். குடிக்கலேன்னா எனக்கு ரைகர் வரும். உடம்பத் தூக்கித் தூக்கி ஜன்னி மாதிரிப் போடும். ஐ பிகேம் என் அடிக்ட் ராஜூ. என் வேஷத்த கலைக்கணும். பட் ஐ டோன்ட் நோ வ்வாட் ஐ'ம் என்னோட வேஷம் இன்னதுன்னு எனக்கு ஜம்னாபாய்தாங் காட்டிச்சு. ஜம்னாபாய் பாத்து அண்ணக்கி இஞ்ச நொளஞ்சப்பவே நான் ஆடிப்போய்ட்டடேன். என்னோட வேஷம் என்ன தெரியுமா? ஓங்கிளுக்குக்கூடத் தெரியாது ராஜூ. அது–சரளாங்ற என்னோட வேஷம். இஞ்ச வந்து தங்கின மூணாவது நாளே என்னுடைய சரளாங்ற வேஷத்த ஜம்னாபாய் தூக்கிபுடிச்சு எனக்கே புரியவச்சுட்டுது. நாந்தாங் கேக்கிறேன்–ஒரு பொண்ணு இன்னொரு பொண்ண எப்பவுமே எதுலயுமே ஒதுக்க மாட்டோம்னு ஓங்களுக்குத் தெரியுமா? ஜம்னாபாயி சொல்லிச்சு. "ஏமாந்து போய்ட்டீங்களே எம்மா, கைய்ல இருந்தவர வுட்டுட்டீங்களே? அவுருக்கு ஓங்க மேல எவ்வளவு ஆச தெரியுமா? ஏங்கிட்ட சொல்லீருக்காரு. நீங்க எவ்வளவு அவர நேசிச்சீங்கன்னு? நான் ஒரு நாசமாப் போன பொண்ணும்மா. என்ன அவரு என்ன வேணாலுஞ் செய்யலாம். அடிச்சுத் தெருவுல வெரட்டுனாக் கூட நாதியில்ல. இப்பமும் ஒண்ணுங் கெட்டுப் போல. நீங்கதான் அவருக்குப்

பொண்டாட்டியா லாயக்கு. ஆனா நாந் தாலி கட்டிக்கிட்டேன். அதுனால ஒண்ணும் கெட்டுப் போகல. அவரு ஒங்களையும் லல்லுப் பொண்ணையும் மறக்கவே இல்ல. எத்தன கோடி வருஷமானாலும் உங்களையும்–நீங்க செஞ்சதெல்லாத்தையும் அவரே தங்கமா வச்சி தாங்கினதையும்–அவரு நெஞ்சு வேகுற வரைக்கும் மனசுக்குள்ளே பூஜை செஞ்சுக்கிட்டே இருப்பாரு–அவரு இஞ்சே ரொம்ப நாளு இருக்க மாட்டார்னு எனக்குத் தோணுது, என்னோட அவரு இந்தச் சேரிலெ அழுஞ்சி போகணுமா? ஏம்மா? அவரு எப்பேர்ப்பட்ட கலாகார்? தெய்வம்–அவருக்கு இந்த ஒடம்பே குடுக்கக் கூட எனக்கு கஸ்ட்டம். அருவருப்பு நான் ஒரு நவ்கரீ–வேஸ்யை. நான் எப்டிப்போனாலும் போகலாம. அவரே கூட்டிகிட்டு ரொம்ப தூரம் போய்டுங்கோ. மனுஷன் ரொம்பப் பிடிவாதம். இஞ்சே இருந்தா ஒண்ணுமில்லாம்ப் போவார். கொஞ்ச நாள் இஞ்சயே இருந்து கொஞ்சங் கொஞ்சமா அவர ராத்திரி பகலாகூட இருந்து மெதுவா பதஷ்ட்டப் படாமே, அவருக்கே தெரியாம இஞ்சேருந்தே அவரெ–கொழந்தைய கையால எடுத்துக் கொஞ்சி மிட்டாய் காட்டி மெதுவா அழவுட்டுப் பின்னாலேயே–ஒங்கபின்னாலேயே ஓடி வரவிட்டு அப்புடியே அலாக்காத் தூக்கிக் கொண்டு போய்டுங்க. ஏன்னா என்னோட அவுரு இருந்தா, அவர என்னால ஒண்ணுஞ் செய்யமுடியாது. அப்டீன்னுது"

சரளா சொன்னாள். "ராஜூ ஜம்னாபாய் ஒரு ஜெம். என்னுடைய சரளாங்ற வேஷம் அப்பவே ரொம்ப அசிங்கமாக் கேவலமா எனக்குப் புரிஞ்சு போச்சு. நான் சரளா இல்ல. ஐ'ம் நாட் சரளா நெள. நான் சரளாவா இருந்தேன்ங்கறது ஜம்னா எனக்குப் போட்ட பிச்சை. அவ உங்களப் பத்திதாம் பேசினா. ஆனா நான் என்னப் பத்திப் புரிஞ்சுக்கிட்டேன். ஐ'ம் யுவர்ஸ்–இதுவும் ஜம்னா கத்துக் குடுத்துதான். அவ உங்கள இழக்கவும் தயாரா இருக்குறா. ஏந் தெரியுமா? இனிமே அவ உங்கள இழக்கவே முடியாது. இன் ஃபேக்ட் அவ உங்கள தூரத்துலேருந்தே அனுபவிக்கிறா. அவ உங்கள கலக்காத ஜம்னாவா எப்பவுமே இல்ல. ஷீ'ஸ் நாட் டிவைன். அவ கற்பனைல வாழ. நீங்க இல்லேன்னா மட்டுந்தான் நான்–அவ–அந்த சின்னக்குட்டி லல்லு இன்னும் ராமலக்ஷ்மி எல்லாருமே இல்லாமப் போய்டுவோம். வ்வீ ஆர் நாட் யுவர் கான்க்குபைன்ஸ். வ்வீ ஆர் நாட் யுவர் லவ்வர்ஸ். பட் இன்டீட் வ்வீ ஆர் சேர்ட்டன்லி யுவர்ஸ்–பத்து நாளைக்கி முன்னியா இருந்தா இது எனக்குப் புரிஞ்சிருக்காது. நானும் எங்களோட சேந்து... ராஜூ ஒன்னு கத்தி சிரிச்சிருப்பேன். இது எனக்கு ஜம்னா போட்ட பிச்சை. இத புரிஞ்சுக்க முடியாது–உயிரோட உயிராக்

கலந்தா மட்டும் உணர முடியும்–ஐடோன்ட் ஹேவ் வேர்ட்ஸ் ஃபார் திஸ் ஃபினாமினா. ஆனா இது எந்த மனுஷனாலேயும் சுலபமா போய்ச் சேர்ந்து இன்பமாக முடிகிற இன்ஃபினிட்டி. இனிமே எனக்கு–ராஜூ–நீங்க எல்லாரும் இல்லாமப் போனாக் கூட ஓயாம ஒழியாம தன்னந்தனியா அமிர்தமய்மா தேவதையைப் போல வாழ்ந்துடுவேன். அல்லது வானவில்லைப் போல ஒளிவிட்டு மறைஞ்சும் போவேன். போற கஷ்டமும் இருக்குற கஷ்டமும் இனிமே எனக்கில்ல. நீங்க எஞ்சேல்லாம் போறீங்களோ உங்களோடயே திரியிற இந்த சிப்பிவெள்ள–நாச்சி–கருப்பு–ராமலக்ஷ்மி–ராஜலக்ஷ்மி–வெள்ளையம்மா–சுலோச்சனா–இன்னும் உங்கள தூரத்துலேருந்தே அவுங்களோட எடுத்துக்கிட்ட கலியன்–செவுத்தியாள்–லாசரு–கோயில் ட்ரஸ்ட்டி–இன்னும் இந்தத் தெரு ஜனங்க பூரா இந்த சந்தோஷத்த என்னெ மாதிரியே தெரிஞ்சு புரிஞ்சு இருந்துங்கூட அவுங்க எல்லாரும்–என்ன மாதிரி–உங்கள அனுபவிக்க முடியல. ராஜூ! நீங்க ஒரு சாதாரணமாக கலைஞன்தான். ஆனா இந்த ஜனங்க எல்லாம்–இந்தப் பொண்ணுங்க எல்லாம்–அவுங்க எவ்வளவு கேலமான வாழ்க்கை வாழ்ந்தாலும் அபாரமான கலைஞர்கள்–அவுங்க ஒண்ணுக்கும் ஒதவாமப்போனாக்கூட! ஜம்னா–நீங்க, ரெண்டு பேரும் இன்னும் ஒருத்தரை ஒருத்தர் பூரணமா புரிஞ்சுக்க, அனுபவிக்க முடியாமப்போனதுக்கு ஒங்கிட்ட இருக்குற அபூர்வமான கலை ஞானந்தான் காரணம். இதையெல்லாம் இஞ்ச நான் வராமலே போயிருந்தா–நான் என் காலமெல்லாம் அழுது–இல்லாத பாரத்தையெல்லாம் தலைல சுமந்து 'நாந் தனியாப் போய்ட்டேனே? ஐ'ம் அலோன், ஐ ஹேவ் த்ரோன் இன்ட்டு எ மட்டி ஐலண்டு வித்தவுட் எனி ரீஸன்'ன்னு–நீங்க முந்தி ரோட்டோரத்துலியும், மராட்டி அரண்மனைப் புழுதிலேயும்–சாக்கடை ஓரத்திலியும் குடிச்சுட்டு 'எல்லாம் பொய்–எல்லாம் வேஷம்–எல்லாம் ஏமாத்து–எதுவும் நிலைக்காது'ன்னு நானும் உங்க மாதிரியே பொலம்பி என் துக்கத்தையும் கஷ்டத்தையும் வளத்து வளத்து தீயாக்கி அதுலியே பொசுங்கிப் போயிருப்பேன். இப்போ எனக்கு எல்லாம் ஒண்ணாப் போச்சு. ஒங்களோட நான் சேந்தாச்சு. நீங்க எனக்கு வேணும்னு இனிமே நான் பொலம்ப மாட்டேன். கதற மாட்டேன். ஏன்னா ஜம்னா எனக்குக் கெடைச்சாச்சு. ஜம்னாவ விட்டு நாம் போக மாட்டேன்னா இந்தத் தெரு இதனோட சாணிக் கும்பி ஆயிரக் கணக்கான ஆண்–பெண் குழந்தைகள்–மாடு–நாய்–கோழி அடங்கலும் வானத்தளாவி உங்க வெரலால நீங்க தேடிக்கிட்டே இருக்குற உங்க அசுரனும் எங்கள

இழுத்துகிட்டு மேலே மேலே போறான்னு அர்த்தம். வறுமையும், பசியும் நான் அனுபவிச்சதில்லே. பசியை நான் உணர்ந்ததில்லே. தீயிலே நான் கருகினதில்லே. ஆனா அதெல்லாம் எனக்குத் தெரியத்தான் தெரியும். புரியத்தான் புரியும். நீங்க வேற-நான் வேற-சூரன் வேற-ஜம்னா வேற-இன்னும் அணு அணுவா இஞ்ச அடங்கி இருக்குற ஆகாயம் வரைக்கும் எல்லாம் வேற, வேற இல்ல. நான் நெறையவே பேசி நெறையவே உளர்ரேன்னு உங்களுக்குத் தோணினா நீங்க ஒரு விமர்சகர். இன்னும் பேச மாட்டாளா? இன்னும் இவ தன்னோட அநுபூதியெல்லாம் அவிழ்த்துப் போட மாட்டாளா? நிர்வாணம் ஆக மாட்டாளான்னு நெனைச்சா நீங்க என்னோட உள்ளேயே இருக்குற-எனக்கே எனக்காகிப்போன ஜம்னா-நெறைய்ய ஒளர்ரா. இன்னும் போக வேண்டிய தூரம் தெரியாம நிக்கிற எடத்துலேயே சுத்தி அங்கியே பாட்டுப் பாடிக் கொட்டமடிக்கிறான்னு நெனச்சீங்கன்னா நீங்க என்னோட ராஜூ"

பரந்தாமராஜூவுக்கு வாழ்வது இன்னும் சிக்கலாய் போயிற்று. சரளாவுக்கோ அவள் பெயர்கூட விலகிற்று. பரந்தாமராஜூவிடமிருந்து விலகிப் போகப்போனவள் அங்கேயே விலக முடியாமல் அவர்களோடேயே விழுந்துபோனாள். ஜம்னாவின் உறவும் அந்தத் தெருவாசிகளின் ஒரே நேரத்தில் புதுவெள்ளம்போல் நுங்கும் நுரையும் அழுக்கும் கசடும் அசிங்கமும் நரகலும் புதுமையும் கொண்டு வந்தன. வழக்கமாக பேசுகிற மாதிரி அவளையும் சேர்த்துப் புரணி பேசினார்கள். பரந்தாமராஜூ அவளை வைத்திருப்பது உண்மைதானே! அங்கு எல்லோருக்கும் அப்பிடி வைத்திருப்பதுதான் பிடித்திருந்தது. வாழ்க்கையின் அபத்தத்தில் பரந்தாமராஜூவுக்குத்தான் எத்தனை முத்தங்கள்? எத்தனை புணர்தல்கள்? எத்தனை மானசீகக் கருக்கள்? வளரவேமுடியாத பிண்டங்கள்? வளர்ந்து அவர்களின் தனி உலகாய் நிறைந்தன. வெளிப் பார்வையில் அவனது வாழ்க்கை சோரம்தான். ஆனால் இது இன்னதென்று உணரும் அனுபவம் பலருக்கு இல்லாமலேயே போகும். இரவு எட்டுமணி ஆனபோது ஜம்னா வீட்டுக்குள் வழக்கத்துக்கு மாறாக வந்தாள். அவள் முன்னைவிடவும் இப்போது ஓய்வில்லாமல் புதுப்புது வேலைகளை ஏற்றுக் கொண்டு ஒதுங்கினாள். எங்கே பரந்தாமராஜூவின் கைகளில் சிக்கி விடுவோமோ? என்று சிறகடித்துப் பறந்தாள். அவன் உடம்பின் வாசனையை மறக்க, பகல்களிலேயே வெகுவாகப் பாடுபட்டாள். அவள் தொங்கல் முலைகளை-நன்கு வற்றும் வரை-அவற்றை உடம்பின் பாகமாக இல்லாமல் ஆக்கும் வரை-ஒழித்துக்கட்ட குப்புறப் படுத்தே தூங்கினாள். அவளது

எண்ணாயிரம் யோனி முடுக்குகளையும் தூர்த்து மூட அவள் வேலை, வேலை வேலை எனும் வாழ்க்கையை மேற்கொண்டாள். அடிமையாய் இருந்தே விடுதலை ஆனாள். விடுதலையாகி உடைந்து சுக்கு சுக்காக காற்றில் அண்ட பேரண்டத்தில் கலக்க தயாராகிக் கொண்டிருந்தாள். ஆனாலும்... சரளாவோ... ராமலக்ஷ்மியோ-சிப்பி வெள்ளையோ-நாச்சியோ-யாரும்-இன்னும் எவரும்-தனியே அவனை-அவளைப்போல் எடுத்தாள முடியவில்லை-என்பதை குமுறும் பயத்துடனும்-அழியும் நெஞ்சுடனும்-இன்னும் அவனைத் தனக்குள் ஆக்கத் தெரியாத தன் யோனியின் அமைதியையும்-அவள் நஞ்சென வெறுத்தாள். அவன் என்றேனும் ஒரு நாள் தன்னையும் பிளந்து தனக்கு காட்ட மாட்டானா? என்றும் ஏங்கினாள். அனாதையாய் வந்த தன்னை எல்லா ஆண்களையும் போல எடுத்தாண்டு இருந்தால், அவள் குழந்தைகளைப் பெற்றுக் கேள்வியாகி இருப்பாள். ஆனால் பரந்தாமராஜூ பட்டினி கிடக்கிறான். திடீரென்று சிப்பி வெள்ளை கொண்டு வரும் கடல் ஆமைப் பொரியலையும் நத்தை குழம்பையும் சில நேரங்களில் மலப் பன்றியின் வார்க் கறி வறுவலையும் அவன் சாப்பிடுவதைப் பார்க்கும் அவள்-ஜம்னா-என்னவாகிப் போகிறாள்? பசி-பட்டினி ஏனென்று அவள் கேட்கமாட்டாள். என்றைக்குக் கேட்டிருக்கிறாள்? ஒருநாள்-இருநாள்-இரண்டேநாள்-அவனுடன் பூரணமாகக் கலந்த அந்தக் கொடிய அனுபவம் எத்தனை இனிமையாக இருந்தாலும் அந்தக் கொடிய அனுபவம் அவளை மேலும் மேலும் தொடர்ந்து துரத்தித் துரத்தி வேட்டையாடிக் கொண்டிருக்கிறது. பரந்தாமராஜூ வீட்டுக்குள் நுழையும் போதே அவளுள்ளே ஒவ்வொரு அவயமும் ஏதோ ஒரு திரவத்தால் கசிவு நேருகிறது. அப்படியே அவளை அது வேட்டையாடி பலி கொள்கிறது. அவனோ அவளை தொட முனைவதே இல்லை. அவன் அவளைப் பார்க்கும்போது சூரன் கைகளையும் கால்களையும் அசைத்து அவளை பட்சிப்பது போலத் தோன்றுகிறது. இருவரும் விலகிய இடைவெளிகளில் ராமலக்ஷ்மி அவனை ஒருபுறம் உலுக்கி எடுப்பது இவளுக்குத் தெரியும். சரளா அவர்களிருவருக்கும் இடையில் ஒரு பந்தமாகாமல் நெருங்கிப் போய்விட்டாள். நெருங்கி நெருங்கி அவனை எடுத்துக் கொள்ளுவாள் என்று ஜம்னா எண்ணும்போதே அவன் அந்தத் தேவர் குட்டி கருப்புடன் விளையாட ஆரம்பித்து விடுகிறான். என்ன கொடிய விளையாட்டு? ஏங்கிப் போக மாட்டாளா? என்றெண்ணும் போதே அவன் பறத் தெருவுக்குப் போய் விடுகிறான். மிருதங்கம் அடிக்கும் லாசருகூட-அவன் மனைவிகளுடனும்

தெருமுனை நாயருடனும்-ஓயாது அவர்களுடனும் வந்து போகிறான். இது ஒன்றுதான் ஜம்னாவால் முடியவில்லை. இன்னும் ம்மிராட்டிச்சி'தான் அவள். சும்மாவாகவே இவன் எப்படி அவனால் திரிய முடிகிறது? சோம்பேறித்தனமாய்? சும்மாவாகவே இவன் எப்படி எல்லாருடனும் இழைந்துவிட முடிகிறது? முன்பெல்லாம் வேஷம் வேஷம் என்று புலம்பிய இவன் எப்படிப் பல வேஷங்களைப் போட முடிகிறது? ஜம்னாவுக்கு அவன் இன்னும் புரிந்தபாடில்லை. ஜம்னாவை அவன் அதற்காகவே காத்திருந்தான். அதற்குத் துணையாய் எல்லோரும் நின்றார்கள் மணி எட்டு-இருக்கும்போதுதான் ஜம்னா வீட்டுக்கு வருவாள். ஏனென்றால் அப்போதுதான் சாப்பிட்டுவிட்டு பரந்தாமராஜூ வருவதற்குள் திரும்பவும் பூக்கட்டப் போய்விடலாம். அல்லது நெட்டி அறுக்கலாம். மூன்று மணி நேரங்கழித்து அவன் பறத் தெருவிலிருந்து திரும்பும்போது ஜம்னா வந்து-சாப்பிட்டு-படுத்து தூங்கி இருப்பாள். அவன் எழுப்பவே மாட்டான். அவன் விடியும் முன் அவளைத் பார்த்ததே இல்லை. ரெண்டு மாதமாச்சி. அவளும் அவனைத் தேடுவதில்லை. சரளாவுடன் மிகுந்த உபயோகமான தினசரி பழக்கங்களுடன் நாட்கள் கடந்து போயிற்று. இது என்ன வேஷம்? என்றுஅவனுக்குத் தோன்றாமலில்லை. சிற்பி வெள்ளையுடன் ஆற்றுப் படுகையில் பறத் தெருவுக்குப்பின்னால் மூங்கில் தோப்புகளிலும் சுற்றி விட்டு வரும்போது சரளா ரொம்பத் தேவைப்படும். சிப்பி வெள்ளை பேசி சிரிக்கக் கூடிய பெண்ணல்ல. தின்னக் கூடிய ருசிக்கக் கூடிய தின்னப்படக் கூடிய பெண். ஆனால் ருசிப்பதிலேயே நம்பிக்கை அற்றவன் பரந்தாமராஜூ. தின்னவா போகிறான்? சிப்பி வெள்ளையோடு மூங்கில் தோப்பிலும் ஆற்றங்கரையிலும் தனியே என்ன வேலை? என்று ஜம்னாவிடமும் பலரும் கேட்டார்கள். முன்பெல்லாம் கேலியாகச் சிரித்தவள்தான் ஜம்னா. அப்படிப் பேச்சு வாங்குவது அரண்மனை ஆம்பிளைக்கு கௌரவம் என்று நம்பியவள் அவள். இங்கே பூக்காரத் தெருவிலும் அவனுக்கு அவனோட சிநேகம்-தொடுப்பு என்பது பெரிய அதிர்ஷ்டமாகவும் பெரிய ஆண்மையாகவும் இங்குள்ளவர்களும் நம்பினார்கள். எங்குள்ளவர்களும் நம்புவார்கள் போலிருக்கிறது. ஆனால் ஜம்னா முன்போல் அரண்மனை நவ்கரி அல்ல. பூக்காரத் தெரு முத்துராஜா பெண்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். 'ம்மிராட்டிச்சி என்று அழைக்கப்பட்டாலும் அவள் 'முத்துராஜா பொண்ணு' என்ற பெயரை இந்த மூன்று நான்கு மாதங்களுக்குள் வாங்கிவிட்டாள். பூக்காரத் தெரு வியாபாரிகளிலயே இவ்வளவு

சீக்கிரம் பேர் வாங்கிய பெண் வேறு யாருமில்லை. எட்டு மணிக்குள் வீட்டுக்குள் நுழைந்ததும் ஜம்னாவுக்கு தூக்கி வாரிப் போட்டது. அங்கே தனியாக வெற்றுடம்பு கைலியுமாக பரந்தாமராஜூ–அவளைத் திரும்பிப் பார்த்தான். ஒன்றுமே நடக்காததுபோல் உள்ளே வேகமாகப் போன ஜம்னாவையே உற்றுப் பார்த்தான். அவனோடு பேசியே ஒரு மாதமாயிற்று. வீட்டில் சரளா இல்லை. ராமலக்ஷ்மியும் பூச்சந்தைக்குப் போயிருந்தாள். வீடு இருண்டு இருந்தது. சாப்பிட வந்தவள் சாப்பிடாமலேயே ஏதோ பராக்குக் காட்டி விட்டு புறப்பட முனைந்தாள் ஜம்னா. நெஞ்சு படபடத்தது. ஒரே அறை–ஒரு நீண்ட சதுரம்–குறுக்கில் அவ்வளவு சேலைகள் கொடியாய்த் தொங்கின. கொல்லைப்புறம் இறங்கும் முன் அடுப்பறை. அடுப்படியிலேயே தயங்கிச் சுழிந்தாள் ஜம்னா. போவதா? வேண்டாமா? நெஞ்சை அடைத்தது ஒரு விம்மல். என்றுமறியாத அனாதையென தன்னைத்தானே கழுத்திறுக்கிக் கொல்லும் அதென்ன? அவனைக் கண்டு ஓடுவது என்ன நியாயம்? முன்னறையில் அவனைத் தாண்டித்தான் சென்றாக வேண்டும். அவன் கேட்பான் 'எங்கே போகிறாய்?' நெஞ்சு குபீரென்றது. இந்த செறுக்கிகளெல்லாம் எங்கே போனார்கள்?

“ஜம்னா உள்ள என்ன பண்ற? வெளியவா!” அவனை அவனுக்குத் தெரியும். அரிக்கேன் விளக்கில் அறை இருளில் அழகு சிந்தியது. ஜம்னாதான் தயங்கி தயங்கி நின்றாள். அவள் ஒன்றும் பேசவில்லை. அழைக்கவும் இல்லை. நெஞ்சு நின்றுவிடும்னு வெளியேற வேண்டும். தொண்டையை ஏதோ அடைத்தது மறுபடியும் அவளைப் பார்த்து இப்படி பயப்பட என்ன விதி அது?

“ஜம்னா போகணுமா? நான் ஒண்ணுஞ் செய்ய மாட்டேன். தைரியமாப் போ. போயேன்” அறை வாங்கியதுபோல் நின்றாள் ஜம்னா.

“ஜம்னா குட்டீ! உன்ன நான்விடவே மாட்டேன். எனக்கு உன்னத் தவிர யாருமே எனக்கு வேண்டியதைத் தந்ததே இல்ல. அதுக்காக உன்ன நான் புரிஞ்சுக்காம இல்ல. உன்னோட பயம் எனக்கு!’ ் இருக்கு. நீ இஷ்டப்பட்டா உன்ன விட்டுட்டு ஒருவழியா நான் போயிடுவேன். சரளாவோடயோ சிப்பி வெள்ளயோடயோ யாரோடவும் போகமாட்டேன். தனியாத்தான் எப்பவும் போல தனியாத்தான்” மீண்டும் அறை அவ்வளவுதான்.

"எனக்கு இன்னும் கழட்டி எறிய இருக்கிற ஒரே சுமை–இந்த உடம்பு, அதை உனக்காகத்தான் காப்பாத்தி வெச்சிக்கிட்டிருக்கேன். நீயும் வேண்டான்னா எனக்கு ரொம்ப சீக்கிரம் விடுதலை. உனக்கு உபயோகமா வேற ஏதாவது நாஞ் செய்யணுமா சொல்லு"–திருப்பித் திருப்பி அறைகள்.

ஜம்னாவுக்கு மூச்சு வாங்கியது. அவன் இன்னும் பட்டினியாய் இருந்திருப்பான். குரல் மெலிந்து வருவதில் பட்டினி தெரிந்தது. என்ன மனிதன்? அவனது பட்டினி அவளது பசியைக் குத்திக் கிளப்பியது. மராட்டிய அரண்மனையில் கண்ட அந்த தெருப் பொறுக்கி அல்ல இவன். உபவாசமிருந்து உடலை மனதை ஒடுக்கி தபஸ் புரியும் ஏகாக்ரஹி. இந்த சாமியார்த்தனம் தானே அவளையும் வாட்டி எடுக்கிறது! ஆனால் இவன் சாமியாரா? அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அழைத்து வந்த ஜம்னாவா இவள்? அந்த மெலிந்த மராட்டிப் பெண் இந்த மூன்று நான்கு மாத ஊட்டத்தில் காணோம். அரிக்கேன் விளக்கில் செவ்வொளியில் ஜம்னா சற்றே திரண்டு காணப்பட்டாள். உடல் பூரித்திருந்தது. உழைப்பாலும் வேலையாலும் பூரிப்பு வலிமையைத் தந்திருந்தது. வெயிலில் அலைச்சலால் மேலும் சிவந்திருந்தாள். அந்த வெள்ளைப் பெண். அவளது இடையைத் தவிர மற்றெல்லாம் பூசியதுபோல் பூசி சதை வைத்திருந்தது.

"நீங்க இன்னிக்குப் பட்டினியா?" தழுதழுத்த குரலில் ஜம்னா அழுதாள். விம்மலும் சிறலும் அடர்ந்தது. அவனை, மறுபடியும் கேட்டாள். "பட்டினியான்னு கேட்டேன்"–தைரியப்படுத்திக் கொண்டாள். அவன் பதில் சொல்லவில்லை. அழுகை நிற்கக் கொஞ்சம் நேரமாயிற்று.

"ராத்ரீல ஆத்தங்கரைப் பக்கம்–வீட்ல சரளாவும், ராமலக்ஷ்மியும் காத்துக்கிட்டுருக்கும்போது–சிப்பி வெள்ளையோட அங்ய போகணுமா பட்டினியா?"

பரந்தாமராஜூ அவளையே பார்த்துக் கொண்டே கையூன்றி எழுந்தான். அவளருகே வந்து குனிந்து (பரந்தாமராஜூ அவளைவிட உயரம், ஆறடி) அவளை உற்றுப்பார்த்தான். லேசாக பௌடர் போட்டிருந்தாள். முத்துராஜா பெண்களைப் போல நிறைய இடைவெளிவிட்ட கழுத்தோட ஜாக்கெட், நீண்ட பாம்பு போன்ற அவளது உடலுக்கேற்ற ப்ரேஸியர்ஸ் வெள்ளை தாவணியில் சிவப்பு–பாவாடையில் இரண்டும் கலந்த பட்டை

பார்ட்டர்களில் அவள் இன்னும பதினெட்டு வயது சிறுமியாகத்தான் உருக்கொண்டாள். அவனுக்குப் பசித்தது. அவள் சொல்வது உண்மைதான். மூன்று நாளாக அவன் நிக்ரஹம்–பட்டினி–ஆதார ஸ்ருதி. என்ன செய்வது? உடம்பு வணங்க அவன் கையிலிருக்கும் ஒரே ஆயுதம்–உபவாசம்–உபவாசம்.

“ஜம்னா–நான் இருக்குறது நீ சொல்றாப்பல பட்டினியில்ல. உனக்கே தெரியும். உபவாசம். அது இல்லேன்னா சிப்பி வெள்ளை என்ன ஜெயிச்சுடுவா. சிவன் என்னக் குப்புறத் தள்ளிடுவான். ராமலக்ஷ்மி' ராஜலக்ஷ்மி ரெண்டு லக்ஷ்மியும் எனக்கு சின்னச் சின்னதா நாலு புள்ள பெத்துக் கைல போட்டுடுவாளுக. அவ்வளவு ஏன்? என்னாலியே என்னை ஒரு குழிக்குள்ளாற தள்ளிக்காம இருக்க முடியாது. சரளா ஒருத்தியத் தவிர எல்லாருமே பாவம். நீயுந்தான்–நான் ஒரு சாக்கடக் கும்பீனு உனக்குத் தெரியும். அசுரன் ஏம் பிறந்தான் ஆயிரங்கையோட? என்ன எல்லாம் பக்கமும் வெட்டிச் சாய்க்கத்தான். எல்லா கோணல்கள்ளேயும் இருந்து வெளிய வர இருக்குறது ஒரே வழி. என்னையே பொளந்து மட்ட மட்டையா, பிரிபிரியா செதுக்கித் தள்றது ஒண்ணுதான். சிப்பி வெள்ளயும் நீயும் ஒரே மாதிரி எனக்காக அழாதீங்க. எனக்கு எத்தன தடவை சொன்னாலும் அலுக்காது. உன்னோட மட்டுந்தான் என்னால தப்பிச்சுக்கிட்டுப் போக முடியாது. கள்ளு–வரைக்கும் சாராயத்துல ஆரம்பிச்சு எல்லெஸ்டி மயக்க மாத்திரை வரைக்கும்–சாப்பாடு வரைக்கும் எல்லாத்தையும் ஒழிச்சாச்சு. என்ன மட்டும் ஏங்கிட்டேருந்து ஒழிக்க முடியல்ல. சரளா ஒரே நாள்ல தப்பிச்சுக்கிட்டா. என்னவிட அவுங்கள்ளாம் ஓங்கிட்ட எல்லாத்தியுமே கத்துக்கிட்டுருக்காங்க. என்னால உங்கிட்ட எதையுமே விட்டுடமுடியாது போலருக்கு. இதுக்குத்தான் கொலப் பட்டினி பசி இல்லாம, உடம்பு மட்டுமில்ல, மனசும், புத்தியும் சித்தமும் அந்தக் கரணமும் (புரியுதா) அடங்கமாட்டேங்குது. ஜம்னா–உன் ஒருத்தியாலதான் இது அடங்கும். எழுந்து ஆடிக்குதியாட்டம் போட்டுக் குப்புற விழுந்துதான் அடங்கும் இதெல்லாமே என் வேஷங் கலையும்போது தெரியும். நீயோ என்னோட பட்டினியோ என்ன விட்டுப் போகமுடியாது. ஏன்னா ஜம்னா! நீதான் என்னோட பசி. நீதான் என்னோட உபவாசம். நீதான் என்னோட தீனி!”

ஜம்னா அவனையே அகன்ற கண்களோடு பார்த்து அதிர்ந்து நின்றாள். என்ன சொல்கிறான் இவன்.? திரும்பவும் மீண்டும் அவளை எங்கே இழுக்கிறான்? இவைகளிலிருந்தெல்லாம் கொஞ்சம்

கொஞ்சமாக அவள் கழட்டிக் கொண்டே வந்து கரையேறும்போது இதென்ன? ஆனா அவன் பட்டினி பயங்கரமாய் அவளையும் பிடித்தது, அவன் தாகம் அவள் தொண்டையிலும் ஏறியது. அவன் உடலின் வேஷம் கலைந்ததுபோல் அவளது வேஷமும் இற்று விழுந்தது. அவனென்ன செய்யப் போகிறான்? அவளென்ன செய்ய வேண்டும்?

பரந்தாமராஜு மெதுவாகத் தன் சஃபாரி பேண்ட்டை கொடியிலிருந்தெடுத்து கால்களை அதற்குள் திணித்துக் கொண்டான். அவள் உடல் பதற நின்றாள். மார்புக்குள் ஏதோ சலனம். மூச்சு முரசு கொட்டியது. அவன் பேண்ட் பித்தான்களை ஜிப்பை இழுத்துவிட்டுப் போட்டுக் கொண்டான். இருகை விரல்களாலும் தலையைக் கோதிக் கொண்டான். வெற்றுடம்பு அவளை–அவனது உடல் முழுவதையும்–ஏதோ ஒரு சிலிர்ப்பில் ஆழ்த்தியது. பனியன் ஒன்றை எடுத்து அணிந்து மேலே கடும் நீல நிறத்தில் சட்டையும் அணிந்தான்.

"மஹ்ராஜ்! போகாதீங்கோ. என்ன அடிச்சு மிதியுங்கோ, வெட்டிப் போடுங்கோ சந்து சந்தாக் கூறு போடுங்கோ. ஆனா விட்டுட்டு மட்டும் போய்டாதீங்கோ"

வெளியே நகர இருந்த அவன் கைகளைப் பிடித்து மூர்க்கத் தனமாய் எவ்வி அவனைக் கட்டிக் கொண்டு தொங்கி உள்ளிழுக்க முயன்றாள். இரண்டு மிருகங்கள்–ஆக்ரோஷமான வேங்கைகள்–பசி கொண்ட வ்யாக்ரஹங்கள், இரண்டு தீச்சுளைகள்–அந்தக் குடிசைக்குள் அந்த இருட்டில்–முட்டி மோதிக் கடித்துக் குதறி ஒன்றை ஒன்று உண்ணாமல் விலகி நின்று, விலகி நின்று, மறுபடி மறுபடி உறுமி மோதுவதாய்ப் பாய்ந்து பின்வாங்கின. மறுபடியும் ஜம்னா கதறி அழுதாள். "போவாதீங்கோ மஹ்ராஜ்! இந்தக் கேடுகெட்ட நாய விட்டுப் போவாதீங்கோ. நான் உங்க லஞ்சா. தேவிடியா–போவாதீங்கோ" அவள் தூரப் போய் விழுந்தாள். லேசாக மூக்கு வழியாக ரத்தம் வழிந்தது ஜம்னாவுக்கு. திரும்பிப் பாராமல் வேங்கை படி தாண்டித் தெருவில் இறங்கியது. எதிரே அசுரன் கால்பரப்பி பறந்து கொண்டிருக்க–குடிசைக்குள் இருட்டு. ஜம்னாவின் சப்தமேயில்லை.

# 12

விடிந்து வெயிலேறி வெகு நேரமாகியிருந்தது. முன் வரிசைக் குடிசையிலிருந்த ஆண்களெல்லாம் பூச்சந்தைக்கும், பின் வரிசைக் குடிசையிலிருந்த ஆண்களெல்லாம் கொத்து வேலைக்கும், ரயிலே கலாஸ் கூலி வேலைக்கும் போய் விட்டிருந்தார்கள். லாசரு வீட்டுத் திண்ணையில் மிருதங்கத்துக்கு வார் பிடித்துக் கொண்டிருந்தான். பக்கத்தில் பரட்டைத் தலையும் இடுப்பில் கட்டிய கைலியுமாய் வெற்றுடம்போடு அப்போதுதான் தூங்கி விழித்த கோட்டுவாயுடன் மௌனமாய் எதிரே இருந்த தன் வீட்டு ஆமணக்குச் செடியை–இல்லை மரத்தை. மரமுண்டா?–வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் பரந்தாமராஜு.

"ஏம் மச்சான்! காலைலேருந்து சும்மாவே ஒக்காந்து தின்னுட்டுத் தின்னுட்டுத் தூங்குறியே நல்லாவா இருக்கு? நம்ம தெருவுல இருக்குறவளுவளோட ஊட்டி அடிக்கறுதுக்கே ஒனக்கு நேரம் பத்தமாட்டேங்கிது. அதெப்பிடி சும்மாவே இருக்க முடியுது உன்னால?"

"நீதான சொன்ன இந்தச் சேரியில வேல கெடைச்சாத்தாஞ் செய்வாங்க. இல்லன்னா தின்னுட்டுத் தூங்குவாங்கன்னு சொன்னியே–இப்ப நீயே சும்மா இருக்கேங்கறியே என்னப் பாத்து? அது சரி. நாஞ் சும்மா இருக்கேன்னு நீ எப்படிக் கண்டுபிடிச்ச. நான் ஒண்ணுஞ் சும்மா இல்ல"

"எது? இந்தத் தெருக் குட்டிங்களக் கோலிக் கோலிப் போட்றியே! அதச் சொல்றியா?"

"ச்சீ ஒம்புத்தி ஒன்ன விட்டு எஞ்ச போப்போவுது?"

"தோ–நாஞ் சொல்லி வாய்மூட்ல–வந்துட்டாளுவோ தேடிகிட்டு! இருக்க வுட மாட்டேங்கிது அவுளுவளுக்கு. விச்சுவிச்சுங்கிது. சிப்பி வெள்ள வந்துட்டா போ."

சீமைக் கருவை மரங்களிடையே மேலே முள்படாதபடி ஓசிந்து நெளிந்து உடலை கொஞ்சம் ஒடுக்கி அவள் வந்தது லாசருவின் கண்களை அள்ளியது.

"இந்தக் குட்டி படா ஷோக்காத்தான் இருக்கா? ஒம் பொண்டாட்டி ஒண்ணுமே சொல்லாதா மச்சான்? ம்ஹூம் இதுக்கெல்லாம் மச்சம் வேணும்"

"மடையா மடையா"

அதற்குள் சிப்பி வெள்ளை கூடவே நாச்சியையும் அழைத்துக் கொண்டு பரந்தாமராஜூவை அள்ளி விழுங்கியபடியே வந்து சேர்ந்தாள். பரந்தாமராஜூ பேசுவதற்குள்–எதுவும் பேசாமல் நாச்சிக்குட்டி ஆமணக்கு இலை ஒன்றைச் சுருட்டிக் கையில் நீட்ட அங்கிருந்த கிணற்றிலேயே ஜகடை கழற்றி சிப்பி வெள்ளை தண்ணீர் இறைக்க ஆரம்பித்தாள். பரந்தாமராஜூ அவர்கள் கைப்பாவையாய்ப் பல் விளக்க ஆரம்பித்தான். சர்சர்ரென்று வாளிகள் தண்ணீர் ததும்ப மேலே வந்தன.

"ஏட்டீ நாயிங்களா! விடிஞ்சதும் விடியாததுமா நேரா ஊரக் கெடுக்குறதுக்கு இஞ்ச வந்துற்றீங்களேடி. இஞ்ச என்ன சக்கர போட்டா வச்சுருக்கு?" என்றான் லாசரு.

"நீ போய்யா. ஒன் வேலயப் பாத்துக்கிட்டு. ஒஞ் சக்கரைய நக்க இஞ்ச யாரும் வல்ல" என்றாள் நாச்சி. "ஒக்காரு மச்சான்" என்றாள் பரந்தாமராஜூவையும் பார்த்து. பரந்தாமராஜூ உட்கார்ந்து கொள்ள கடகடவென்று வாளிமேல் வாளியாகத் தண்ணீரை இறைத்து ஊற்றினாள் சிப்பி.

"ஒம்பாடு தேவல மச்சான். ஒண்ணுஞ் செய்யறதுல்ல. வேலக்கிப் போறதில்ல. சும்மாவே திரியிற. கோயில் ட்ர்ஸ்டீலருந்து கலேட்டரு வரைக்கும் விளுந்து தாங்குறாங்க. இருக்குற குட்டிகளை யெல்லாம் ஒண்ணுவிடாம இளுத்துக்கிட்டு திரியற"

"ஒங் கண்ணுல புத்து வக்ய. நாசமாப் போவ" என்று திட்டினாள் சிப்பிவெள்ளை.

"சொன்னா பொத்துக்கிட்டுப் போவுதோ? நானும் மச்சாந்தானடி இஞ்சியும் வாங்களேன்."

நாச்சி கிணற்றடியில் கிடந்த நெல்லிக்கட்டை ஒன்றை எடுத்து அவனை நோக்கி வீசினாள். மிருதங்கக் கட்டை கையிலிருந்து எகிறியது. வார் அறுந்தது. மிருதங்கம் உருண்டது. லாசரு எழுந்து அவளை அடிக்கக் கையை ஓங்கிக் கொண்டே வந்து அந்தச் சேரியிலும் யாரும் பேசமுடியாத வண்டை வண்டையான கெட்ட வார்த்தைகளை–வசவுகளை அள்ளிக் கொட்டிவிட்டு பெருமூச்சு வாங்கினான். இந்த முறை நாச்சியினுடையது. அவள் ஆரம்பித்தாள். அதில் அவ்வளவு கோபமில்லை. லாசரு சொன்னதை ஒப்புக் கொண்ட போலியான திட்டாகத்தான் இருந்தது.

ஒன்றுக்கும் அலட்டிக் கொள்ளாமல் நாச்சியின் கன்னத்தைப் பிடித்து அவள் கிளர்ந்து விடும்படி–வலிக்கக் கிள்ளியபடி–ஈரக் கையாலேயே அவள் தலையை லேசாகத் தட்டி "என்னோட வேல செய்யணும்னா யாரு என்னா சொன்னாலும் எதுவும் பேசக்கூடாது. இல்லன்னா நீ வேணாம். வூட்டுக்கு ஓடு. யாராவது ஏதாவது சொல்லிக்கிட்டேதான் இருப்பாங்க. யாரு சொல்லல? நான் எல்லாரையுந்தா வச்சுக்கிட்ருக்கேன். நாஞ் சொல்றதக் கேக்கலேன்ன ஏஞ் மூஞ்சிலேயே முழிக்காத"–பொரிந்தான் பரந்தாமராஜூ... உசிலம் பொடி குழைத்து அவன் தலையில் நுரைக்கத் தேய்த்துக் கொண்டிருந்த கண்களில் நீர் கலங்க–அவன் காதுகளருகில் "நீயி சொன்னத எப்பக் கேக்கல நான்? அதாம் பைத்தியமாக்கி அலைய விட்ருக்கியே? போதாது" என்றாள் நாச்சி. அங்கிருந்தபடியே "இல்ல மச்சான். தெரியாமப் பேசிட்டேன். என்னப் போச் சொல்லிடாத. இனிமேப் போனா பூக்கட்டக் கூட வராது. மூணு மாசமா பளக்கமத்துப் போச்சில்ல" என்றாள் நாச்சி.

"தேவல மச்சான். நல்லாக் கொளிக்கறாளுவ ஜமாயி" என்றான் லாசரு.

சலசலவென்று இறைந்து தொடர்ந்து ஊற்றிக் கொண்டிருந்தாள் சிப்பி வெள்ளை.

"இவுளுவளக் கூட்டிக்கிட்டு எஞ்ச மச்சாம் போற நெதேய்க்கும்?"

"மண்டுப் பயலே–மாரியம்மங் கோயில்ல இவளுவ ஒவ்வொருத்திக்குங் கட போட்டுக் குடுத்துருக்கேன்டா. இவளுவ ஆத்தாங்கரலே போயி போட்டு குசாலடிச்சிட்ருக்கேன்னு

நெனச்சியா? இதுவளுக்கு மூங்கிச் சொம்பு, வெங்கலத் தாலம், கல்யாணச் சீர் தேங்கா, சந்தனக் கும்பா, ராமர் படம், செவுத்துல மாட்ற அலங்காரத் தட்டு, பூரண கும்பம் எல்லாம் அதுவளே கண்ணாடி அறுத்து கலர் டிசைன் ஒட்டி ஜரிகப் பேப்பரு ஒட்டி நூத்துக்கணக்குல தயார் பண்ணி தஞ்சாவூர் ரயில்வே ஸ்டேஷன், பஸ் ஸ்டாண்டு அப்புறம் பூம்புகார் ஆர்ட் கேலரி–காதி க்ராப்ட்–கதர் வாரியம் எல்லாத்துலயும் கொண்டு போய்ப் போட்டு மிச்சம் இருக்குறது மாரியம்மங் கோயில்ல இருக்ற கடைகள்ல போட்டு அஞ்சியே ஒக்காந்து வித்துப்புட்டு வரச் சொல்லிக் கத்துக் குடுத்துருக்கேன். ஒம் பொண்டாட்டி லச்சுமிகூட வரேங்கிது. நாந்தான் வேண்டாம்மா ஏங்கூடப் படுத்துட்டேம்பான். ஒம்மவ, மவன் இருந்தா அனுப்பிச்சு வையி. பள்ளிக்கூடத்துக்கு போலாம இருந்தா–பெரிய மவளையும் அனுப்பி வையி. தெனம் இருவது இருவத்தஞ்சு ரூவா கெடைக்கும். தொழிலையும் கத்துக்கிட்டாப்ல இருக்கும்ன்னு சொன்னேன்" என்றான் பரந்தாமராஜூ.

லாசரு ஒன்றும் பேசாமல் ஏனோ ஆயாசத்துடன் குடிசைத் திண்ணைச் சுவற்றில் சாய்ந்து கொண்டு பக்கத்து ஜன்னலில் இருந்த சாராயப் பாட்டிலை எடுத்து ஓர் இறுக்கு இறுக்கிக் குடித்துவிட்டுக் காலி பாட்டிலை சுவரோரமாக உருட்டிவிட்டான். இன்னும் பத்து நிமிஷத்தில் அவன் குடிசைக்குப் பின்னால் பள்ளத்தில் இறங்கி ரயில்வே லைனோடு பறத்தெருவுக்குப் போவான் என்று சிப்பி வெள்ளைக்குத் தெரியும். வாயில் நன்றாக வெடுவெடுப்பாக வந்தது அவளுக்கு. பரந்தாமராஜூ பார்த்துக் கொண்டிருக்கிறான். அதனால் அடக்கிக் கொண்டாள் நாட்டுச் சாராயம் சுர்ரென்று உச்சி ஏறியது லாசருக்கு. எதிரே சிப்பி வெள்ளையும் நாச்சியும் அந்த வெயிலில் அப்படியே 'முண்டக்கட்டை' ஆனார்கள். லாசருக்கு. ஆனால் பரந்தாமராஜூவைக் காணோம். அவன் தேவையில்லைதானே

லாசரு இரண்டாம் முறை சுற்றும் முற்றும் பார்த்து விட்டுக் குடிசைப்பின்புறமாக நடந்து குட்ஸ்யார்டு பக்கமாக நடந்தான். மிருதங்கம் மண்ணில் கிடந்தது. சிப்பி வெள்ளைக்குத் தெரியும். அவன் எங்கே போகிறான் என்று. குட்ஸ்யார்டில் கையில் சாக்கணாவுடன் ஏதாவது ஒரு திறந்த காலி வேகனில் அவனுக்காகக் காத்திருக்கும் சிப்பி வெள்ளையின் அம்மாவை நாச்சிக்கு நன்றாகவே தெரியும். சிப்பி வெள்ளையின் முகம் சலனமற்றிருந்தது. அவளுக்கு பரந்தாமராஜூ போதும். அம்மா–அப்பா–ஊர்ஜனம்–இதெல்லாம் வேண்டாம். இன்னும் சற்று நேரத்தில் டவுன் பஸ்ஸில் அவன்

பக்கத்தில் அமர்ந்து அவன் மார்பின் முடிச்சுருள்களைப் பார்த்தபடியே தலை குனிந்து அவனுடன் மாரியம்மன் கோயில் வரை போகும் சுகமான பயணத்தில் நாச்சி வரமாட்டாள் என்பது இன்பமான அனுபவமாயிருந்தது.

ஒவ்வொரு வாரமும் அவனுடன் மாரியம்மன் கோயில் போய் மீண்டும் இரவு வெகு நேரம் கழித்து அவனுடன் தனியாகத் திரும்பி வரும்போது–ஊர் முழுவதும் சுற்றிக் கூடையில் வியாபாரம் செய்து விட்டுத் திரும்பும் நாச்சி ஓட்டமாய் ஓடி வந்து அவன் கையைப் பிடித்துக் கொள்வது, பஸ் ஸ்டாண்டில் அப்போது நிற்பவர்களுக்குக்கூட கொஞ்சம் ஆச்சரியமாக இருக்கும். அத்தனை பரவசம்–நாச்சிக்கு. ரூபாயை எண்ணி அவன் கையில் கொடுப்பார்கள். தோளின் மேல் கை போடாத குறையாக ஒட்டி உரசியபடி இரவு ஒன்பது மணிக்கு ஏதாவதொரு பிரியாணிக் கடையில் நாச்சிக்கும் சிப்பி வெள்ளைக்கும் பிரியாணி வாங்கிக் கொடுப்பான். அவன் சாப்பிடமாட்டான். ரெண்டு குட்டிகளும் சாப்பிடச் சொல்லிக் கெஞ்சும். அடுத்த வாரம் என்று கண்ணடித்து அவர்களை மயக்குவான். ஆனால் சாப்பிடமாட்டான். இன்று நிச்சயமாக நாச்சி கூடையுடன் தெருவில் இறங்கியவுடன் பஸ்ஸில் கூட்டம் நிறைய இருந்தாலும் இல்லை என்றாலும் கூட்டத்தில் நசுக்கிக் கொண்டு போனாலும் 'என்னக் கட்டிக்காட்டியும் போவுது... வெச்சுக்கய்யான்னு கேக்காமவிடப் போறதில்ல' என்று பொருமினாள் சிப்பி வெள்ளை. வாரத்துக்கு அவள் சம்பாத்தியம் மட்டும் எழுபத்தைந்தாக்கி இருக்கிறான் பரந்தாமராஜூ. பொம்மைகளும் படங்களும் நன்றாகவே விற்கின்றன. தஞ் சாவூரில் சொந்தமாக ஒரு கடை கூடப் போடலாம். அத்தனை வித்தைகளையும் அடித்து தைத்து சொல்லிக் கொடுத்திருக்கிறான். அவனிடம் அடி/ உதை வாங்குகிற ஒரே பெண் அவள்தான். ராமலக்ஷ்மி–வெள்ளையம்மா–ராஜலக்ஷ்மி எல்லோரும் ஒரு தடவைகூட அடி வாங்குகிறதில்லை. காரணம் அவன் அடி உதைகளில் அவர்களுக்கு ஆசையில்லை. பரந்தாமராஜூ பளிச்சென்று கை நீட்டி விடுகிறவன்தான். ராஜலக்ஷ்மியை எல்லோருக்கும் முன்பாகவே ஒரு நாள் அடித்துப் போட்டான். அந்தத் தெரு இளவட்டங்களுக்கு பரந்தாமராஜூவை ரொம்பப் பிடிக்கும். எல்லோருக்கும் நடுவிலேயே "ஏய் சுப்புராஜீ–நீயி வெள்ளையம்மாள் கட்டிக்கடா. ஒனக்கு அவ தோதா இருப்பா. நாங் கட்டி வக்யறேன்" என்பான். பனியன் ஃபாக்டரியில் வேலை பார்க்கிற ராயப்பன் போகும்போது "யேய் ராயப்பா சும்மா பாத்துக்கிட்டே போனா ஆச்சா. நாச்சி ஒன்ன நோட்டம்

போடுறா. பாக்குறீல்ல. நீயி. ஓங்கப்பன்ட்ட சொல்லி கட்டிகிடு குட்டியப் போட்டுத்தள்றா" (குட்டி= குழந்தைகள்) என்பான். நாச்சி இவனை ஒரு முறைப்பு முறைப்பாள். ஒரு மாத காலமாக அந்தத் தெருவில் மிஞ்சியிருக்கிற எந்தப் பெண்ணையும் விட்டு வைக்கிறதில்லை பரந்தாமன். திண்ணைகளில் பூக்கட்டிக் கொண்டிருந்தவர்களில் பாதிப்பேர் இப்போது அவனது ஆற்றங்கரைப் பள்ளிக்கூடத்துக்கு-மூங்கலடிக்கு-போய்க் கொண்டிருந்தார்கள். சிறுவர்களுக்குக்கூட இருபது இருபத்தைந்து ரூபாய் கிடைத்தது. பரந்தாமராஜுவின் அலட்சியம்-பெண்களுடன் சுற்றுகிற இச்சை அவர்களுக்கெல்லாம் பெரிய விஷயமாகத் தோன்றவில்லை. பரந்தாமராஜுவுக்கு இதெல்லாம் என்றைக்குமே பிரச்சனைகளாக இல்லை. மாரியம்மன் கோயில் பஸ்ஸில் சிப்பி வெள்ளையுடன் ஏறும்போது பகிரங்கமாகவே நாச்சியின் குண்டியில் ஓங்கி அடித்தபடி பொம்மைக் கூடையைத் தலையிலேற்றி விட்டு, "எட்டு மணிக்கெல்லாம் இஞ்ச இருக்கணுண்டி. அஞ்ச இஞ்சே எவங்கூடயாவது நின்னுக்கிட்டுருந்த இந்த முளி ரெண்டையும் தோண்டிப் புடுவேன். ஆமா." என்று கூறியபடியே பஸ்ஸில் ஏறினான். அதே நேரத்தில் அவளை எங்கே பிடித்து உலுக்குகிறோம் என்பதும் பரந்தாமராஜுவுக்குத் தெரியாமல் இல்லை. கலங்கிய ஆசைகளுடனும், அவனது இரக்கமற்ற ஆண்மையை நினைத்தும் ஒரு கணம் அப்படியே அவனுடேயே போய்விட மாட்டோமா? என்று அலமலந்து நின்ற நாச்சி ஒன்றுமே நடக்காததுபோல் லேசாக மூக்கை உறிஞ்சி ஒற்றை மூக்குத்தி பளீரிட கூடையைத் தூக்கிக் கொண்டு தெருத்தெருவாய் அலைய அவன் போட்ட பாதையை அனுசரித்து இரண்டுமுறை திரும்பி திரும்பி பார்த்தபடி அந்த பஸ் ஸ்டான்ட் கூட்டத்தில் கலந்து மறைந்தாள். அவன் ஜன்னலோரம் உட்கார்ந்து கொள்ள ஞாயிற்றுக்கிழமைக் கூட்டமெல்லாம் காலையிலேயே கரைந்துவிட்டதால் கூட்டமில்லாத அந்த பஸ் வெகு நிதானமாகவே புறப்பட்டும்கூட அவனுடன் ஒட்டி உட்காரும் அனுபவத்தைத் தரவில்லை. ஏதோ நினைத்தவன்போல் பெண்கள் பக்கம் உட்கார்ந்திருந்த அவளை அவன் "இஞ்சேவா-ஏய்!" என்றழைத்ததும் ஏதோ அடிவிழப் போகிற பயத்தோடு தயங்கித் தயங்கி வந்தாள்.

'இஞ்ச ஒக்காரு' என்று அருகில் அணைத்துக் கொண்டான். பக்கத்தில் உட்கார்ந்த அவளை கிள்ளப் போகிறானா? அடிக்கப் போகிறானா? என்ற பயம் அர்த்தமற்றதுதான் என்று அவள் உணரும் அதே நேரத்தில் அவன் வலக்கையை அவள் தோள்களைச் சுற்றி வருமாறு அவளுக்குப் பின்னாலிருந்த கம்பியிலும்

தோள்களிலுமாகப் போட்டுக் கொண்டு யாரோ ஒருவர் நிற்கவும் மறுகையால் அவளது வலது தொடையப் பிடித்து 'அஞ்ச இடிக்கப் போவுது' என்று கூறிய படியே தன்னுடன் இழுத்துச் சேர்த்துக் கொண்டான்.

அந்த பஸ் புறப்படக்கூடாது–அங்கேயே இருக்க வேண்டுமென்று காளியையும் சூரனையும் வேண்டிக் கொண்டாள் சிப்பி வெள்ளை. ஆனால் பஸ் புறப்பட்டுத்தான்விட்டது. ஒட்டி ஒட்டி ஏறிய ஜனங்கள் இவர்களைச் சுற்றிலும் வந்து நின்றார்கள்.

"ஜன்னலோரமா ஒன்ன ஒக்கார வுட்ருக்கணும்"–இம்முறை பக்கத்தில் நின்றவர் நிஜமாகவே பஸ்ஸின் அசைவில் அவள்மேல் பட்டார். பரந்தாமராஜூ மறுபடியும் அவளை இம்முறை கொஞ்சம் வலுவாகவே தன்னுடன் சேர்த்துக் கொண்டான். இதுமாதிரி செய்து அவன் நட்டாற்றில் விடுகிற அவனது பேடித்தனம் ஒரே நேரத்தில் அவளுக்கு ஆத்திரத்தையும் அழுகையையும் கிளப்பியது. அப்படியே அவன் தோள்களில்–அப்புறம் அவள் வாங்கப் போகும் அடி உதைகளைப் பற்றிக் கவலைப்படாது சாய்ந்து ஒட்டிக் கொண்டாள்.

"ஏய்! என்னாது இருக்க எடங் கொடுத்தாத் தல மேல ஏறுவ போலருக்கே?"

"ஆமா நீயி ரொம்ப எடங் கொடுத்துட்ட நானும் படுத்துப் புள்ள பெத்துட்டேன் போவியா?" ஆத்திரத்துடன் வெடித்தாள் அவள்.

"சிப்பிவெள்ள நீ சொல்றா மாதிரி எனக்கும் ஆசதான். ஆனா ராஜலக்ஷ்மி கொன்னுடுவா. அவ இல்லன்னா ராமலக்ஷ்மி. தெரியுமில்ல, அந்தப் பேய? அவ இல்லன்னா சரளா. ஏம் பொண்டாட்டியத் தவிர எல்லாக் களுதைகளும் ரெடியாத்தான் நிக்கிதுவ. எல்லாரையுங் கட்டிக்கிட்டா நானு பரதேசம் போக வேண்டியதுதான். ஒனக்கு இப்ப அளகிருக்கு. என்னா! இப்பக் கொஞ்சுற பாரு என்ன! உயிர விட்டுக்கறேன்ங்கற பாரு–இதெல்லாம் ஒரு குட்டி போட்டா காணாமப் போய்டும்–இது ஒரு வேஷம். ஒன்னப் பாத்தா எல்லாப் பயளுவளுக்கும்–கெளவனுகளுக்குக்கூட–ஒன்னப் போட்டுப் பொரட்டி எடுத்தா என்னன்னுதான் இருக்கு. ஒனக்கே தெரியும். ஆம்புளையோட பொம்பள படுக்குறது அதிலுள்ள சந்தோஷம்–எல்லாமே வேஷந்தான். போட்டுக் களட்டுனவுடனே தனித்தனியாப் போயி தனித்தனியாப் பசிக்கும். ராமலக்ஷ்மியைப்

பாத்தில்ல! பைத்தியம் புடிச்சுப் போகமாட்டேன்னு பூக்கட்டக் கூடப் போவாம ஏங் குடிசைலேயே கெடக்குறா. ஓங்க தெருவுல இருந்து வந்த இஞ்ச ஏங்கிட்ட வேலை செய்றேன்னா எல்லாஞ் சொல்றான்? நான் ஒன்ன வெச்சுருக்கேங்குறா எல்லாப் பொம்பளையும்"

சிப்பி வெள்ளை அவன் பேசியதெல்லாம் புரிந்தும்கூட "மச்சான் என்னக் கெட்டிக்காட்டியும் பரவால்ல. வேற ஒண்ணுஞ் சொல்லாத-மாட்டேங்காத. நாஞ் செத்துருவேன். என்ன வெச்சுக்க-என் உயிரே போயிரும். என்ன வுட்டுட்டீன்னா! நானு கீளச் சாதி முண்ட நாற செறுக்கின்னுதான வேண்டாங்குற"

அவன் காதுகளருகே தழுதழுத்த அவளை அணைத்துக் கண்களைத் துடைத்துவிட்ட படியே அவள் காதுகளுக்குள் சொன்னான் "இப்போ நான் ஒன்ன வெச்சுக்கிட்டு தாண்டி இருக்கேன். நாயே!" அவளிடுப்பைச் சுற்றி அவன் கைகள் இறுகின. அவள் முனகிய படியே இறுகினாள். மறுபடியும் காதுகளில் சொன்னாள் "ஆனா ஒன்ன இப்டியே வெச்சுகிட்டே இருந்திர முடியாது-உன்ன மட்டுமில்ல-நாச்சியையும் நான் வெச்சுக்கிட்டுதான் இருக்கேன். நாச்சிய மட்டுமில்ல, என்ன யார் யாரு வெச்சுக்கணும்னு ஆசைப்படறாங்களோ அவங்க எல்லாரையும் இனிமேலும் நெறைய வெச்சுக்குவேன். ஆனா அவுங்க எல்லாரையும் எனக்குன்னு ஒரு இருட்டு மூலைக்கு துணிய அவுத்து இழுத்துட்டுப் போகமாட்டேன். ஒன்னோட படுத்து பொரண்டு எழுந்திரிக்கறதுக்கு எனக்கு பத்து நிமிஷம்போதும். ஆனா உன்ன ஏற்கனவே சுத்தமா நிர்வாணம் ஆக்கிட்டேன். இது ஒன்ன மாதிரி எல்லாருக்குமே புரியாமப் போகலாம். ஏன்னா நீங்க எல்லாரும் என்ன உங்களுக்கே உங்களுக்குன்னு ஒரு முளையில கட்டிப் போட்டு என்ன கொஞ்சங் கொஞ்சமா ஒங்க குழிக்குள்ளாற பொதைக்கப் பாக்குறீங்க. ஒனக்கு நாஞ் சொல்றதெல்லாம் புரியாது. புரியவும் வேண்டாம்.

ஆம்பளையப் பொம்பளை-பொம்பளைய ஆம்பள போட்டு கசக்கி ரெண்டு பேரும் ஒண்ணாயிட முடியுமா? ரெண்டு பேராத்தான் இருக்கணும். ஒனக்கு இப்ப வேண்டியது நானில்லை. ஒரு ஆம்பிளை. இல்ல நாந்தான் வேணுமின்னா நீ தைரியமா இருந்தியானா நாம் பட்டினியால என்ன வேக்காடு போட்டுக்கிட்டுருக்கேன். பைத்தியந்தான். ஆனா நான் வேணும்னா நீயும் என்ன மாதிரி மூணுநாள் பட்டினியும் ஒரு நாள் கொலைப் பட்டினியுமா சோத்துக்கு எதிராவே இருக்கணும் என்னோட

நான் வெச்சுக்கிட்ட நெறைய பொம்பளைங்க இருப்பாங்க. நீயும் அவுங்களோட எதுக்குன்னு தெரியாமலே அல்லாடிக்கிட்டு இருக்க வேண்டியதான். என்னோட ஒடம்பு ஒன்னோட கெடக்காது. அதோட போட்டிபோடறதுக்கு ஒருத்திதான் இருக்கா. அவளோ அதுவும் வேணாங்குறா. நானும் நீயும் இப்படியே இருந்தா என்னா பிரயோஜனம்? ஒனக்கு பிழைப்பு குடுத்துட்டேன். இனிமேலும் என்னோடதான் இருக்கப் போற—என்னோடதான் வேல செய்யப் போற. அப்புறமும் நான் வேணுமின்னா நான் என்னா பண்ணமுடியும்? ஒனக்கு இதெல்லாம் புரியாதுன்னு தெரியும். ஒரே ஒரு தடவ கேட்ட ராஜலக்ஷ்மியே தெருவுல அறைஞ்சுதான் அடக்கினேன். நாந்தான் ஆம்பிளையா? அபத்தம். இப்ப நம்ப ரெண்டு பேரும் ஒண்ணா இல்லியா? இப்ப நம்ப ரெண்டு பேரும் ஒண்ணும் பண்ணிக்கல்லியா? இதவிட படுத்துப் பொரள்றது வியாதியா நம்ம மேல ஏறிடும்—நாம ஒண்ணாத்தான் இருப்போம். நீயி என்னத் தேடியும் நான் ஒன்னத் தேடியும் போய்க் கிட்டே இருக்கலாம். இது நீயி ராத்திரிக்கு ராத்திரி பாக்குற வீர தீர சினிமா இல்ல. என்னால எப்போதும் ஒனக்கு நீ எது கேட்டாலும் கொடுக்கமுடியும்—அப்டீங்ற நெனப்புபோதும்—வாரி வாரி என்னாத்தக் குடுத்துற முடியும்? புள்ளகுட்டி அப்டீன்றது இதுக்கெல்லாம் ஒரு அடையாளந்தான். ஒரொரு வேஷமாக் கலஞ்சு எல்லாம் ஆவியாப் போய்டும். ஆனா ஒருத்தர ஒருத்தர் செலுத்துற அடப்படையான இந்த என்னுடைய—நான்—எப்பவும் உனக்குத்தான்—எல்லாருக்குந்தான் என்று அவள் காதுகளுக்குள்ளேயே சொல்லிய படியே கன்னத்துக் கபோலங்களின் வழியாக கீழிறங்கிய அவனது முகம்—மின்னல் வேகத்தில் அவளது உதடுகளின் அருகில் நெருங்கி—யாரும் பாராதா—ஒரு அற்புத கணத்தை சிருஷ்டித்து—நட்ட நடுப்பகல் வேளையில் அந்த பஸ்ஸில்—அறுபத்தைந்து பாஸஞ்சர்களுக்கு நடுவில்—சிப்பிவெள்ளையை அவன் உதடுகளுக்குள் கொண்டு போய்ச் சேர்த்தது. மாரியம்மன் கோவிலில் அவளிறங்கியபோது அவளுக்கு என்ன நேர்ந்தது? என்று அவளுக்குத் தெரியவில்லை என்றாலும் அவன் அவள் காதுகளில் சொன்ன பயங்கரங்கள் நிஜம் நிஜம் என்று அப்பட்டமாய் அவளை இறுக அடித்துத் தகர்த்தன. அவள் அம்மா என்ன செய்து கொண்டிருக்கிறாள்? சிப்பி வெள்ளையின் அப்பா யார்? அவளுக்கே தெரியுமா? அவள் தங்கை அவள் தம்பி ஆகியோரின் எதிர்காலம் எத்தனை கோரம்? தினமும் அவளைக் கையால் தொட்டு நிமிண்டு விடுகிற தெருமுனைக் கடைக்காரன் வெங்கண்ணா மன்னெனன்னை

வாங்கப் போகும்போது 'எவன்ட்டீ படுத்துட்டு வர்ற?" என்று கேட்கும் அவளது ஜாதி-(ஜாதியாவது மண்ணாவது? பொறுக்கிப்பயல்கள்) தினமும் காளியாயீ கோயிலில் விபூதி கொடுத்து மெதுவாக அவளது தோள்களைத் தொட்டு 'உங்கப்பன் எங்கடீ' என்றழைக்கிற பூசாரி-இன்னும் போகும் வருமிடமெல்லாம் அவளைக் கண்ணாலேயே நோண்டி எடுக்கிற கிழவர்கள்-பஸ்ஸில் ஏறினால் பஸ் ட்ரைவர்கள்-பால் வாங்கினால் பால்க்காரன்-பூ விற்கப்போனால் கணக்கப்பிள்ளை-பொம்மை விற்கப்போனால்-எவன் மீதி? இவர்கள் எல்லாரிடமும் விபச்சாரியாகி பிறகு-கல்யாணம்-ஆசை தனக்குக் கல்யாணம் நடக்கப் போகிறதா? என்ன? பரந்தாமராஜூ சொன்னது நெஞ்சை அறுத்தாலும் 'இது எல்லாம் கலப்பற்ற நிஜம்தான்' என்று எல்லாரையும் இப்போதே ஆசைப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்-இல்லை என்று சொல்ல முடியுமா? கல்யாணம்-பிள்ளை-ஆசை-காதல்-எல்லா இழவும் சினிமாவுக்குத்தான் லாயக்கு. இதோ இப்பக்கூட பொம்மை புரட்டிப் பாக்கிற சாக்குல என்ன அந்த எதிரே நிக்கிற அயோக்கியத் தாயோலி என்ன அவுத்துப் பாத்துக்கிட்டுத்தான் இருக்கான். ச்சீ! பாவம். நானும் அவன புடிக்காமலா பாக்கிறேன். ஆனா-இது-பரந்தாமராஜூ இருக்கே அது என்ன வுட்டுடுச்சின்னா நான் என்னா ஆவேன்? ஐயோ! மூங்கிக்காட்ல தொங்கிடுவேன். அது என்ன இருந்தாப்போதும். இருந்து என்னா பண்ண? போடி மூதேவிங்கும் அடிக்கும். மிதிக்கும். அப்டியாவது கூடவே இருப்பேன். அடிக்கட்டும். மிதிக்கட்டும். என்ன ஆனாலுஞ் சரி. சாகமாட்டேன்.

# 13

விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள் ராமலக்ஷ்மி. அடுப்பிலிருந்து மீன் குழம்பு வாசனை. அடுப்படியில் வெள்ளையம்மாள். அது ஒரு மாதிரியான மீன். முத்துராஜாப் பொண்ணுகள் சாப்பிடாது. அதற்காகவே அந்த மீனை வெள்ளையம்மாளிடம் சொல்லி வயலில் ஊத்தம் போட்டுப் பிடித்த மீன். பரந்தாமராஜூவுக்கு மீனில் கவுச்சிதான் இஷ்ட்டம். மீனைவிட கவுச்சிதான் அதை தண்ணீருக்குள் வாழ வைக்கிறது என்பது அவன் கட்சி. சரளா 'எந்த மீனும் கவுச்சியால்தான் மீனாக இல்லை'–என்று உதாரணத்துக்குத் தன்னையே உதாரணம் காட்டுவாள். பரந்தாமராஜூ அவளைப் பதினெட்டு வயதிலிருந்து பார்க்கிறான். அவள் ஒரு கவுச்சியில்லாத மீன்தான். அவளை அவன் அப்பா இன்னும் சுத்தக் கவுச்சி இல்லாமல் ஆக்கிவிட்டார். ஏறத்தாழ ஒரு சாஸ்த்ரோக்தமான ப்ராம்மண வேஷம் கட்டி தன் ஸ்டுடியோவுக்குக் கொண்டு போய்விட்டார். அவளை மீன் என்று உணர வைத்தவன் பரந்தாமராஜூ. விடலைப் பையனாக அவன் அவளைப் படுத்தியபாடு கொஞ்ச நஞ்சமல்ல. வீட்டில் எப்போது மீன்குழம்பு என்றாலும் அப்பாவும் சரளாவும் வீட்டை விட்டு வெளிநடப்பு செய்து விடுவார்கள். காரணம் இந்தக் கவுச்சிதான் சரளாவை அப்பாவுடன் சேர்த்து கேவலமாகப் பேசித்தான் அவளை–அவன்

மீனென்று-உணர வைத்தான். பரந்தாமராஜுவோடு சேர்ந்து எப்படி மாறிப் போனாள்-முழுக்கவுச்சியாக! அவனுக்கே அது ஆச்சர்யம்தான். தஞ்சாவூர்ப் பெரிய கோயில் ப்ருஹதீஸ்வரர் லிங்கத்துக்குப்பின்னால் சுழலும் சூரியப் ப்ரபை ஒன்றை மிக நவீனமாகச் செய்து தரச் சொல்லி ஆறாயிரம் ரூபாய்க்கு ஆர்டர் வாங்கி வந்து விட்டிருக்கிறாள் சரளா. ஏறத்தாழ அவனை உந்தித் தள்ளும் வேலையை சரளாதான் செய்து வருகிறாள். அவனுடன் மணிக்கணக்காக உட்கார்ந்து பேசி அவனை மெதுவாக வேலைக்குச் சம்மதிக்க வைக்கிறாள். ஜம்னாவைப் பற்றி அவனது கலை பற்றி இன்னும் அவனைச் சுற்றி இருக்கும் எல்லாவற்றையும் பற்றி, அவனுடன்விடாமல் வாதாடி அவனை ஒரு மஹாராஜாவாக ஆக்கி வைத்திருந்தாள். இந்த மாற்றம் விபரீதமாக இருந்தது. மறுபடி மீனின் கவுச்சிதான் ஞாபகம் வந்தது. வெள்ளையம்மாள் அந்தத் தேளி மீன்குழம்பை தோலை உரித்து பூண்டு, மிளகு எல்லாம் சேர்த்து விளக்கெண்ணை ஊற்றித் தாளித்து பொற்றலைக் கையாந்தரை சாறு ஊற்றி அந்தக் குழம்பை பரந்துவுக்காகச் செய்து கொண்டிருந்தாள். சரளாவை வெள்ளையம்மாள்தான் நன்றாகப் புரிந்து கொண்டவள். காரணம் வெள்ளையம்மாளும் ஒரு கவுச்சி இல்லாததால் அவன் அடித்து விரிட்டினானா? என்பது யாருக்கும் தெரியாது. பூக்கட்டுகிற பெண்களோடு அவளும் வந்து சேர்ந்ததில் ஆரம்பத்தில் யாருக்கும் பிடிக்கவில்லை. ஆனால் அவள் பறத் தெருவிலிருந்து வந்தவள் என்பதில் எல்லோருக்கும் ஓர் ஒவ்வாமை இருந்தது. அந்த வெள்ளையம்மாளை-தொட்ட தொன்னூறுக்கும்-கூப்பிட்டு வீட்டுக்குள் ஒருத்தியாக ஆக்கியவன் பரந்தாமராஜு. காரணம் அந்த மீன் கவுச்சிதான். வெள்ளையம்மாள் பதினெட்டு வயதுக்குமேல் தாண்டாத பெண். பார்த்தால் முப்பது வயது தோற்றம். தலையில் நிறையப் பூ வைத்திருப்பாள். அந்தத் தெருவில் பல இளவட்டங்களும் முன்பே அவளை பழகி இருந்தார்கள். நாலு கருக்களை ரகசியமாகக் கழுவிவிட்டதாகவும், பூக்காரத் தெருவில் சொல்வார்கள். இப்போது அவள் பரந்தாமராஜுவுக்கு. அப்படி ஒரு ராசி. யார் சொன்னார்கள் யாருக்கும் கவுச்சி பிடிக்காதென்று?

வெள்ளையம்மாள் பரந்தாமராஜுவின் தலைமைச் சமையல்காரி. ஜம்னா வீட்டில் இருக்க மாட்டாள். சமைக்கிற வேலையை பல நேரங்களிலும் கருப்பு செய்வாள். கூடவே இருக்கிற வேலையைச் சரளாவும் ராஜலக்ஷ்மியும் செய்ய வீடு கலகலப்பாக இருந்தது. குடிசையைப் பூட்டுவதே இல்லை. ஏதாவது கவுச்சி

வேண்டுமென்றால் அதைப் பிடிக்கிறதிலிருந்து ருசியாக செய்து போடுகிற வரை வெள்ளையம்மாள்தான் பொறுப்பு. காலையிலேயே மண் கலயத்துடன் இன்னைக்கு நண்டு, ஊத்தங்கால் மீன், கெளுறு, என்று தூங்கிக் கொண்டிருக்கும் சோம்பேறியான பரந்தாமராஜூவின் முதுகைத் தட்டிச் சொல்லிவிட்டு அப்போதே சமையலறையில் புகுந்து கொள்வாள். மத்யானமோ இரவோ நேரங் கெட்ட நேரத்திலோ எப்போது பரந்தாமராஜூ வந்தாலும் அவன் வரும் வரை இருந்து சோற்றைப் போட்டு செழும்ப அவன் குழம்பூற்றி பிசைந்து நாக்கைத் தட்டி சாப்பிடும் வரை-சாப்பிட்டு முடியும் வரை-இருந்து அவனுடன் கொஞ்ச நேரமாவது ஊர்க்கதை பேசிவிட்டு, அப்புறம் அவனுடேயே மெல்ல நடந்து பறத்தெரு வரை-சில நேரம் அங்கே அவள் குடிசை வரை-அவள் குடிசைக்கு முன்னர் கொஞ்ச நேரமும் நின்று வம்பளந்து விட்டு, வருவான் என்பதுதான் இந்தக் கவுச்சி விஷயமே. பளபளவென்று வெங்கலப்பானை போலிருப்பாள். அவள் மேல் எல்லோருக்கும் ஆசைதான். அதென்னவோ எல்லா மனிதர்களுக்கும் ஒவ்வொரு மனிதரையும் பிடிக்க மாட்டேன் என்கிறது. வெள்ளையம்மாளுக்கு எந்த ஆம்பிளையையும் பிடிக்காது. அவளது வாழ்க்கையின் ஏமாற்றம் அவளைக் கடுமையாக மாற்றிவிட்டது. பரந்தாமராஜூ அங்குள்ள பெண்களுக்கு பெரிய கவர்ச்சியாக இருந்ததற்குக் காரணம், இந்தக் கவுச்சிதான். அந்தத் தெருவில் ஆண்கள் எல்லாரும் உடுத்தாத முறையில் உடுத்தி-திரியாத முறையில் திரிந்து-போகாத வழிகளிலெல்லாம் போய்-எல்லோருடனும் உலவும் கவுச்சியாய், அங்கிருந்த யாரையும் ஒதுக்காமல் பழகி வந்ததால்தான் வெள்ளையம்மாளுடன் அவன் கொண்டிருந்த உறவும், எல்லோரும் பொறாமைப்படுகிற உறவுதான். ஆனால் வெள்ளையம்மாளுக்கு அவன் கவுச்சி பிடிக்காது. அவள் வினோத வினோதமான மீன்களை வயல் பிரதேசங்களில் போய்ப் பிடித்து வருவதுடன் சரி, குழம்பு வைத்து அவன் சாப்பிடுவதைப் பார்த்து சந்தோஷப்படுவதுடன் சரி. அவனுடன் பேசி இரவு பத்து மணிக்குமேல் அவன் துணையுடன் வயல் வரப்போரமோ, ரயில்வே தண்டவாளம் வழியோ, பறத் தெருவுக்கு போகும் வரை அப்படி மகிழ்ந்து போய் கும்மளிக்க அவர்களிருவருக்கும் என்ன விஷயம் இருந்தது என்பது பரந்தாமராஜூவுக்கே புரியாது. அவன் புரிந்து கொண்டது இப்படித்தான். அவளுக்கு கவுச்சி மட்டும் வேண்டாம். ஆனால் பரந்தாமராஜூ வேண்டும். ஆறு மாதங்களுக்கு முன்னாலிருந்துதான் இந்தத் தெரு ஜம்னாவால் அவனுக்குக் கிடைத்தது. எத்தனை பேர்? எத்தனை பேர்? ஜம்னாவைக் காணோம். வெள்ளை அம்மாள் அவனுடன் பேசும்போது

கண்களாலேயே அணைத்துக் கொள்வாள். ஆச்சர்யமாக இருக்கும். இந்த–அவள் சமைத்த மீன் குழம்பை–அவள் தொடாதது மட்டுமல்ல அவன் உபவாசம் இருப்பதாகக் கேள்விப்பட்டால் கொண்டு வந்த மீனை அப்படியே கொல்லைக் கிணற்றில் கவிழ்த்து விடுவாள். சரளாவின் முயற்சிகளால் பரந்தாமராஜூ ஏதாவது தஞ்சாவூர்க் கோயில்களுக்கு சுவாமி வாகனம் ரிப்பேர் செய்யப் போகும் போதெல்லாம் துணைக்கு அவனுடன் வெள்ளையம்மாளை அனுப்புவது வழக்கமாகிவிட்டது. வெள்ளையம்மாள் அந்த வாகன வேலையில் ஓரளவுக்கு சரளாவால் தயார் செய்யப்பட்டுவிட்டாள். ஒரு முறை கும்பகோணம் சாரங்கபாணிக் கோயில் கருடாழ்வாரைப் பிரித்து திருப்பி ரீமோல்டிங் செய்தபோது வெள்ளையம்மாள் மூன்று நாளும் அவனுடனேயே இருந்து அவனுக்கு உதவினாள். இன்றைக்கு ஜம்னா காலையில் போகும் போதே வெள்ளையம்மாள் வந்துவிட்டாள். 'இன்னிக்கி என்னா மீன் கொண்டு வந்துருக்கே? உவ்வே' என்று ஓங்கரித்து அவளைக் கிண்டி விட்டு, வேலைக்குப் போய்விட்டாள். சரளா அவசர அவசமாகக் குளித்து விட்டு ஒரு கதர் சுற்றிக் கொண்டிருந்ததை பார்த்தபடியே பரந்தாமராஜூ விழித்தான். தலைமாட்டில் இருந்த ராமலக்ஷ்மியை சரளாவும் பரந்தாமராஜூவும் பார்க்கவில்லை. அல்லது மறந்துவிட்டார்கள். 'ஏமிண்டி–லேவண்டி–கண்ட்டா எந்த்த அவுந்துந்தி! லேய்" என்று கூறியபடியே அவனைக் காலால் உதைத்தாள். உதைத்த பின்னர்தான் ஜம்னாவின் சிலைகளின் திரைக்கப்பால்–அது அவன் தலைமாட்டுப் பக்கம்தான்–உட்கார்ந்து கொண்டிருந்த ராமலக்ஷ்மியைப் பார்த்தாள், அவள். அவனை உதைத்ததின் அந்யோன்யம் ராமலக்ஷ்மியை ஒன்றும் செய்யவில்லை. உதைக்குப் பதிலாய் பரந்தாமராஜூ விண்ணென்று எழுந்து கண்டபடிக் கடித்து முத்தமிட்டான் என்பதுதான் அவளுக்குள்–ராமலக்ஷ்மிக்குள்–எத்தனை பயங்கரமான ஓலங்களை எழுப்பியது என்பது யாருக்கும் தெரியாது. அப்பொழுதிலிருந்து ராமலக்ஷ்மி அழுது கொண்டிருக்கிறாள். சரளாவுக்கு சமீபகாலமாகவே ஒருவிதமான குறும்புத் தனம் இருந்து வருகிறது. அதற்குக் காரணம் ஜம்னாதான். திரும்பத் திரும்ப சரளாவை பரந்தாமராஜூவை கொஞ்சங் கொஞ்சமாக எங்காவது அழைத்துச் சென்று விடும்படி தூண்டி வருவதுதான் இந்த வழிதலுக்கும் குப்புற விழுதல்களுக்கும் காரணம். பரந்தாமராஜூவுக்கு இவர்களைத் தேற்றிக் கொண்டிருக்க எப்போதும் நேரமிருந்ததில்லை. இது ஒரு தப்பா?

சரளா திரும்பித் திரும்பிப் பார்த்தபடி பயந்து பயந்து குடிசைத் திண்ணைக்குப் போனாள் ராமலக்ஷ்மி. அவளையே பார்த்துக்

கொண்டிருந்தாள். சரளா ராமலக்ஷ்மியையும்-ராமலக்ஷ்மி சரளாவையும் மிகச் சரியாய் புரிந்து கொண்டிருந்தார்கள். பரந்தாமராஜூ தன் உதடுகளை ராமலக்ஷ்மியின் உதடுகளோடு சேர்த்து அவளை-மூச்சை-உயிரை உறிஞ்சியதுபோல் அவள் எச்சிலை உறிஞ்சினான். அந்த அடாவடிச் செயல் ராமலக்ஷ்மிக்கு தலைதெறிக்க கோபத்தைக் கிளப்பினாலும், அவனது காலை நேர கவுச்சியுடன் கூடிய உதடுகள் சிறிய சிறிய புளிப்பான திராக்ஷைப் பழங்கள் போல அவளுக்கு கோபத்தை நசுக்கி அடித்தது. சரளாவின் துரோகம் அவளை அதிரச்சியுறச் செய்தாலும் ராமலக்ஷ்மியை ராஜா பரந்தாமராஜூ வெகு ஆரம்பத்திலேயே சிறை செய்து போட்டுவிட்டான். அவன் என்ன மனிதன்? என்ன யோக்யதை? அது ராமலக்ஷ்மியின் நீண்ட நாளையக் கேள்வி. என்றாவது ஒருநாள் அவளுக்கு அவள் கேட்ட குழந்தையைத் தருவதாக அவன் சொல்லி இருந்தாலும் அதற்கான முஸ்தீபே அவனிடம் இல்லை. அவன் எல்லோரையும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறான். ஆனாலும் யாராலும் ஏமாறாமல் முடியவில்லை. காரணம், அந்தப் பெண்கள் எல்லோருக்குமே வாழ்க்கையின் எந்தெந்தப் பருவத்தில் எது எது கிடைக்க வேண்டுமோ, அவைகள் மறுக்கப்பட்டுவிட்டன. அங்குள்ள பெண்களுக்கு அங்குள்ள ஆண்கள் இந்தப் பெண்களை வெகு சீக்கிரம் பள்ளத்தில் தள்ளி விடுவார்கள். பள்ளம் அவர்களை மூடி விடும். தாலி கட்டின நாலு நாள்-ஒரு மாதம் மிஞ்சினால் மூன்று மாதம்- அதற்குப்பின் அவர்களது கணவர்கள் அங்கிருக்க மாட்டார்கள். பரந்தாமராஜூ அங்கிருந்த ஆண்களை எல்லாம் தஞ்சாவூர்ச் சித்ரப்பட வேலைக்குப் பயிற்சி தர-முயன்றான். அவர்கள் இந்த வேலைக்கு ஓரளவுதான் தயாரானார்கள். ஆனால் பெண்கள் அப்படியல்ல. பரந்தாமராஜூ அவர்கள் எல்லாருடனும் மிகச் சுலபமாக இணைந்துவிட்டான். சரளாவை அதற்குப் பழக்கினான். ஆறு மாதம்-ஏழு மாதத்துக்குள்-அங்கிருந்த பெண்கள் அதற்குத் தயாராகிவிட்டார்கள். எல்லாப் பெண்களின் உணர்ச்சிகளையும் அவன் தூண்டினான். ஒவ்வொருத்தியையும் தனிமையில் கொண்டுபோய் நிறுத்தி பசியாலும்-ஏழ்மையாலும்-நோயாலும்-சமுதாயப் பிடிகளாலும்-சழக்குகளாலும்-மரத்துப் போயிருந்து அவர்களின் பெண்மையைக் குத்திக் கிளறினான். தஞ்சாவூர் அரண்மனையில் அவன் கண்ட உயர் ஜாதி மராட்டி பெண்களிடம்-இந்த கலையுணர்வு ரத்தத்தோடு எழும்பும். ஒவ்வொரு அடிமை ஜாதிக்குமே உரித்தான காமம்-கலையுணர்வாக வெளிப்பட்டதில்லை. பரந்தாமராஜூ வெறும் சித்ரப்பட சைத்ரீகனல்ல. அவன் ஸ்த்ரீலோலனும் அல்ல.

அவன் ஏழ்மைப்பட்ட இந்த மக்களின் ரத்தத்தில் கலந்திருக்கும் மிகப் புராதனமான மிக முரட்டுத்தனமான, ஆனால் மிக அற்புதமான அவர்களே அறிந்து கொள்ளமுடியாத கலையை வெளிப்படுத்தக் காமத்தை ஒரு கருவியாக அவர்களிடையே ஊன்றி அவர்களை விளைவித்தான்—என்பது யாருக்கும் எப்போதும் எக்காலத்திலும் புரியப் போவதில்லை. சரளா உட்பட அவனுக்குப் பயந்தார்களே தவிர, அவனை அறிய முயலவில்லை. பரந்தாமராஜூ தன்னை வெளிக்காட்டிக் கொள்வதில் புற்றிலுறையும் பாம்பாக இருந்தான். ஜம்னாவுக்கு மட்டும் இது தெரிந்ததால்—அறிந்து கொண்டுவிட்டதால்—அவள் அவனிடம் சிக்குவதே இல்லை. சரளாவும் ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து விழுந்துபோனாள். அங்கிருந்த பெண்களின் உதவியால் ப்ரும்மாண்டமான கண்ணாடி ஓவியங்களை அந்தப் பெண்களைக் கொண்டே தஞ்சாவூரில் சுப்ரமண்யர் கோயில்—பூக்காரத் தெரு முருகன் கோயில்—கீழவீதி வரதராஜப் பெருமாள் கோயில்—எல்லையம்மன் கோயில் தெரு எல்லையம்மன் கோயில்—இவைகளிலும், பழைய புராதன பத்ததிகளையும் மரபுகளையும் உடைத்துச் சிதறடித்துப் புதிய கலையை அந்த பெண்களிடமிருந்தே உந்தி வெளிக் கொணர்ந்தான் என்பது அந்தப் பெண்களுக்கும், அவனால் கிளர்ந்தெழுந்த காமம்தான் அதற்குக் காரணம் என்று அந்த ஓவியங்களை வானளாவப் புகழ்ந்து கொண்டிருக்கும் எல்லா ஆங்கில—ஜெர்மனிய ஃப்ரெஞ்ச் விமர்சகர்களுக்கும் தெரியாது. எல்லை அம்மன் கோயில் தெரு கோயில் மேல்விதானம் முழுவதும் கோபிகளுடன் கலந்து நிற்கும் கிருஷ்ணனையும் நூறு கோபிகா ஸ்திரீகளையும்—புராதனமான சித்ர முறைகளைக் கைவிட்டு கண்ணாடி ஒட்டுகளின் விசித்ர கட் க்ளாஸ் முறையினால் ராமலக்ஷ்மியும் சிப்பி வெள்ளையும் மட்டுமே அந்த அற்புதமான புதிய ஓவியத்தை அந்த விதானம் முழுதும் சாதித்தார்கள். விதானத்தை நிமிர்ந்து பார்க்கும் யாரும் ஏதோ ஒரு பெண் தன்னை அணைத்துக் கொள்வதான உணர்ச்சியால் கிளரப்படுவார்கள். சற்றே உற்றுப் பார்த்தால் பட்டை பட்டையான நீலக் கண்ணாடிகளின் மூலமும், சிவப்புக் கண்ணாடிகளின் மூலமும்தான் பார்த்த பெண் கோபி அல்ல—அதுவே கிருஷ்ணன் என்ற திடும்மென்ற உணர்வு பெறுவார்கள். சற்றே கூர்ந்து பார்த்தால் அதில் காணும் ஒவ்வொரு பெண்ணும் கிருஷ்ணனில் புகுவதான மிக நவீனமான மாடர்ன் ஆர்ட்டின் குறியீடுகளும் யோனியின் எண்ணமற்ற ஒன்றின்மேல் ஒன்றான நவீன காலத்தின் பிரச்சனைகளை நினைவூட்டும் இருண்ட கறுப்புக்

கண்ணாடிகளின்மூலம் சித்திரிக்கப்படுகிற முடியடர்ந்த ஆழ்ந்த ரத்த நிறம் காட்டும் ஆண்மையின் விரைத்த குறிகளும் யாரையும் அவ்வளவு லேசில் கண்டு கொள்ளவிடாது.

வாழ்க்கையில் எந்தக் கலையும் தெரியாத, எந்த நுண்ணுணர்வும் படிப்பறிவும் இல்லாத, அந்தப் பூக்கட்டுகிற ஜாதிப் பெண்களை உலுப்பி விடுகிற காரியத்தை அவர்களின் பசியை மாற்றுவதின் மூலமும், அவர்களின் மிக இயல்பான தவறுகளைக் காமத்தின்மூலம் (அவர்களை நீதிநூல் கற்பித்து ஒடுக்காமல்), அவர்களின் அதே காமத்தால்–அதே தவறுகளால்–அவர்களை மண்ணிலிருந்து மேலெழுப்பி மிக உயர்ந்த சைத்ரீக களத்துக்கு–சொல்லப்போனால்–உலக ஓவியர்களின் தரத்துக்குக் கொண்டு போய்விட்ட பரந்தாமராஜூ இனி அந்தப் பெண்கள் தாங்களாகவே தங்கள் உள்ளுக்குள் பொருமும் ஆசைகளை, அறிவை உலகை, உலகின் எல்லாத் தளத்து அசிங்கங்களை நொறுக்கி ஒவ்வொருத்தியுமே தனக்கென்று எல்லாக் காமமும் பொருந்திய ஒரு புதிய ஓவிய உலகை நிர்மாணிப்பார்கள் என்று தீர்மானித்தான்.

அவன் அணுகுகிற ஒவ்வொரு பெண்ணும் அவனை விரும்பிப் போய்விடுகிற மன்மத லீலை அவனது இந்த அபூர்வமான அறிவால்தான் என்பது யாருக்கும் தெரிய நியாயமில்லை. ஜம்னா அவனது இந்த குரூரமான விளையாட்டை பயிற்சியாய் அறியாததால்தான் அவனை விட்டு ஓடிக்கொண்டே இருக்கிறாள். ராமலக்ஷ்மிக்கு அவள் என்னவாக ஆகியிருக்கிறாள்? என்பது இந்த ஏழெட்டு மாதங்களில் அவளுக்குப் புரியத்தான் இல்லை. ஆனால் ஒவ்வொரு முறையும் அவள் மாமனின் பலிபீடம் அவளை மென்மேலும் இறுகடித்தது. அவள் கல்யாணம் வெகு சீக்கிரம் நடக்கும் என்றார்கள். மூன்று மாதம் அதற்குப்பின் அவள் மாமன் அந்தத் தெரு ஆண்களைப் போலவே மனைவியைப் பற்றி அதிகம் கவலைப்படாமலேயே போய் விடுவான் என்பது அவளுக்குத் தெரியும். ஆனாலும் அந்த மூன்று மாதங்களும் அவள் தனது சைத்ரீக உலகத்திலிருந்து விழுந்துவிட மாட்டாள் என்பது பரந்தாமராஜூவுக்கு மட்டுமே தெரியும். ஆனாலும் எப்போதும் போல அவர்களை அடிமைகளைப் போல பிழிந்து வேலை வாங்கிக் கொண்டிருந்தான். ஜம்னா இவைகளைப் பற்றியெல்லாம் அறியாத தனது மூலத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தாள். இரவு யாருடனாவது பரந்தாமராஜூ சேருவது என்பதோ, பிரிவதோ சாத்தியமே இல்லாமல் இருந்தது. இன்று

சரளா அவனை உதைத்தது அவனுக்குள் எங்கோ ஒடுங்கிக் கிடந்த அவனது க்ரியா சக்தியைத் தட்டி எழுப்பிற்று. ஆனால் அதன் பயனை அவன்–சரளாவிடமிருந்தல்ல–ராமலக்ஷ்மியிடமிருந்துதான் அனுபவிக்க வேண்டி வந்தது. ராமலக்ஷ்மி போய்விடப் போகிறாள் என்று அவன் எண்ணியதே இல்லை. ஆனால் அவள் ஒவ்வொரு கணமும் பயந்து கொண்டே இருந்தாள். அந்தக் குடிசையின்–நிறைய சிதிலமடைந்த கீற்றுகளின்–இடுக்குகள் நிறைந்த வட்டங்களோடு அவர்கள் இருவரையும் மூடிவிடாதா–பகல் நேரம்? தலையணையில் சரிந்து அவனுக்குக் கீழே ஆழத்தில் புதைந்து சரளாமேல் ஏற்பட்ட ஆத்திரத்துடன் முழங்கால்களை மடக்கி, பிருஷ்டங்களில் குதிகால்களை அழுத்தித் தன்னை மேலெழுப்பி தன் காமத்தின் நுழைவாயிலை அவனுக்குத் தர முனைந்தாள். புளிப்பு திராட்சைப் பழங்கள் மீண்டும் அவள் உதடுகளில் நைந்தன. வெளியிலிருந்து லாசருவின் மனைவி ரபேக்கா–"அண்ணே! அண்ணே" என்று கூப்பிட்டாள். பக்கத்திலிருந்த–கொடியாக தொங்கிக் கொண்டிருந்த ஜம்னாவின் சேலைகளை கோபத்துடன் ஒரு கையால் இழுத்து தங்கள் மேலே விழும்படியாக குவியலாக மறைத்துக் கொள்ள இருவரும் இறுகிக் கிடந்தாலும் கலங்கவில்லை. சமையலறையில் இருந்து வியர்வையுடன் வெளிப்பட்ட வெள்ளையம்மாள் வாசலில் நின்ற ரபேக்காவிடம்"ஏங்கா? மச்சான் இல்லியே! என்னா வேணும்?" என்றாள்.

"ஏஞ் சொந்தக்காரப் பொண்ணு ஒண்ணு சித்திரப் படம் பண்ணக் கத்துக்க வரேங்கிது. கூட்டியாரலாமாண்ணு அண்ணங்கிட்டக் கேக்கலாமுன்னு பாத்தேன்"

"மச்சான் இல்லீல்ல. அது பர்மா பஜார்ல முனியாண்டவரு கோயில்ல வால்முனி படம் பண்றதுக்கு போயிட்ருகு. அஞ்ச போனாப் பார்க்கலாம்" என்றாள் வெள்ளையம்மாள். "இந்தக் குட்டி ராமலக்ஷ்மி எஞ்ச? அதுக்குக் கலியாணமாமில்ல" என்றாள் ரபேக்கா" "அதுக்கென்ன? எல்லாருக்குந்தாங் கலியாணம் நடந்துக்கிட்டே இருக்கு. கலியாணம் பண்ணி குடிபோயி எவ வாள்ந்தாங்குற? ஒரு வருஷம், ரெண்டு வருஷம். ஆணோன்ன வேற எவளையாவது கோத்துக்குவானுங்க."

"ஏன்டி அப்புடிச் சொல்ற. எல்லாருமா அப்பிடி? நாள்லாம் இல்லியா புருசனோட ஒளுங்கா!"

"ஆமாம் ஒம் புருசனத் தெரியாதா? சிப்பி வெள்ள ஆயி ரங்கம்மாகிட்டக் கேளு"

"நீ என்னாடி ஒளுங்கு. அண்ணன வெச்சுக்கிட்டுருக்க. தெரியாதா?"

"ஆமாம், மச்சான எல்லா செறுக்கிகளுந்தான் வெச்சுருக்கோம். போயே"

"ஒங்குளுக்கேதுடி வெக்கம்?" என்றபடியே அவள் போனாள். உள்ளே திரும்பிய வெள்ளையம்மாள் பார்த்தது, கொல்லைப்புறம் நின்று கொண்டிருந்த பரந்தாமராஜுவையும் மறுபடியும் அழுது கொண்டு உட்கார்ந்திருந்த ராமலக்ஷ்மியையும்தான். வெள்ளையம்மாள் ராமலக்ஷ்மியின் அருகே குனிந்து 'என்னாடியிது? கலியாணப் பொண்ணு-இப்பிடி அளுதுகிட்டு ஒக்காந்திருக்கக்கூடாது? இன்னக்கி நீயும் நானுந்தாம் முனியாண்டவரு கோயில்ல வால்முனி பண்ணியாவணும். மச்சான் கரிக்கோடு மட்டுந்தாம் போடும். ராத்திரி ஒரு மணி, ரெண்டு மணி வரைக்கும் நெட்டி களண்டுடும் வேல. இது பளய மாதிரிப் படமில்ல. முளுசா பொம்ம மாதிரியே செஞ்சாவணும். சுண்ணாம்பு அறக்கிறதுக்கு ஆளுங்க காலைலேயே போயிருச்சுங்க. சும்மா அளுது கிளுதுகிட்டு கிண்ணாரங் கொட்டிக் கிட்ரீந்தின்னா மச்சான் வந்துது, ஒங்கன்னம் பளுத்துடும். சீக்கிரம் எந்திரிச்சி மூஞ்சியக் களுவீட்டு மச்சானோட சாப்புட ஒக்காரு. சட்டியெல்லாங் களுவிக் கவுத்துப்புட்டு மச்சாம் முனியாண்டவரு கோயிலுக்கு சைக்கிள்ல போய்ச் சேர்றதுக்கு முந்தி நம்ம ரெண்டு பேரும் வயல் வரப்புல ஓடு ஓடுன்னு ஓடிப் போயிச் சேரணும்"

"நீ வேண்ணாப் போ. நான் வல்ல"

"அட-குட்டி நிமிந்துருச்சா? ஆமா-கலியாணம் நெருங்கியிருச்சில்ல?"

"யக்கா-வயித்தெரிச்சலக் கௌப்பாத. பேத்துப் புடுவேம் பேத்து"

"நீயி இஞ்ச பேத்துப் பெரயோஜனமில்ல. வால்முனி பண்ணனும். பாரு அஞ்ச பேக்கணும்-கண்ணாடி அறுக்கறதுக்குங் குட்டீல போயீட்டுதுவ. தெரியும்ல? எந்திரி" ராமலக்ஷ்மி எழுந்தபோது அவளது எல்லாத் தினவுகளும் உடலை விட்டு வெளியேறி இருந்தது.

"யக்கா-நான் ரெண்டு வாளி தண்ணிய வூத்திட்டு வந்துர்றேங்கா"

"யேன்டி-என்ன ஆச்சு ஒனக்கு? நேரமாவுதுங்கறேன்ல. இன்னுஞ் சாப்புட்டுட்டு பொறப்புட்டாலே அரமண்ணேரமாவும். போய்ச்சேர. இனிமே நீயி குளிச்சு-சாப்ட்டு... சரி சரி மச்சான் வருது எதாவதும் பேசிட்ருக்காதே"

உள்ளே பரந்தாமராஜூ குளித்த ஈரத்துடன் வந்தபடியே "இன்னும் நின்னுக்கிட்டே இருக்கீங்களா? இன்னக்கி நீயும் ராமலக்ஷ்மியுந்தான் வால்முனி பொம்ம முழுசையும் பண்ணப் போறீங்க. ராமலக்ஷ்மிக்குத்தாஞ் சுண்ணாம்பு வச்சு வரையணும். நீயும் இந்த தடிக்களுத-எஞ்ச அவ? இன்னுங் காணும்-சிப்பி வெள்ளையும் சாந்து வச்சு சாந்து காயறதுக்குள்ளாற பசைய இறுக்கிப் பூசியிருக்கணும். ராமலக்ஷ்மி மட்டும் இண்ணக்கி முழு பொம்மைக்கும் அவளே அவ இஷ்டடத்துக்கு கண்ணாடி கலர் பிரிச்சு அழுத்திப் பதிச்சுக்கிட்டு வரணும். ஓங்க ரெண்டு பேருக்கும் எட்டு மாசத்துக்கு மேல எல்லாத்தையுஞ் சொல்லிக் கொடுத்துருக்கேன். எதுனாச்சுங் கோளாறு பண்ணீங்க-ஏம் மூஞ் சிலயே முளிக்காதீங்க" என்று கூறியபடியே வெள்ளையம்மாளின் தோள்களைப் பிடித்து "மீனு கொளம்பு எல்லாத்தயுஞ் சோத்தோட எடுத்துக்கிட்டு அஞ்ச வந்துருங்க. எனக்கு நேரமாச்சு. ஏ களுத! ஒன்னிட்டதாஞ் சொல்றேன்" என்று ராமலக்ஷ்மியிடம் சொல்லிக் கொண்டு வெள்ளை வெளேர் என்று வேஷ்டியைக் கட்டி ஒரு ஜிப்பாவுக்குள் புகுந்து கொண்டு நெற்றியில் குங்குமம் வைத்துக் கொண்டு பத்து விரல்களாலும் கோதி விட்டுக் கொண்டான்.

ராமலக்ஷ்மிக்கு காலெடுத்து வைக்க முடியவில்லை.

அவன் சொன்னதைச் செய்துவிட்டான். எல்லா நேரமும் எல்லாரையும் ஏமாற்றிக் கொண்டிருக்க முடியுமா? பரந்தாமராஜூவின் கவுச்சி அவளை நீந்த வைத்தது. தரையிலும் நீந்துவாள் போலிருக்கிறது. அவள் தன் மாமனை நினைத்துக் கொண்டாள். வெறும் சாராய மொந்தை. இது நினைக்கும் போதே உடம்புக்குள் எல்லா நரம்புகளிலும் அக்னி சுடர்ந்தது. அவள் அப்படியே நின்றாள்.

"யேய்-பொறப்புடுன்னு சொன்னேன்? சீக்கிரம் வாங்கடி" என்று கத்திவிட்டு குடிசை வெளிய இறங்கி சுற்றும் முற்றும் பார்த்தான். சரளா எங்கே? தெருவில் இப்போது பெண்களையும் குறைச்சலாகத்தான் காண முடிந்தது.பின்புறமிருந்த சாணிக் கும்பியில் முனிசிபாலிட்டி உரக்காரர்களை அழைத்து வந்து, உரமாக விற்றுத் தள்ளி, அந்த ஐம்பது வருஷத்து சாணிக் கும்பியையும் தோண்டித் தள்ளி, அப்புறப்படுத்தி, மண் குழிகளாக இருந்த அந்தத் தெருவில், ஐம்பது வருடத்து உரம் யாவும் விற்று கலெக்டர் உதவிப்பணத்துடன் அந்த சாணிக் குப்பை இருந்த இடத்தில் சரளாவின் கீற்றுக் கொட்டகை ஒன்றைப் போட்டு தெருவெங்கும் தார் ஊற்றி, ரோடு போட்டு அந்தச் சேரியில்

'ஸ்கூல் ஃபோர் தஞ்சாவூர் கட்க்ளாஸ் ஆர்ட்' (தஞ்சாவூர் சித்ரப் படம் பள்ளி) தொடங்கி இருந்தாள். பள்ளியில் படிக்க யாரும் உடனே வரவில்லை. சரளா பரந்தாமராஜூவை எங்கெல்லாம் உந்தித் தள்ளி வெளியே கொண்டு போய்விட வேண்டும் என்று முயன்றாள். பரந்தாமராஜூ வழக்கம்போல் இந்தப் பள்ளிக்கூடத்துக்கும் வருவதில்லை. வந்து சேர்ந்த கொஞ்சம் பேரிடமும் சரளாவும் ராஜலக்ஷ்மியும்தான் ஏதோ சொல்லிக் கொடுக்கிறோம் என்ற பேரில் கூச்சல் போட்டுக் கொண்டிருந்த பெண்களை அட்டெண்டென்ஸ் எடுத்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் பள்ளிக்கூடத்திலிருந்து இப்போதும் கூச்சல் கேட்டுக் கொண்டிருந்தது பரந்தாமராஜூவுக்கு சிரிப்பாக இருந்தது. சைக்கிளை உந்தித் தள்ளி மண் ரஸ்தாவில் இறங்கி பர்மா பஜாரில் வயல் நடுவே இருந்த முனியாண்டவர் கோயிலை நோக்கிப்போன சிறிது நேரத்துக்கெல்லாம் சீவி மினுக்கி வரிந்து சுற்றிய சேலையுடன் பளிச்சென்று வயல் வரப்புகளில் இறங்கி வெள்ளையம்மாளும் ராமலக்ஷ்மியும் நடந்தனர். வெள்ளையம்மாளின் கையில் எவர்சில்வர் தூக்குச்சட்டி-ராமலக்ஷ்மியின் கையில் போஜனப் பாத்திரம் தொங்கி ஆடின. ஒரு மைல் தூரம் நடந்திருப்பார்கள்.

"ஏண்டி ராமு-மச்சாந் துணிக்குள்ள மூடி என்னாடி ரகசியஞ் சொல்லிச்சு? அப்பே புடிச்சுப் பாத்துட்டு வாரேன். உம்முனு வர்றே ஒண்ணும் பேசாம."

"ஒண்ணுஞ் சொல்லலக்கா."

"யேய்-ஏன்ட்டப் புளுவாத. நட்ட நடு வூட்டுல எவ்வளவு நேரங் கெடந்தீங்க"

"தெனேய்க்கும் மச்சான் தண்டவாளத்து வளியா ஒங்க தெருவுக்கும் கூட்டீட்டுப் போறியே. அப்ப மச்சான் ஒண்ணுமே பண்ணாதா?" என்றாள் ராமலக்ஷ்மி கண்கள் விரிய.

"யே களுத! மச்சானப் போயி அப்பிடியெல்லாஞ் சொல்லாத. அது எனக்கு வால்முனி மாதிரி. அது இந்தத் தெருவுல காலடி வெச்ச நாளாத்தான் இஞ்சருக்குற பயலு வளுஞ் சரி-பொட்ட செறுக்கிவளுஞ் சரி-வாய நீட்டுறதில்ல-ஓட்டுறதில்ல. யே களுதேய்! என்ன மச்சான் 'ந்தா'ன்னு சொடக்குப் போட்டுக் கூப்ட்டுச்சுன்னா அதும் பின்னாலியே ஓடறதுக்கு நானு ரெடியா இருக்கேன். ஆனா அது என்னோட வால்முனி. என்னெக் கெட்டுனவனும்-என்னெப் பெத்துவனுஞ் சந்திக்கரயில என்னெ வித்தப்போ, மச்சான் நூத்தம்பது ரூவா கொடுத்து வாங்குன ஒடம்புடீ இது!

எங்க தெருவுப் பயலுவோ சுத்திச் சுத்தி வந்தானுவோ. எல்லாப் பயலுவளுக்கும் பொம்பள வேணும்-கலியாணம் பண்ணாச் சும்மாக் கெடைக்கும். எங்க ஜாதீல இன்னும் பொம்பளய விக்கிறான்-வாங்கிறான்-போலீசுக் காரனுவகூட வாங்குறான்-எங்க பயலுககூட விக்யிறாம் பொம்பளைய. அடகுபோன எடத்துல அடகு வாங்குனவனும் வட்டியாப் புள்ள குடுக்குறான். சாக்கடெ மேட்டுல எங்கப்பனும் புருசனுங் குடிச கட்டிக்கிட்டு, வேற பொம்பளைய வெச்சுக்கிட்டானுவோ. அப்பத்தாம் மச்சான் என்னெ வாங்குச்சு. நூத்தம்பது ரூவா தானு. அண்ணக்கிதான் நான் பூக்காரத் தெருவுக்குள்ற வந்தேன். இத்தன நாலு மச்சான் என்னெ வெச்சிருந்தாக் கூட எனக்கு இவ்வளவு சந்தோசமிருக்காது. அது என்னோட ஐயனாருடீ-என் வாலுமுனீ-நம்ம தெருவு சூரன்"

"நானு என்னா சொல்லீட்டேன்னு நீயி இப்புடிக் கத்துற. எல்லா செறுக்கிகளுந்தாம் மச்சாம் மச்சான்னு சுத்தி சுத்தீ ரவுண்டு அடிக்கிறாளுவன்னா இந்தப் படிச்ச முண்ட சரளா நாயிகூட மச்சானுக்குக் குளி வெட்டுது. 'உஸ்கூல்' ஆரம்பிச்சுருக்கு. இன்னக்கிக் காலைல பாத்தீல்ல ஊட்டுக்குள்ளாறயே அவுத்துப் போட்றுவா போல இருந்திச்சு அவ"

"இப்ப என்னா? ஓம் மாமன வுட்டுட்டு மச்சானக் கட்டிக்கப் போறியா? போடி போடி போக்கத்தவளே. மச்சான் எவளெயும் கட்டிக்காது. அது இப்பிடியேதாந் திரியும். ஆனா அது யாரையுங் கெடுக்காது. அது பேச்சக் கேட்டாலயே கெட்ட புத்தி இருந்தாக்கூட நல்ல புத்தியா மாறிப் போவும். ஒரே ஒரு கெட்ட கொணம், சகட்டு மேனிக்கு மூக்கு மேல கோவம் வந்துடும். எதுர எவ இருந்தாலும் பளிச்சனு கைய நீட்டீரும். மொரடு. ஒரு கை அறையின்னா ஒரு மாசத்துக்குத் தாங்கும்"

வயலில் குரவைகள் துள்ளாட்டம் போட்டன. மணலில் சொருகி சொருகி மீண்டும் தண்ணீர் மட்டத்துக்கு நீந்தி வாலைச் சுழற்றும் மீன்கள் பளபளத்தன. தூரத்தில் முனியாண்டவர் கோயில்-எடுப்பாக மரங்களுக்கிடையே தெரிந்தது. இருவரும் வியர்க்க விறுவிறுக்க வரப்பின்மேல் திங்குதிங்கென்று ஓடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கே தெரியாத வேகமொன்று அவர்கள் உடம்பில் புகுந்து கொண்டு வெறியாடியது. மீன் கவுச்சியைப்போல் அவர்களுக்கே சுகமாகத்தான் இருந்தது. எதிரே முனியாண்டவர் கோயில் வரப்பில் சிப்பிவெள்ளை பரந்தாமராஜுவின் மேல் உரசியபடி சுண்ணாம்புக் கலவையைக் கரைத்து வடித்துக் கொண்டிருந்தாள்.

# 14

வயல் வரப்பின் உஷ்ணக் காற்று குறைந்து விடியற்காலையில் முதல் காற்று குளிராய் வீசத் தொடங்கிவிட்டது. மணி இரவு மூன்றிருக்கலாம். எதிரே பள்ளத்தில் வெட்டிய வட்டமான குழியில் பெரிய கல்ரோதை உருண்டு ஐம்பது வருஷங்களுக்கு முன்பு மனிதர்கள் வீடுகட்ட அரைத்த சுண்ணாம்புக் குழைவு போல—ஆனால் மிகத் தூய்மையாக மாவு போல சுண்ணாம்பு அந்தத் தெரு இளைஞர்கள் கையில் குழைந்து கொண்டிருந்தது—இப்போதும் பதினைந்தடி உயரத்துக்கு ஏற்கனவே கொத்தர்கள் கட்டிய கட்டுமானத்தின்மேல் இருபதடி உயரத்துக்கு (மொத்த உயரம்) ஏறத்தாழ ஆறடி கனத்துக்கு வெள்ளையம்மாள் மட்டும் தன்னந்தனியே வைத்த பூஞ்சாந்து அற்புதமாக உருவாகி இருந்தது. சுற்றிலும் படல் படலாக சதுர வடிவில் கட்டப்பட்ட சாரத்தின்மீது அந்தப் தெருப் பெண்கள் சாந்துச் சட்டியுடன் பாய்ந்து பாய்ந்து கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருக்க, சொல்கிற இடங்களிலெல்லாம் கொட்டிக் கொடுக்க, எட்டுக் கைகள் எட்டுக் கால்கள், இரண்டு புறமும் இறக்கைகள், ஒரே ப்ரும்மாண்டமான தலை, எல்லாவற்றுக்கும் உள் கற்பனையை உள்ளெலும்பாய் வெள்ளையம்மாள் அற்புதமாய் ஆச்சர்யமாய் சிப்பி வெள்ளையுடன் சேர்ந்து, ஆறுமணி நேரத்திற்கும் மேலாய்ச்

செய்திருக்கிறாள். அவள் உடம்பு முழுதும் வியர்வைக் குளியாடல். கடைச் சரக்குகளும்-மருந்துகளும்-முட்டையும்-கருப்பட்டியும் கலந்த புளியம் பசையை, தனியாக ராஜலக்ஷ்மியும் நாச்சியும் அரைத்து விறுவிறுவென்று கொடுத்தனுப்ப ஈரம் காயுமுன் சிமின்ட்டுடன் கலந்து பசை இறுகும் முன் ராமலக்ஷ்மி கீழிருந்துமேல் நோக்கி வர்ண விசித்ர ஜாலங்களாய்ப் பல நிறங்களிலும் பட்டைக் கண்ணாடிகளை வைத்து மூச்சுவிடக் கூட நேரமின்றிப் பரபரப்பாய் அவள் நினைவே இழந்து ஒட்டிக் கொண்டிருந்தாள். ஆ! அந்த அழுக்குத் துணிப் புதையல் அவளுக்கு இன்றல்லவா கிடைத்தது. நெஞ்சில் பெருமிதம் தாங்கவில்லை. பரந்தாமராஜூவின் வீர்யம் அவள் உடலெங்கும் பரவி அவள் கண்களை இறுகடித்து இப்போதும் அதே அனுபவத்தை அப்படியே அவள் ரத்தத்துடன் உஷ்ணமேற்றியது. கைகளின் வேகம் அதை அவளுக்கே காட்டியது. கொத்துக் கொத்தான கண்ணாடிப் பரல்களையும் முப்படைக் கண்ணாடிகளின் அழுத்தத்தையும் அவள் விரல்கள்-விரல்களே மனமாகி-வானத்தேறி எங்கோ போய்க் கொண்டே இருந்தது. இன்னும் மூன்று நாட்கள். அவள் மாமன் அவளை அந்த சினிமாக் கொட்டகைக்குப் பின்னிருக்கும் இடுங்கிய வீட்டுக்குக் கொண்டு போய் அங்கேதான்... இனி அதைப் பற்றி யோசித்தென்ன ப்ரயோஜனம்? அவன், அவளை இதுவரை ஒரு தடவையாவது அவள் முகத்தை-அதன் பாவைகளைப் பார்த்தறிந்ததே கிடையாது. கல்யாணம் இன்னும்தான் நடக்கவிலையே !முடியாதென்று முண்டினால் நடக்காது-விட மாட்டார்கள். வெள்ளையம்மாளை விலைக்கு விற்றார்கள். அவளை விற்றதுகூட மரியாதையான உயர்ந்த சமாச்சாரம். ராமலக்ஷ்மியை விற்கக்கூட இல்லை. விலையில்லாமல் சும்மா தூக்கி எறிகிறார்கள். வால்முனியின் ஒரு காலின் கீழே ஒரு பூதகணம் நசுங்குகிறது. ரத்தக் கண்ணாடி வர்ணத்தில் அதை ஒட்டிக் கொண்டு வரும்போதும் அந்தக் காலின் பெருவிரல் நிமிர்ந்து வான் நோக்குகிறது. நிமிர்ந்த பெருவிரலில் ஒரு நகத்தைச் செறுகுகிறாள் ராமலக்ஷ்மி. கால்கள்-தொடைகள்-எல்லாம் நவீன சிற்ப சாயலில் வெறும் துளைகளாலேயே சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. இதென்ன கால்களிலும் தொடைகளிலும் நீளமான ஓட்டை? என்று யாருமே கேட்கவில்லை. சுற்றிலும் நின்ற ஜனங்கள் வால்முனி உருவாகும் பயங்கரத்தைத் தங்கள் கற்பனையிலேயே கண்டு நின்றார்கள். சிற்பம் உருவாகும் முன்பே அந்த சிற்பத்தைத் தங்கள் மனோ தர்மத்தினாலேயே உருவாக்கி மனதில் நினைத்துப் பார்த்துக் கொள்ள அந்த எளிமை கொண்ட ஜனங்களால் முடிந்தது.

பயத்துடன் கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள். இருபதடி உயரத்தில் சாரத்தின் மேலேயே கட்டப்பட்ட எட்டடிப் பரணில் உறங்கா நெஞ்சமும்—ஓயா விழியுமாய் அங்கிருந்தபடியே கத்திக் கொண்டே அவர்கள் எல்லோரையும் ஒரு வழியாய் சரிபண்ணிக் கொண்டிருந்தான். பளபளவென்று விடிந்தபோதும் வெள்ளையம்மாள் உச்சியில் தான் நின்றாள். பரந்தாமராஜூ உள்ளுக்குள் பொங்கிய சந்தோஷத்தை யாரிடம் காட்ட? என்று தெரியாமல் சாந்து சுமந்து மேலே வருகிற பையன்களையும், குட்டிகளையும் அடித்தும் பிடித்தும் விரட்டியும் ஓட்டியும் இல்லாத அரட்டல் வேலைகளையும் செய்து கொண்டு சிற்பத்தை சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டும்—ஆங்காங்கே தொட்டுப் பார்த்துக் கொண்டும் இருந்தானே தவிர, வேலையை நிறுத்தச் சொல்லவே இல்லை. எல்லோருக்கும் கால்கள் குழைந்து கைகள் குழைந்து அலண்டு போயிருந்தார்கள். ஆனாலும் யாரும் விலகவில்லை. பரந்தாமராஜூ சொல்லியிருந்தான்—அடுத்த நாள் மதியம் வரை யார் ஓயாமல் வேலை செய்து கொண்டே இருக்கிறார்களோ, அவர்களுக்குத் தான் முழுக்கூலி.

மிக நவீனமான வால்முனியாய் அந்தப் புராதன ஐதீஹ்ய மரபில் விலகாமல், அதே நேரத்தில் வால்முனியின் அமைப்பை இந்து நாயக்க சுதை சிற்ப தோற்ற உருவங்களிலிருந்து விலக்கி, இந்தக் காவிரிச் சேற்று மண்ணின் புராதனமான—ஆனால் வீர்யம் மிக்க கிராம மரபின் புது நுனியை வெளிக் கொண்டு வந்திருந்த ஏழை வெள்ளையம்மாளும், இந்தக் கற்பனையின் மூலமான சிப்பி வெள்ளையும், இந்தக் கற்பனையை நிதர்சனப்படுத்திய சிறுமி ராமலக்ஷ்மியையும், முதன் முறையாய் வியப்புடன் கண்களாலேயே அள்ளி விழுங்கினான் பரந்தாமராஜூ. பரண் மேலிருந்தபடியே சுற்றிலும் நோக்கினான். எங்கும் அயர்ச்சி—களைப்பு—யாரும் ஓயவில்லை. ஆனால் தளர்ச்சி. மேலே இன்னும் வெள்ளையம்மாள் சாந்தில் வேலை செய்து கொண்டேதான் இருந்தாள். கீழிருந்து பத்து நாளாக கைநோக—பல வண்ணக் கண்ணாடிகளையும் அறுத்து அறுத்துக் குவித்த நாச்சியை மேலே வருமாறு கையசைத்தான் பரந்தாமராஜூ.

காலை வெய்யிலின் சூடு ஏற ஆரம்பித்துவிட்டது. இன்னும் ஒரு மணி நேரத்தில் ராமலக்ஷ்மி வால்முனியின் கண்ணைத் திறந்து விடுவாள் என்று அவனுக்குத் தோன்றியது. ராமலக்ஷ்மி இன்னும் வால்முனியின் முகத்தின் எதிரே கால் பரப்பி வால்முனியின் வளை எயிற்றுப் பற்களை உருவாக்கிக் கொண்டிருந்தாள். ராமலக்ஷ்மிக்குள்

இப்போது இருந்தது ராமலக்ஷ்மி அல்ல. பழந்துணிக் குவியலுக்குள் அவள் பிருஷ்டத்தை உதைத்து உள்ளிழுத்துக் கொண்ட அதே வால்முனி பரந்தாமராஜூதான். அவள் உடம்பெங்கும் ரத்தம் வியர்வையாகிக் கொண்டிருந்தது. ஒரு பகல்—ஒரு இரவு—கடந்து விடியலை முறித்து—முடிக்க வால்முனி தன் எட்டுக் கரங்களையும் விரித்துக் கண்ணைக் கூசும் புளபளப்புடனும்—வர்ண ஜால விசித்திரத்துடனும் உலகை விழுங்கும் வாய் பிளப்புடனும் நின்று கொண்டிருந்தது. வால்முனியின் தலைக்குமேல் ப்ரும்மாண்டமான ஒற்றைக் கொம்பு நீண்டிருந்தது. வானத்தையே கிழித்து விடும் கோரத்தை அது உள்ளடக்கிக் கொண்டிருந்தது. அது வெள்ளையம்மாளின் அற்புதக் கற்பனை. வால்முனியில் இந்த ஒற்றைக் கொம்பு அவளது சுயம். அவள் மனதின் நீட்சி. உலகை நாலுகூறாய்க் கிழித்தெறிய அவள் மனது பரந்தாமராஜூவுக்களித்த அற்புத ஆயுதம். கலையின் தீவிரம். மனதில் பதில். கீழே நின்று கொண்டிருந்த ஜனங்கள், கொம்பு பூரணமாகி உருவானதும் சிலை பூர்த்தியாகிவிட்டது என்று கொம்பைப் பார்த்து வியந்து 'ஹோ' என்று கூச்சலிட்டு ஆரவாரித்து தங்கள் இணக்கத்தை வெளிக்காட்டியபோது, வெள்ளையம்மாள் அப்படியே குனிந்து பரந்தாமராஜூவின் கால்களை கட்டி மார்புடன் அணைத்துக் கொண்டாள். கீழிருந்துமேல் நோக்கிச் சுற்றிச் சுற்றி ஓவியம் வரைந்தும், கண்ணாடி ஒட்டியும், உலோக வேலை செய்தும், அரக்குப் பூச்சு கொடுத்தும், ஓயாது பதறாது வண்ணங்களால் சமைத்து வந்த ராமலக்ஷ்மியும் சிற்பி வெள்ளயும் ஜனங்களின் ஆராவாரத்தோடு கொம்பை நிமிர்ந்து பார்த்தார்கள். பயம் நெஞ்சில் கப்பியது. எத்தனை அபூர்வம்? எத்தனை ப்ரும்மாண்டம்? சிப்பி வெள்ளை செய்த வேலையைப் போட்டுவிட்டு பரண் மீதேறி சாரங்களின் வழியே ஏறி உச்சிக்குப்போனாள். வெள்ளையம்மாளை அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டு அழுதாள்.

"ஒன்ன என்னமோ நெனச்சேன்டி வெள்ள வால்முனியயே கொண்டாந்துட்டடி! அப்பிடியே அச்சாவா இப்படியேதான் இருந்துருக்கும் வால்முனி. "ஒங் கையக் கொண்டா—இல்ல இல்ல . அப்பிடியே ஒன்னக் கட்டிப் புடிச்சு"... சிப்பி வெள்ளை வெள்ளையம்மாளைக் கட்டிப் பிடித்து வால்முனியின் கரங்களாகி அவளை இறுகத் தழுவி ஆண்மை கலந்த முரட்டுத்தனத்துடன் அவளை முத்தம் செய்தாள்.

கீழே குனிந்து பார்த்தபோது பரணின் கீழே—நடுவில்—நாச்சியின் மடியில் லேசான வியர்வை குளத்தில் இடுப்பில் அரை ட்ராயருடன்

அயர்ந்திருந்த பரந்தாமராஜூ அவளுக்கு வியப்பளிக்கவில்லை. வருத்தமாகவும் இல்லை. அவளும் மெதுவாகப் பரணிற்கு இறங்கினாள். ராமலக்ஷ்மியின் ஆவேசம் அடங்கவில்லை. அவள் யாரையோ வெட்டி வீழ்த்த ஆவேசத்துடன் நீண்ட நீண்ட கண்ணாடிகளால் க்ரீடத்தைப் பின்புறம் ஒட்டிக் கொண்டே போனாள். தூரத்திலிருந்த குடிசைக்களுக்குள்ளிருந்த ஆண்–பெண் அடங்கலும் வெளியே வந்து நின்று 'ஆ' என்று வாய் பிளந்து ஆச்சர்யத்துடன் தங்கள் சிருஷ்டியை தங்களின் ரத்தத்தில் கலந்து போய்விட்ட அவர்களின் ஆதிமக் கலையை வால்முனியின்மூலம் மறுபடியும் தெரிந்து கொண்டு 'அட, நம்ப வாலுமுனியல்ல!' என்று முனகலானார்கள்.

கடைசியாக வால் முனியின் கண்களை சூழிக் கண்ணாடிகளால் செவ்விழிகளை உருவாக்கி–பூரணமாகியபோது வால்முனி ஒவ்வொருவர் நெஞ்சுக்குள்ளும் எழுந்து நின்றது. அதைப் பூரணமான நெஞ்சு குவியும் சந்தோஷத்துடன் விலகி நின்று கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டே இருந்தாள் ராமலக்ஷ்மி. அங்கங்கே வேலை செய்தவர்கள் பலரும் உட்கார்ந்தும், சாய்ந்தும் கிடந்தார்கள். சிலர் கீழே குவித்துக் கிடந்த மணலில் கிடந்தார்கள். பரந்தாமராஜூவின் ஞாபகமே அங்கு யாருக்கும் இல்லை. அவன் விரலால்கூட தொடாத வானளாவி நின்ற அந்தக் கலைப் படைப்பை விழித்துப் பார்க்கக்கூட திராணி இல்லாமல் மேலே பதினைந்தடி உயரப் பரணியில் நாச்சியின் மடியில் சுருண்டு கிடந்தான். மேலிருந்து இறங்கிய சிப்பி வெள்ளை, கீழே நின்ற பெண்களை உலுப்பி அந்த சிற்பத்தின் அடிப்பீடத்தின் அலங்கார வேலைகளைத் தொடர்ந்து செய்ய முடுக்கிக் கொண்டிருந்தாள். மேலே ராமலக்ஷ்மி பரணில் சுற்றி சுற்றி வந்து துணியினால் ஒற்றி ஒற்றி பசையின் மிச்ச சொச்சங்களை அழுத்தி அழுத்தித் துடைத்து விட்டுப் போயிருந்த இடங்களை நிரவல் செய்து முடித்தபோது பரணில் வந்து நின்று வாய் பிளந்து நிற்கும் அந்தச் சிற்பம் என்ன சொல்கிறது? என்று பார்த்தாள். பயம், அழிவு, நசிவு, கோரம் ஆகியவற்றின் மொத்தமான ஒரே பேருருவாய் கொம்புயர்த்தி நிற்கும் அது அவளைப் பெருமையும் கர்வமும் கொள்ள வைத்தன. இந்த பேருருவம் அப்படியே வெள்ளையம்மாளின் மனதிலிருந்தா வந்தது? ஆச்சர்யமாய் இருந்து. தன் மனதிலும் இந்தப் பேருரு இருந்திருக்கிறதே? வெள்ளையம்மாளின் மனதும் தன் மனதும் எப்படி ஒரே கருவைக் கொண்டிருந்தன? ராமலக்ஷ்மி குனிந்து பரந்தாமராஜூவைப் பார்த்தாள். அப்போதுதான் அவள் நாச்சியின் முகத்தையும் பார்க்க முடிந்தது. நாச்சியின் முகமும்

அதே பெருமையால் விளைந்திருந்தது என்பது அவளுக்கு வியப்பளித்தது. குனிந்து பரணிலிருந்து கீழே பார்க்கவும் அதே பெருமையும், இறுமாப்பும் கீழே நின்ற சிப்பி வெள்ளையின் முகத்திலும்–அங்கிருந்த–சித்ரப்பட வேலைக்கு அத்தனை ஆண்கள், பெண்கள் முகத்திலும்–அதே அகங்காரமும் இறுமாப்பும் சந்தோசமாய் பொலிந்தன. பரந்தாமராஜூவோ இதற்கு மூலகாரணமான வெள்ளையம்மாளோ, வியர்வையில் குளித்தபடி பரணில் சுருண்டு கிடந்தார்கள். கீழே ஒரு மூலையில் கல்லடுக்கி அடுப்பு கட்டி, பானை ஒன்றேற்றி அந்த முத்துராஜாப் பெண்கள் 'காப்பித் தண்ணி' வைக்க முயன்றார்கள். எங்கிருந்தோ வந்த பாத்திரத்தில் பாலும் கொண்டு வந்தார்கள். இன்னொரு கொடி அடுப்பில் அந்த பாலை காய்ச்ச ஏற்றினார்கள். விடிந்து மணி பத்து இருக்கலாம். மேலும் இருக்கலாம். தூரத்திலிருந்த தார் ரோட்டிலிருந்து டீக்கடையிலிருந்து இட்லிகளும், வடைகளும் கொண்டு வரப்பட்டன. அயர்ந்துபோனவர்கள் அலுமினியத் தம்ளரில் காப்பித் தண்ணியை வாங்கி வாங்கி அருந்தினார்கள். அருந்தியவர்களே மேலும் மேலும் திரும்பத் திரும்ப வந்து அருந்திக் கொண்டிருந்தார்கள். ஒரு அலுமினியத் தம்ளரில் காப்பியுடன் சிப்பி வெள்ளை பரணிற்கு ஏறிச் சென்றாள். அவளும், ராமலக்ஷ்மியும் பரந்தாமராஜூவை எழுப்ப முயன்றபோது நாச்சி கோபத்துடன் கத்தினாள்.

"அது தூங்கிட்ருக்கில்ல., அது புடிச்சு ஏன் எழுப்பறீங்க? எளுப்பாத, யாரும் எளுப்பாமப் பாத்துக்க" அப்புடீன்னு சொல்லிட்டுதான் "ஏம் மடீல படுத்துது" என்று 'மடியில' என்பதை அழுத்திச் சொல்லிக் காட்டினாள் நாச்சி. பதில் சொல்லுமுன் தார் ரோட்டிலிருந்து முனியாண்டவர் கோயிலுக்கு நேராக வரும் மன் ரஸ்தாவில் புழுதி பறக்க ஒரு வெளிநாட்டு 'ஹிட்டாச்சி' கார் ஒன்று பாய்ந்து வந்து முனியாண்டவர் கோயில் முன்னே நின்றது. அதற்குள் இருந்து ஜரிகை அங்கவஸ்த்திரமும், பட்டு வேஷ்டியும், பளபளக்க பஞ்ச ரத்ன மோதிரம் கைகளில் மினுங்க கீழிறங்கி விண்ணைத் தொடும் ஒற்றைக் கொம்பு வால்முனியைப் பார்த்து அயர்ந்தே நின்றுபோனார் மீனாக்ஷி ராஜூ. பல கோணங்களிலும் அவர் நின்று பார்த்துக் கொண்டே இருந்தார். சுற்றிச் சுற்றி வந்து அவர் பார்த்து வியப்பதைப் பார்த்த அந்த ஏழை ஜனங்கள் தங்கள் கோபத்தை, பசியை, வறுமையை வால்முனியின்மூலம் உலகத்துக்குச் சொல்லிவிட்டானே ஒரு கலைஞன்? அவன்கூடத் தங்களைச் சேர்ந்தவன்தான்–அவனும் ஒரு வால்முனிதான். என்று லேசாகவேனும் புரிந்து கொண்டார்களா? இந்தக்

காரணங்களை கலையின் நவீனத்வத்தை விமர்சகர்களுக்கு விட்டு விடுவோம். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பும் இதுபோல் வால்முனிக் கலைஞன் பக்தியோடு உருவாக்கிய வால்முனிதான் இந்த வால்முனியும். ஆனால் இந்த வால்முனி அடிவயிற்றின் தீக்குள்ளிருந்து பிறந்தவன். வழக்கமாக எல்லாக் கடவுளையும்போல் துஷ்டர்களை சம்ஹரிக்கவும், சிஷ்டர்களைக் காக்கவும் இந்த வால்முனி வரவில்லை. ஏனென்றால் இந்த வால்முனி தன் அறிவை, ஆக்கத்தை, கோபத்தை, வீரத்தை, துணிவை பசி வடிவாக மட்டுமல்ல–தன் ஒற்றைக் கொம்பின் மூலமாகவும் ஆயுதமெனத் தாங்கிக் குத்திச் சாய்க்கக் காத்திருக்கிறான்–ஒற்றைக் கொம்புடன். 'ஆஹா' என்று வியந்துபோனார் மீனாக்ஷிராஜூ. அவர் பரந்தாமராஜூவைப் பெற்ற பயனை அடைந்துவிட்டார் என்று தோன்றியது. அவருக்கே தன்னையறியாமல் கண்கள் நிறைந்தன. அவர் விதைத்தது வீண் போகவில்லை. அறுத்தது வினையில்லை. அது சரி. பரந்தாமராஜூ எங்கே? சுற்றும் முற்றும் பார்த்தபோது கூட்டம் அவருடன் நின்றது. கையுயர்த்தி மேலே பரணைக் காட்டியது கூட்டம். அதற்குள் அவருக்கு ஏனோ தயக்கம், நடுக்கம். எல்லாம்கூட வந்தன. அதே நேரத்தில் "என்னங்க–பரந்துவப் பாத்தீங்களா? இல்லியா? பரந்து எங்க?" என்று கேட்டபடி கழுத்து நிறைய நகையும் சுடர்விடும் கனமான தாலியும் அந்தக் காலை வெயிலில் பளபளக்கும் அற்புதமான அகலத் கரைப் பட்டுப் புடவையும் பெண்ணாய் பிறந்த எவரையும் பொறாமை கொள்ள வைக்கிற இளமை எடுப்புமாய், கழுத்தில் தொங்கும் வெளிநாட்டுக் கேமிரா ஒன்றுமாய் கீழிறங்கினாள் லல்லு என்கிற லலிதேஷ்வரி. அமைதியாக இன்னொருவனும் காரிலிருந்து இறங்கினான். அவன் நட்டு. மூவரும் மறுபடியும் சிலையை சுற்றிப் பார்த்தபடி ஃபோட்டோக்கள் எடுத்தபடி நின்றனர். மூன்று அலுமினியத் தம்ளர்களில் காப்பியை நீட்டினார்கள். அந்த அப்பாவி ஜனங்கள்.

"காப்பி வேண்டாம்ப்பா, நாங்க காப்பி குடிக்கிறதில்ல" என்றாள் லல்லு மிடுக்காக. மேலே சென்ற மீனாக்ஷிராஜூ மேலும் அந்த சிற்பத்தின் லயத்தை உணர்ந்து வியந்து கொண்டே 'ராக்ஷஸன்–அயோக்யன்–கொன்னூட்டான்' என்று முனகிக் கொண்டே பரணில் ஏறினார். இப்பொழுது வால்முனி அவரையே நோக்கி உறுமுவதாகப் பட்டது அவருக்கு.

திரும்பிப் பார்த்த அவர் ரெண்டு பெண்களின் நடுவே ஒரு பெண்ணின் மடியில் தலை வைத்து அவளிடுப்பை கட்டியபடி

அழுக்குச் சல்லடத்துடன் வெற்றுடம்பாய் அயர்ந்திருக்க பரந்தாமராஜூவைத் திரும்பித் திரும்பி பார்த்தார். அவரது முகம் அருவருப்பில் சுளித்தது.

"ராஜூ-ராஜூ" என்றழைத்தார். சீறினாள் நாச்சி. "அறிவிருக்காய்யா ஒனக்கு. வெக்கங் கெட்டுப் போயா மடீல படுக்க வச்சுக்கிட்டு இருக்கேன். ஏன் எளுப்புற? எனக்குத் தெரியாது-யாராச்சும் பாக்கக்கூடாதுன்னு-அது ராத்திரியெல்லாம் பேயா வேல செஞ்சிட்டு... வந்துட்ட காரப் போட்டுக்கிட்டு எளுப்பறதுகு" கூச்சலில் வெள்ளையம்மாளும் பரந்தாமராஜூவும் விழிக்க அதே நேரத்தில் மேலேறி வந்த பட்டுப்புடவை சரசரப்புடன் தன்னை அங்கு கொண்டு வந்து நிறுத்திய லலிதேஷ்வரியும் அயர்ந்து போனாள். படிகளில் நட்டு மெதுவாகக் கையை உயர்த்தி நாச்சியின் கன்னத்தைத் தட்டிக் கொஞ்சியபடியே "காப்பி போடச் சொல்லீருந்தேனே-எனக்குக் கொண்டா. இவுங்களுக்குங் கொண்டா" என்றான். "பரந்து ஒன்னப் பாக்கத்தான் வந்துருக்கோம். கீழ வர்றியா இதுகளையெல்லாம் விட்டுட்டு?" என்றார் மீனாக்ஷிராஜூ.

"அதிருக்கட்டும் இவதான் வெள்ளையம்மா. இந்தச் செலயச் செஞ்ச ஆர்ட்டிஸ்ட்" என்றான் பரந்தாமராஜூ.

கீழே இருந்து சாரங்க கொத்தன், சாரத்தில் ஏறி நின்று கொண்டிருந்த நூற்றுக்கணக்கான ஜனங்களைப் பார்த்து "எறங்குங்கடா எல்லாம்-பொச கெட்ட பயலுவளா, எல்லாம் ஏறி நின்னா என்ன ஆவும்? மேலருந்து எல்லாத்தயும் புடுங்கிக்கிட்டு நேரக் கீள விளுவவா? யே செறுக்கிங்களா! நீங்கள்ளாம் ஏன்டி ஏறிக்கிட்டீங்க? இன்னும் பத்து நாளு வேல இருக்கு அதுல. இப்பப் புட்டுகிச்சுனா நீங்கல்லாங் கொம்பக் காட்டிக்கிட்டுப் போயிடுவீங்க. இந்த வேலெயையே இன்னும் முடிக்கல்ல. பொம்ம பண்ணி வெச்சுட்டா நின்னுடுமா? இனியே நாங்கள்ள வேலெ செஞ்சாகணும், பத்து நாளக்கி. எறங்குங்கடி" என்று கத்தினான். திமுதிமுவென்று கீழே இறங்கியது கூட்டம். அவன் சொல்வது உண்மைதான். வெறும் விக்ரஹம்தான் ஆகி இருக்கிறது. காக்க பீடம் முதல் பலிபீடம் வரை சிலையை உறுதியாகக் காக்க அடிபாடுகளிலிருந்து மீட்க, சிலையைச் சுற்றி அகன்ற மேடையும் மனிதர்கள் கைபடாத அளவுக்கு இரும்பழிகளும் போட வேண்டும். கோயிலுக்குள் முனியாண்டவர் ஓரடி உயரத்தில் சின்னஞ் சிறிய சிலைதான். ஒரு சாதாரணமான வால்முனியைத்தான் அந்த ஜனங்கள் கேட்டார்கள். பரந்தாமராஜூ நிஜமான வால்முனியே

கொண்டு வந்துவிட்டான். பர்மாவிலிருந்தும். சிலோனிலிருந்தும் வந்த அகதிகள். அவர்களுடைய ஆசைகளை எங்கெங்கோ அழித்து விட்டு இந்த நாட்டுக்கு வந்து நிற்கும் அவர்களின் தாபங்களின் மூர்த்தியாய் ஒரு சிலை அமையுமென்று இந்த கலைக்கு இப்படியெல்லாம்கூட உபயோகம் இருக்குமென்று அவர்கள் யாருமே நம்பவில்லை.

பரந்தாமராஜூ சிப்பி வெள்ளை கையிலேந்தி வந்த அலுமினியத் தம்ளரை வாங்கி அந்த 'வென்னிக்காப்பி'யை வெந்நீராகவே நினைத்து முகர்ந்து பார்த்துவிட்டு "ஏதோ ஏள ஜனங்க குடுத்தது–குடிக்கிறீங்களா?" என்றபடியே மீனாக்ஷிராஜூவிடம் நீட்டினான்.

"யேய்–நாங் காப்பி குடிக்கிறதுக்கு வல்ல. உருப்படாம சுத்திக்கிட்ருந்த... இப்ப நான் எதிர்பார்த்தாப் போலயே 'ஏம் பையன்'றத நிரூபிச்சுட்ட. என்னோட கலையக் காப்பாத்தி என்னோட பாரம்பரியத்தை மறுபடியும் கையில் எத்துக்கிட்ட, 'குல விச்சை கல்லாமல் பாகம் படும்' அப்படீம்பாங்க ராஜூ.போதும் இனிமே என்னோடயே ஸ்டுடியோவ சொத்த எல்லாத்தையும் நீ ஏத்துக்கலாம். சரளா மேல எனக்கு எந்தக் கோவமும் இல்ல. அவ ஒன்ன வளச்சா என்ன? நீ அவள வளச்சா என்ன? எனக்கு சந்தோஷந்தான். இதல்லெம் வேற எப்பிடியும் நடக்காதுன்னு எனக்கு மிந்தியே தெரியும். என்னோட கலைய–தஞ்சாவூர் கட் கிளாஸ் ஆர்ட்ட–என்னோட குளி வெட்டிப் பொதசுடப் போறேன்னு பயந்தேன். நீ அப்புடி–இப்புடி அசங்க மசங்கலாத் திரிஞ்சாலும் காரியத்துல சூரன்னு நிரூபிச்சுட்ட. பெரிய கோயில்ல நீயி பண்ணி வச்சுருக்கியே அன்ன பட்சி வடிவத்துல பெருவுடையார் சன்னதில, பல கலர்ல லைட் அடிக்கிதே அதெல்லாம் என்னாப்பா? நான் ஒனக்குப் போட்ட பிச்ச. நீ சொல்லுவ பாரு–டூப்ளிகேட் ஆர்ட்ன்னு–அதுதான் நீயுஞ் செய்யிற. போவுது. எனக்குப் புள்ளையாக் கெடச்ச. அதுபோதும்" 'கொல்'லென்று சிரித்தான் பரந்தாமராஜூ. நாச்சியின் கையைப் பிடித்துக் கொண்டு மீனாக்ஷிராஜூவைப் பார்த்து

"ஒங்குளுக்கும் ஒங்க தலைமுறைக்கும் எங்க வேதனைகள் புரியாது. எங்க வாழ்க்கை ஒரு சோதனை. ஒங்களுடைய வாழ்க்கை முடிஞ்சுபோன ஒரு தலைமுறையோட அற்புதங்கள். மகத்துவங்கள், எனக்கு. ஒங்களுக்கு சொல்லி புரிய வக்ய முடியாது. அடியில்லாத ஆழத்துல கனவுகளைக் கொண்ட நீஞ்சிக்கிட்டே இருக்குற எங்களுக்கு அந்தக் கடலோட மேல் தளத்துக்கே நீஞ்சி

வரமுடியாம எங்களோட கலையில எங்களோட கனத்த வெட்டிச் சாய்க்க எங்களுக்கு எங்க கால்களும், கைகளுந்தானிருக்கு. எங்களோட கனத்தக் கொறைக்காம எங்களால மேல நீஞ்சி வரமுடியாது. எங்க கனத்தக் கொறைக்கனுமானா எங்களோட கால்களையுந் தலைகளையும் நாங்களே வெட்டிப் போட்டுரணும். அப்பிடியே வெட்டி சாய்ச்சு நாங்களே எங்களுக்குப் புதுபுது தலைகளையும்–புதுப்புது றக்கைகளையும், புதுப்புது கால்களையும் தேடிக் கண்டுபிடிக்கணும். சமுத்துரத்துடைய மேல் தளத்துக்கு வந்தாலும் அப்பவும் நீஞ்சியாகணும். நீஞ்சுனாலும் கரை சேர முடியாது. கர சேந்தாலும் மேல ஏற முடியாது பறக்கணும். சிறகு வேணும். ஆகாயம்... ஆகாயம்... நீலம்... நீலம். .திரும்பித் திரும்பி எங்களோட செறகசைச்சுப் பறந்தாலும், ஆகாயத்தில் திரும்பவும் செறகொடிஞ்சு மறுபடியும் சமுத்தரத்து அலைகள்ல விழுறது எதுக்குன்னே தெரியாத எங்களோட தலைமுறை. ஒங்களோட படங்களை நான் பின்பற்றி இருக்குறதா நீங்க சொன்னீங்க.

"நான் யாரப் பின்பற்றிக்கிட்டு இருக்கேன்? அப்புடிங்கறதவிட எப்புடிப் பின்பற்றிக்கிட்டு இருக்கேன்–எத ஒழிச்சிக்கிட்டு இருக்கேன் அப்புடிங்கறதுதான் முக்கியம். எந்த 'இஸ'ங்களாலயும் எந்தக் காலத்துலயும் ஒழிக்க முடியாத இன்னும் ஒழிக்காத பசியையுங் காமத்தையும் பின்பற்றிப் போய்க்கிட்டுருக்கேன். நாயனா... இது எல்லாம் ஒங்களுக்குச் சொல்றதுக்குக்கூட எனக்கிஷ்டமில்ல. இந்தக் கோயில்லருந்தெல்லாம் என்னோட பதில்கள் தஞ்சாவூர் சித்திர சிற்பமா, சுதை வேலையாப் பக்கறவங்கள எல்லாம் இம்சை பண்ணும். எல்லாவிதமான வசதியும் வாய்ப்பும் தத்துவமும் மதமும் சாமியும் இதுக்கு பதில் சொன்னதுல்ல. இந்தக் கோயில்கள்ளேருந்தெல்லாம் எனக்குப் பெருசா ஒண்ணுங் குடுத்துறல. ஆனா தஞ்சாவூரு பூரா–தஞ்சாவூரு மாவட்டம் பூரா, காவிரி ஓடுற கரையெல்லாங் காவிரியே காஞ்சுபோன இந்தக் காலத்துலயும் ஆயிரக்கணக்கான கோயில்கள் இன்னும் அப்புடியே காலத்துக்கும் நம்முடைய மூலத்தை யெல்லாஞ் சொல்லிக்கிட்டே இருக்கும். இன்னக்கி எங்களோட தலைமுறையில இந்தக் கோயில்களும், கோயிலுக்குள்ளாற இருக்குற மூர்த்திகளும் அர்த்தமில்லாமப் போச்சு. ஒரு காலத்துல இந்தக் கோயில்கள்தான் ஜனங்களுக்கு ஒரு வாழ்க்கை நெறியா இருந்தது. இப்போ எங்களோட கேள்விகளுக்குப் பதில் சொல்ல எந்தக் கோயில்கள்ல இருக்குற எந்த மூர்த்திகளுக்குஞ் சக்தி இல்லாமப் போச்சு. வாழ்க்கைய மறந்துட்டு அதுனாலதான் நாங்க வெளிய வந்தோம். இப்போ இதே கோயில்கள்லதான் என்னோட பரிசோதனைய

ஆரம்பிச்சுருக்கேன். நான் ஏதோ லெக்ச்சர் அடிக்குறேன்னு நெனைக்க வேண்டாம். எதிலிருந்து வேறொன்றை கற்றுக் கொள்ள அவசியமில்லையோ, எது ஒன்றைப் புரிந்து கொண்டால் பின் வேறொன்றின் நிழல்கூடத் தெரிந்து கொள்ள வேண்டாமோ, அது வியப்பே வடிவானது. உனது வடிவம் பூண்டது. நீ அஃதாவாய். எது ஒன்றைச் சிந்தித்தால் வேறொன்றை மறுக்க வேண்டாமோ, ஏதொன்றைச் சொன்னால் வேறொன்றையும் சொல்ல வேண்டாமோ, யாதென்றினை அனுபவித்தால் இனி அனுபவிக்க ஏதுமில்லையோ, யாரொன்றைக் கலந்து கொண்டால் பின் வேறொருவனைக் கலந்து கொள்ள அவஸ்யமில்லையோ அவன் பலருள் ஒருவன்-வியப்பே வடிவானவன்-அவனாய் நீ ஆகுக. நீயே நிறைக-என்றெல்லாம் பைத்தியம்போல் ஒங்குளோட வேதத்துல பொலம்புறீங்களே, அதெல்லாம் என்ன? அதைத்தான் நாங்க எங்க தலைமுறைல திரும்பி அத எங்களோட வாழ்க்கைக்குக் கொண்டாந்துருக்கோம். எங்களோட ஓவியங்கள்-ஒங்களோட பேரப் புள்ளைங்க இல்ல. நாங்களும் மொறையாக் கல்யாணம் பண்ணி பேரப் புள்ளைகளுக்கு வழிகாட்டப் போறதுமில்ல. நீங்க ஒங்க பாதையில போங்க. ஒருவேள ஒங்க பாத சரியாக்கூட இருக்கலாம். நாங்க எங்க வழிலே போறோம்"

"மறுபடியும் ஆரம்பிச்சுட்ட. ஒன்னோட பெருமைய நான் எப்பவுந் தப்பா நெனச்சதே இல்ல. எனக்கு வயசாயிட்டுது. என்னால தனியா இருக்க முடியல்ல. ஒங்கம்மா போன பின்னால ஒன்னயும் இழந்துட்டு நீயுமில்லாம தனியா இருந்தேன். சரளாவும் போன பின்னால எனக்கு என்னக் கலைஞனா-ஏம் மனுஷனாக்கூட-நெனைக்க மாட்டேங்கிற. ஏஞ் சொத்தையும் வேணாங்குற. என்னோட எதையும் வெறுக்கிற. எனக்கு இனிமே தஞ்சாவூர் சித்திரப் படத்துலயும் நிக்க முடியாது போலருக்கு. அஞ்சியும் ஓங் கைய நீட்டிட்ட. எதக் கண்டான்னு தெரியல்ல. வெளிநாட்டுக்காரன்லாம் ஓம்பேர பஜன பண்ண ஆரம்புச்சாட்டான். பண்றான். நீயோ ஐயனாரு. வீரபத்திரன், சொடலையாண்டின்னு, ஆரம்புச்சுட்ட... கேட்டா ஒனக்கென்னா தெரியுங்குற. ஒம் போங்குக்கெல்லாம் நான் ஒண்ணுஞ் சொல்லல்ல. வெலகித்தான் இருந்தேன். இப்பமுஞ் சொல்றேன். என்னோட வந்து இரு. இப்போ இன்னொரு தப்பு நாம் பண்ணி இருக்கேன். நீ ஏமாத்தி வுட்டுட்டுப் போனியே-இல்லேன்னா ஏமாந்துபோனாளே-இப்பிடியும் வெச்சுக்கலாம். நீ கெடுத்து குட்டிச் சொவராக்குனியே-லலிதேஷ்வரி-அவள நாங் கல்யாணம் பண்ணிக்கிட்டேன். நீ ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணி

வெச்சுக்கத யோக்யத இல்லாமப் போனதுனாலதான்-இந்த அறுவத்தி ரெண்டாவது வயசுல அவளக் கட்டிக்கிட்டு ஓங்கிட்ட வந்து பொலம்பிட்டுருக்கேன். எனக்கு நீயி பண்ண வேண்டிய ஒபகாரம் சரளாவக் கூட்டிக்கிட்டு வீட்டுக்கு வந்துரு. நல்ல நாள்ல்ல ஒரு தாலியும் கட்டிப்புடு"

பயங்கரமாகச் சிரித்தான் பரந்தாமராஜூ. லலிதேஷ்வரி பட்டுப் புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். பேய் பிடித்தவன்போல் சிரித்துக் கொண்டே இருந்தான் பரந்தாமராஜூ.

# 15

வெள்ளையம்மாளுடன் தனியே வயல் பரப்புகளின் வழியே நடந்து வந்து கொண்டிருந்தான் பரந்தாமராஜு. முனியாண்டவர் கோயில் கும்பாபிஷேகம் முடிந்து மேலும் இரண்டு மாதமாகி இருந்தது. கும்பாபிஷேகம் கண்கொள்ளாக் காட்சியாய் நடந்தது. வால் முனியைப் பார்த்த வேறு ஊர்ச் சேரிகளில் இருந்தெல்லாம் வந்தவர்களெல்லாம் தங்கள் சேரிகளிலும் கோயில்களில் இதுபோல் மாடனையும், காடனையும், கருப்பனையும், இருளனையும், பாவாடை ராயனையும், தூக்கி நிறுத்தச் சொல்லி இதுவரை உருவம் கொடுக்கச் சொல்லி அழைத்துக் கொண்டிருந்தார்கள். பெண்கள் கூட்டம் கூட்டமாக—அதிலும் கிராமத்துப் பெண்கள். கீழ்ச் சாதிப் பெண்கள் சரளாவின் தஞ்சாவூர் ஓவியப் பள்ளியில் வந்து சேர்ந்து கொண்டிருந்தார்கள். தினமும் பரந்தாமராஜுவுக்கு ஓயாமல் வேலை இருந்தது. நாச்சிக்குட்டி ஆயிரக்கணக்கில் கண்ணாடி வாங்கி அறுத்துக் குவித்துக் கொண்டிருந்தாள். ராஜலக்ஷ்மி உலோக வேலைக்காகவே அவள் வீட்டுக்குள்ளேயே ஓர் உலையுடன் ஒரு பட்டறையும் போட்டுவிட்டாள். சிப்பி வெள்ளையும் வெள்ளையம்மாளும் எந்த வேலைக்கும் தனியாகவே அனுப்பி வைக்கப்பட்டார்கள். வேலை முடியும்போது மட்டும் பரந்தாமராஜு போய் ஆங்காங்கே

சரி செய்து கொடுப்பதுடன், வேலை முடியும். இடையில் ஒரே கஷ்டம் கல்யாணத்துக்கு முன்பே ராமலக்ஷ்மி கர்ப்பமாகிவிட்டாள் என்ற செய்திதான். அவள் கல்யாணத்துக்குப் பின் அவனுக்குக் கிடைத்தது. யாராலும் கண்டுபிடிக்கமுடியாத படு யூகமான விஷயம் ராமலக்ஷ்மிக்கு மட்டும் தெரிந்தது. அவளுக்கு நேர்ந்த அடுத்தடுத்த அதிர்ச்சிகளில் மிக முக்கியமானது, பரந்தாமராஜூ அவளை வேலைக்கு வர வேண்டாம் என்று சொன்னது, அவளை மட்டுமல்ல, வெள்ளையம்மாளையும் சிப்பி வெள்ளையையும்கூட தன்னுடன் அழைத்துப் போவதில்லை. வேறிடங்களுக்குத்தான் அனுப்புகிறான். இப்போது வெள்ளையம்மாளைப் போலவே நாரணம்மா என்ற புதிய நாயுடுப் பெண்ணை தன்னுடன் அழைத்துக் கொண்டு போகிறான்–என்று கேள்விப்பட்ட சிப்பி வெள்ளை பதைத்தாள். சிப்பி வெள்ளைக்குப் பதிலாகவும் வேறு இரண்டு படித்த மேல்வர்க்கத்துப் பெண்கள் அவனோடு ஒட்டி உரசித் திரிவதை அந்தத் தெரு பார்த்து ஆச்சர்யப்படவில்லை. இந்த விஷயங்களில் இருந்ததெல்லாம் தூர விலகி அவனையே பார்த்துக் கொண்டிருந்த இரண்டு பெண்கள் கருப்பும், நாச்சியும். என்றாவது ஒருநாள் அவர்களுக்கும் விளக்கம் சொல்லியாக வேண்டும் என்பதை அலுப்புடன் உணர்ந்தான் பரந்தாமராஜூ. மனித உணர்ச்சிகள் எல்லாம் கலையில் பூர்ணத்வம் எய்துகின்றன. வயல் வரப்பில் நடந்து வந்து கொண்டிருந்தபோது மனம் கடந்துபோன நிகழ்ச்சிகளை மறுபடி மறுபடியும் நினைத்துக் கூட்டிக் கழித்துப் பார்த்துக் கொண்டிருந்தது. மேலும் நகர்ந்த இந்த ஏழெட்டு மாதங்களில் கூட்டம் பெருகித்தான் போய்விட்டது. கூட்டம் எல்லா நிலைகளிலும் அவனை அருட்டியது. ஆனால் ஜம்னாவை மட்டும் அவன் காணவே முடியவில்லை. வெறும் மராட்டிய சுண்ணாம்புப் பூச்சைக் கிளறி அவன் செய்த அந்த ஓவியம் நினைவுக்கு வந்தது. பாபியுடன் அவனால் மனமொன்றி–மிருகமாய்க்கூட–படுக்கையிலும்கூட அவளுடன் கலக்க முடியாதது எத்தனை வியப்பான பயங்கரமாய் இருந்தது? எல்லாப் பெண்களையும் எல்லா ஆண்களையும் கலந்து கொள்ள பரந்தாமராஜூவுக்கு நிறையவே நேரமிருந்தது. அவன் மிகக் குறுகிய காலத்தில் மிக ஆழமாகவும் மிக அகலமாகவும் ஒரு திட்டத்தை மிக அனாயசமாக சாத்யப்படுத்திவிட்டான் என்றே அவனுக்குத் தோன்றியது. இந்தக் குறுகிய இடைவெளியில் அவன் நிறையவே கோயில்களைப் புதிய தலைசிறந்த முறையில் மாற்றியமைத்துக் கொண்டுபோனபோதும் சாதாரணமான ஜனங்கள் தலைக்குமேல் வைத்துக் கொண்டாடினர். வெள்ளையம்மாளைப் பற்றி

இன்னொரு விஷயம் கேள்விப்பட்டதால்தான், அவளைக் கூப்பிட்டு அனுப்பி இருந்தான். இப்போது அவளுடன் அதற்காகத்தான் நடந்து கொண்டிருக்கிறான். வெள்ளையம்மாள் யார்?தான் யார்? இந்த உறவு என்ன? இவை எல்லாவற்றையும்விட மிக முக்கியமானது அவள் பெண் என்கிற உண்மைதான். தெங்கால் அறுதியப்பர் கோயிலில் வாகனம் வேலை செய்யப் போனபோது அங்கிருந்த மேல்சாதிப் பயல்-கணக்குப்பிள்ளை-அவளைக் கோர்த்துக் கொண்டு திரிவதாகக் கேள்விப்பட்டிருந்தான். அதைக் கேட்பதா?கூடாதா? இப்போது வெள்ளையம்மாள் இந்த தஞ்சாவூர்ச் சித்ரப் படக் கலையைத் தேர்ந்துவிட்டவள். வெள்ளையம்மாள் இடத்துக்கு வேறு ஆளை முழு மூச்சுடன் உபயோகித்து வளர்த்து எடுத்திருந்த நாரணம்மா, வெள்ளையம்மாளைப் போல தயாராக இன்னும் பலகாலம் உழைத்தாக வேண்டும். கல்யாணம் பண்ணி வெள்ளையம்மாளை விட்டுவிட்டால் வெள்ளையம்மாளை திரும்ப அவள் கிஷன் அனுப்பும்போது வெள்ளையம்மாள் நாரணம்மாவைவிட மோசமாகி விடுவாள். இந்த விஷயம்தான் பரந்தாமராஜூ ஒவ்வொரு பெண்ணையும் ஈவிரக்கம் இல்லாமல் பரிசோதிக்கவும், அவர்களை மறுபடி மறுபடி இந்தக் கலைக்கு உபயோகமாகிறார்களா என்று அவர்களை உடலில் தொடங்கி மனது வரை நிர்வாணமாக்கி அவர்களின் முழு உண்மையையும் அவர்களுக்கே உணர்த்திக் காட்டுகிற வரை, கலைக்கு உபயோகம் ஆகிற வரை எந்தப் பாதகத்தையும் செய்ய அவன் தயாராகவே இருக்கிறான் என்பதாக இருக்கிறது. உருவுக்குள் அடங்காத விஷயங்களை அரூபக் கலையியலில் கொண்டு வருவது ஏறத்தாழக் கொலைக்குச் சமம். மறுபடி உயிர்ப்புக்குச் சமம். வெள்ளையம்மாளை இப்போது என்ன செய்வது? அவளைக் கல்யாணத்திலிருந்து மீட்டுக் கொள்வதா? அல்லது நாரணம்மாவை மேலெழும்பிக் கொண்டு வருவதா? பயமாக இருந்தது, பரந்தாமராஜூவுக்கு.

வயலில் இருந்து ரயில்வே லைனில் ஏறி மறு பள்ளத்தில் இறங்கிக் கொண்டிருந்தபோது வெள்ளையம்மாளை இடுப்பில் கையைப் போட்டு வழக்கமில்லா வழக்கமாய் அவளைத் திருப்பி "என்ன வெள்ளையம்மா? என்னெ விட்டுட்டுப் போயீரப் போறியா?" என்றான். வெள்ளையம்மாள் ஒரு புறாவைப்போல் படபடத்து அவனிடமிருந்து திமிறி எவ்விப் பாய முயன்றாள். பரந்தாமராஜூ அவளது மார்பகங்கள் புதைய அவளை நெருங்கினான். அவனுக்கே பூரணமாய் நிச்சயமாகாத இந்தக் குரூரமான வழியை இவன் வேறு யாரிடமிருந்தும் வேறெந்த

சாஸ்த்திரங்களிடமிருந்தும் கற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இதோ–இந்த ஜனங்களின் வாழ்க்கையிலிருந்துதான்–ஏன்? இந்தப் பெண்களிடமிருந்துதான்–இந்த வழியையும் அவன் கற்றான்.,

நீண்ட நேர முயற்சிக்குப்பின் வெள்ளையம்மாளை அவன் அவனது ஆக்ஞைக்குள் கொண்டு வந்தான். ஏறத்தாழ வெள்ளையம்மாள் சிக்கிய நேரத்தில் தண்டவாளத்தில் பத்துமணி போட் மெயில் பாய்ந்து ஜிகுஜிகுத்து வந்தது. கண்ணைப் பறிக்கும் நேரத்தில் வெள்ளையம்மாள் பாதி நிர்மாணமாகவே எந்த வித அவனது ஊடாட்டத்துக்கும் வழங்கிக் கொடுக்காமல் அவனைத் தள்ளி எழுந்து இருளில் ஓடினாள். வாழ்க்கையில் முதன் முறையாக நெஞ்சுக்குள்ளே குத்துண்டான் பரந்தாமராஜூ. தலை முழுதும் பற்றி எரிந்தது. குழந்தையின் கூக்குரல்–அதன் வழியே இறங்கி நடந்தான் பரந்தாமராஜூ. சிறுசிறு குடிசைகள் ரயில்வே லைன் ஓரம்–சரிவில் வரிசையாக இல்லாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாய் இருந்ததனால் ஓரிடத்தில் வழி குறுகியும்–ஓரிடத்தில் விரிந்தும்–ஓரிடத்தில் அகன்றும்–ஓரிடத்தில் நீண்டும் இருந்தன. முற்றத்தில் பெண்கள்–குழந்தைகள்–எல்லோருக்கும் அவனைத் தெரியும். திண்ணைகளில் ஆண்களும் பெண்களுமாய் மண்ணெண்ணைக் காடா விளக்குகளை வைத்துக் கொண்டு பூக்கட்டிக் கொண்டு இருந்தார்கள். அவனைப் பார்த்ததும் பெரும்பாலான முகங்கள் மரியாதையுடன் புன்னகைத்தன. பெண்கள் "வாங்கண்ணே" என்றார்கள். அவன் பேசாமல் நடந்தான். ஒரு குறுகிய வழியில் இறங்கித் திரும்பியபோது சரளாவின் ஆர்ட் ஸ்கூல் தென்பட்டது. அதைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான் பரந்தாமராஜூ. விளக்குகளெல்லாவற்றையும் அணைத்து விட்டு முன்னறையில் ஜமுக்காளம் விரித்து சுவரோரமாய்ச் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள் அவள். அவள் எதிரே ஜம்னா. அவனை எந்த நேரத்திலும் அவ்விரு பெண்களும் எதிர்பார்க்கவில்லை. அவன் வாழ்க்கையை–அதன் பொருளை–எல்லாம் மிகத் தெளிவாகப் புரிந்து கொண்டவள் ஜம்னாதான். ஆனால் அது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஜம்னாவும் தனது கடந்த காலத்திலிருந்தும் நிகழ் காலத்திலிருந்தும் விடுதலை பெறத் தவிப்பவள்தான். ஆச்சர்யமான நுண்ணறிவும், அபூர்வமான தெளிவும் கொண்ட அவள் பரந்தாமராஜூவின் சாரமே அவள் தந்ததுதான் என்பதை ஏனோ மறந்துவிட்டாள். அமைதியாக அவர்களுடைய சம்மதத்தைப் பற்றிக் கவலைப்படாமல் அவர்கள் எதிரே ஜமுக்காளத்தில் சம்மணமிட்டு உட்கார்ந்தான் பரந்தாமராஜூ.

மிகச் சிறிய இடம்தான். அதை மிக அழகாகவும் அமைதியாகவும் கையாண்டாள் சரளா. சரளாவும் ஜம்னாவிடமிருந்துதான் கற்றுக் கொண்டதாகச் சொல்கிறாள். இவர்களிருவரையும் மட்டும் பரந்தாமராஜூ தன் கலைத் துறைக்கு பயன்படுத்தாது, அவர்களே தங்களை அந்தக் கலைத் துறைக்கு முன்னமே தந்துவிட்டதுதான். சரளா இனி தன்னந்தனியாக நிற்கமுடியும். ஜம்னாவைப் பற்றி நினைத்ததுமே நெஞ்சு குபீரென்று நிறைந்தது அவள் இன்னும் ஏன் அவனை விட்டுப் பறந்து விடுகிறாள்? வார்த்தைக்குள் வர மறுக்கிற விஷயம் அது. அவள் எத்தனை வேகத்துடன் அவனிடம் ஓடோடி வந்தாளோ, அத்தனை வேகமாய் அவனை விட்டு தூர தூரமாய் ஓடிக் கொண்டு இருக்கிறாள். அவன் உபாசனைகள் அங்கிருப்பவர்களுக்குப் புரியவில்லை. அவனது சுய விருப்பும் விலக்கும் யாருக்கும் புரியப் போவதில்லை அவன் எல்லாப் பெண்களையும் வைத்திருந்தான் என்பதும் எல்லோருக்கும் ஒத்துக் கொள்ள முடிகிறது. நம்ப முடிகிறது, ஜம்னா உட்பட.

அவன் காரிய காரணங்களுக்கு உடந்தையாய் நின்று ஜம்னா-அவன் அந்தக் காரணத்தை எட்டித் தொட்டுவிட்ட ஜம்னா-அவனது உடம்பை மட்டும் ஏன் புறக்கணிக்கிறாள்? தாங்க முடியவில்லை. எதிரே அமர்ந்திருந்த ஜம்னாவால் அவன் பார்வையைத் தாள முடியவில்லை. ஏறத்தாழ ஆறேழு மாதங்கள் பரந்தாமராஜூவின் மனைவியாக எல்லோருமே அவனை மறந்துவிட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். வாழ்க்கை யதார்த்தம் என்றெல்லாம் யோசித்தால் அபத்தமே மிஞ்சும். ஏனென்றால் யதார்த்தம் என்பது வேறு. அது அவர்களை விட்டு தூரமாகவே இருந்தது. பரந்தாமராஜூவும் சரளாவும் ஒருவரை ஒருவர் வழக்கம்போல்ப் பார்த்துக் கொண்டார்கள். பார்வைகளில் எந்தத் தீவிரமும் இல்லை. மெதுவாக நிலத்தில் கையூன்றி சரளா உள்ளே போய் அவள் சமையலறையில் கிடந்த நாரத்தம் பழங்களை பிழிந்து சர்க்கரை ஊட்டி நாரத்தம் பழச்சாறு தயார் செய்தாள். தண்ணீர் ஊற்றிக் கலக்கினாள். இங்கே முன்னறையில் தனக்கு என்னவும் நேரலாம் என்று உள்ளூட ஒரு நடுக்கம் ஜம்னாவை ஆட் கொண்டது. பரந்தாமராஜூ அசைவற்று அப்படியே அமர்ந்திருந்தான். பழச்சாறுடன் கூடிய கிண்ணங்களை நடுவில் வைத்து நடுவில் அமர்ந்தாள் சரளா. "ஜம்னா எடுத்துக்க-பரந்து-நீங்களுந்தான்" என்றாள். பரந்தாமராஜூ சுத்தமாக மழமழ வென்று சவரம் செய்திருந்தான். ஒரு விதமான வெள்ளைப் பேண்ட்டும் நீல நிற ஜிப்பாவும் அணிந்து

தலையை ஒட்ட வாரி வினோதமான உருவம் கொண்டிருந்தான். ஜம்னா வியப்பாக அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்னா ராஜூ இந்தப் பக்கமே வரமாட்டேங்கறீங்க? முப்பது நாப்பது குட்டீங்கள வச்சுக்கிட்டு நான் அல்லாடறேன். கவர்ன்மென்ட்ல எய்ட் கூட குடுத்தாச்சு. அப்ரூவ்ட். ஒங்களை யெல்லாம் இதுல வாத்தியாரப் போட்ருக்கு, வெள்ளையம்மா சிப்பி-வெள்ள மாதிரிப் பொண்ணுகளையும் ட்ரெய்ன்ட் ஹேண்டா இன்ஸ்ட்ரக்டராப் போட்ருக்கு. ஆனா அவளுகளை இழுத்துக்கிட்டு கோயில் கோயிலாப் போனதுக்குத்தான் ஒங்களுக்கு நேரஞ் சரியா இருக்கு. இந்த ஸ்கூல் அப்படியும் ஒங்களுக்கு நெறைய யங் ஆர்ட்டிஸ்ட்களைத் தந்திருக்கு. இப்ப ஒங்ககிட்ட வொர்க் பண்ணீட்ருக்குற இந்த ரெண்டு ப்ராமின் கேர்ள்ஸையும்-அந்த நாரணம்மாவையும்-நீங்க எங்க கிட்ட இருந்து புடுங்கிக்கிட்டீங்க. வூட்லயுந் தங்கறதில்ல. ஜம்னாவும் ஒங்களெ ஒண்ணுஞ் சொல்றதில்ல. ஸோ வாட் இஸ் யுவர் பர்ப்பஸ் ஆஃப் டூயிங் ஆல் திஸ்? திங்க்ஸ்' மரீ எஞ்ச் சயாலீ?-இதந்த்தா பிச்சி" எல்லாம் பைத்யம்!"

"சரளா, முன்னயே ஒனக்கு பல தடவ சொன்ன விஷயந்தான். எனெக்கு இந்த ஒலகம் பத்தாது. பாக்குறதுக்குத் தெரிஞ் சுக்கறதுக்குக் கத்துக்கறக்கு அனுபவிக்கறதுக்கு-மட்டுமில்ல-அதைத் திருப்பிக் கலையா மாத்தி ஒலகம் முழுசையும் கட்டித் தழுவிக்கறதுக்கு எனக்கு நேரம் போதாது. எனக்கு சுகம் முக்கியமில்ல. நிம்மதி அவசியமில்ல. இன்பந் தேவையில்ல. ஒலகத்துல பெரிய பெரிய ஞானிகள்ளாம்-பெரிய பெரிய ரிஷியெல்லாம் இந்த அமைதி சாந்தி-நிம்மதி-தூக்கம் சுழுத்தி-யோகம்- தாந்த்ரீகம்-லயம்-அடக்கம்-ஒடுக்கம் (இஸ்லாம்) எழுச்சி-ஆரோஹணம் (அரவிந்தர்) எல்லாருக்கும் எல்லாம் ஒழச்சி நிறுவறது-நிமித்தறது (கம்யூனிஸம்) இருந்தாப்போதும்-இருக்குறதுபோதும்-இருக்குறதுல இருந்தாப்போதும்-வேறொண்ணும் வேண்டாம் (எக்ஸிஸ்டென்ஷியலிஸம்) எல்லாத்துலயும் ஒண்ணுமில்ல-எதுலயும் ஒண்ணுமில்ல சனியன் எனக்கு என்ன தெரியாதுன்னு ஒனக்குத் தெரியாது (ஸெப்டிஸம்) சூன்யம்-இப்பிடி இதுல போய் முடிஞ்சுருவாங்க. எனக்குக் கேள்விகளுக்கு விடை வேண்டாம். அப்பாடா விடை கண்டு பிடிச்சுட்டேன்னு சந்தோஷம் வேண்டாம் சரளா! நான் எதையும் புரிஞ்சுக்கக் கூட வேண்டாம். நான் அதுவா மாறினாப்போதும், 'நான்' 'அது' ஆணும்.

எல்லாத்துலயும் கலந்து எல்லாமாயும் ஆயிடமுடியும். அதுக்கு எனக்கு ஒரு வழி கண்டுபிடிக்கத்தான் இத்தனை பாடும், ஒலகத்த அதனோட அசட்டுத் தனமான போக்குலேருந்து யாராலயும் மாத்த முடியாது. மனசு ஒண்ணுதான் மிகப் பழைய சொத்து. மனுஷ்யன் ஓர்த்தனுக்குத்தாம் மனசு. எஞ்ச இருக்கு காட்டுன்னு கேப்ப. மண்டைக்குள்ளாறதான் இருக்கும்பாங்க விஞ்ஞானிங்க. அதோட முடிஞ்சு போயிட்டதா எல்லாப் பெரிய ஆசாமிங்களுஞ் சொல்றாங்க. ஆனா மனசையே இன்னும் பூராவாப் பாத்து முடிக்கல்ல. நரம்புகளப் பத்திக்கூட இன்னும் முழு உண்மைகள் கண்டுபிடிக்கப்படல்ல. மனசுக்கு அந்தப் பக்கத்துல இருக்குற விஷயங்கள் இன்னும் ஆச்சர்யமா இருக்கு. நம்ம பயலுவ வெள்ளக்காரன் எழுதுன 'மெட்டாஃபிஸிக்ஸ்'ஸப் படிச்சுட்டு 'ஆ ஊ'ன்னு அலட்றதப் பாத்தா சிரிப்பு வருது. யோகாஸனத்த எக்ஸெர்ஸைஸாவும், காம சூத்ரத்த செக்ஸ் அறிவுன்னும், தாந்த்ரீகத்த ஜாலி என்ஜாய்மெண்டாகவும், நம்ம தத்துவத்த எல்லாம் ஏதோ வெளிநாட்டுக்காரஞ் சொன்னா–கேட்டுக்கிட்டு ஆடற ஒரு சாமியாட்டமாவும் வெச்சுக்கிட்டு, படிப்புங்கிறத ஒப்பிக்கிற மனப்பாடமாவும் வேலைங்கறது தலைவிதின்னும், பொம்பளைன்னா அது அனுபவிக்குற பொருள்ன்னும், ஆம்பளைன்னா ஏதோ பெரிய கொம்புன்னும், நாம தப்பாட்டம் ஆடிட்டுருக்கற வரைக்கும் ஒண்ணுலருந்தும் ஒண்ணு தப்பமுடியாது. சுருக்கமாச் சொன்னா ஒவ்வொரு விஷயமும் ஒவ்வொருத்தனும் தானே தேடிக் கண்டுபிடிச்சு அனுபவிக்குற விஷயமா ஆகணும். இந்த விஷயம் எனக்கு என் வழீல ஓங்களயெல்லாங் கொண்டு வந்து சேத்தது தப்புன்னு தோணுது. ஆனா இன்னும் கீழ–மண்ணுக்குக் கீழ–பொதஞ்சு கெடக்குற மனுஷங்களை நாம் மேல கொண்டாருவேன். அவுங்களெ என்னோட சித்ரப் படத்துக்குள்றக் கொண்டு வந்து அவுங்களோட கையாலயே புதுசா ஒரு உலகத்தையே அந்த ஓவியங்களாலேயே அடைவேன். அடையமுடியும். ஆனா இதுக்கு சுயநலம் மட்டும் ஒதவாது. நான் ரொம்ப நாள் இதுலயே ஒழண்டவன். ஆனாலும் நான் ஒனக்கு சொல்லிக் குடுக்க முடியாது. நாம் போற எடத்த ஒனக்கு காட்ட முடியாது. நீயாத்தாம் போயாகணும். அதுதான் ஒன்னக் கடேசி வரைக்குங் கொண்டு சேக்கும். நாம் போகப் போகும்போதுங்கூட இதயெல்லாம் ஒனக்குச் சொல்ல முடியாது. ஏன்னா எனக்கு இந்த ஒலகமும் பத்தாது. நாச்சி–சிப்பி வெள்ளை–ராஜலக்ஷ்மி–ராமலக்ஷ்மி–சுலோச்சனா அந்த ப்ராமணப் பொண்ணுங்க சுதா–சுப்பு–நாரணம்மா இதயெல்லாம் ரொம்ப

யோசிச்சா, எனக்கு பாவமாத்தான் இருக்கு. ஆனா அவுங்க எல்லாரையும் எப்பவும் நான் நேசிச்சேன். இப்பவும் நான் நேசிக்கிறேன். அவுங்க எல்லாரையும் நான் கெடுத்தும்–அவுங்களுக்கு அனுபவந் தந்துருக்கலாம். இஞ்ச அது தப்புமில்ல. சொல்லப் போனா நாஞ் செய்யலேன்னா வேற யாராவது அவுங்க அத்தன பேரையும் என்னவிட மோசமா, இன்னுங் கேவலமா, இன்னுந் தீவிரமாகக் கெடுத்துத்தான் இருப்பாங்க. இனிமேயுங் கெடுக்கத்தான் போறாங்க. இந்தக் கெடுக்கறதுங்கற வார்த்தையே அபத்தம். சொகம்மா சாப்ட்டுக் கிட்டு வர்ணத்த வாரி மிருதுவான படங்களையும் அற்புதமான காட்சிகளையும் தார்மீகமான ஓவியங்களையும் ஒலகமே பார்த்து வணங்கும்படியா எழுதி எங்க நாயனா கடேசில நாஞ் செஞ்ச காரியத்தயேதாஞ் செஞ்சிருக்காரு. அமைதியா–நிம்மதியா சமூகத்துல திருப்தியா நகையெல்லாம் பூட்டி ஒரு கொழந்தையையும் பெத்து இனி மேலும் உதாரண புருஷரா எங்க நாயினா வாழட்டும். வாழுவார். எனக்கு கொஞ் சங் கண்ணாடித் துண்டும், வர்ணமும், பசையும் போதும். அதுக்கு ஒருத்தியத் தேடினப்போ ஜம்னா கெடச்சா. ஆனா இப்ப ஜம்னாவும் ஏங்கைல இல்ல. என்னோட வாழறது ரொம்பக் கஷ்டட்டம். ஐ'ம் ந்நாட் ஜஸ்ட்டிஃபையிங் மை செல்ப் சரளா! பெண்ணான ஓங்களால கருப்பையை அறுத்து அந்தப் பக்கம் வெச்சுட்டு ஒரு ஆணோடயும் போகவும் முடியாது. வாழவும் முடியாது. இந்த இயற்கையோட வஞ்சனை ஒரு அபாரமான கலைப் படைப்போ, எனக்குத் தெரியுது. பெண் எப்பவுமே தன்னிட்டருந்தே தப்பவே முடியாது. அப்ப ஆம்பள விடுவானா? ஆனா நான் ஜம்னாவ விட்டுட்டேன். ஆறு மாசமா நீயுஞ் ஜம்னாவும் எனக்குப் பயந்து பயந்து தப்பிக்கிறீங்கன்னு தெரியும். நானுஞ் ஜம்னாவும் ஒரு சாதாரண குடும்பம் பண்ணியிருந்தா ஜம்னா பிள்ளதாம் பெத்துருப்பா. ஆனா அவ அதுக்கு முன்னாலியே அவளோட யோனி முக்கோணத்துல நூறு கொழந்தைய உள்ள தள்ளி இருக்கா. நூறு என்ன–ஆயிரங்கூட இருக்கும். ஒருத்தன்னா ஒருத்தங்கதானா–ஒருத்தனுக்குள்ற ஒருத்தன் உள்ளேயிருந்து வெளீல வர்றதுதாங் கொழந்தைன்னு இல்ல சரளா. ஜம்னா அதக் குழந்தைகளையெல்லாம் ஒடனேயும் பெத்தெடுத்திருக்கா. இதத்தான் நான் இடிஞ்ச மராட்டிய சொவர்ல செதுக்கினேன். இனிமேயும் ஜம்னாவுக்கு நான் வேணும்னா நான் எனக்குன்னு யாரையும் தேடிப் போயி எட்டிப் புடிக்க என்னால முடியாது. இதல்லாம் ஏன் ஓங்கிட்ட சொல்லிட்டுருக்கேன்? ஜம்னாட்ட என்னால சொல்ல முடியாது. எங்களோட வெளயாட்டு இனிமே

இருக்கக்கூடாது. அவுளுக்கு ஆம்பளைன்னாலே அருவெருப்பான பின்னாலதான் என்னோட ஓடி வந்துருக்கா. நானும் இன்னொரு ஸ்த்ரீலோலனா அவளோட யோனிய நோக்கிப் பாஞ்சுருக்கேன். என்னாலியே என்னோட அபத்தத்தத் தாங்க முடியாமத்தான் நான் என்னயே ஒடுக்கி அடக்கிப் பட்டினியால, பசியால, இன்னும் எனக்கே நாம் போட்டுக்கிட்ட விதிகளால, அடியாழத்துல அழுத்தித் தள்ளினேன். கொஞ்சம் கொஞ்சமா என்னோட சுய உருவம் பசியிலதான் எனக்குத் தெரிஞ்சுது. பசின்னா பட்டினியில்ல. விருப்பத்தோடக் கத்துக்குற ஒரு உபவாசம்ன்னு தெரிஞ்சுது. ஒடம்பு வெறும் முக்கோணம் மட்டுமில்ல. ஒடம்புக்குள்ற நூத்தெட்டு முக்கோணம்னு புரிஞ்சுது. இதுல எவனுந் தப்பமுடியாது. புத்திசாலியா இருந்தாலும்–கிருஸ்தவனா இருந்தாலும்–சைவனா இருந்தாலும்–சோஷியலிஸ்ட்டா இருந்தாலும்–ஒடம்பு ஒவ்வொரு கட்டத்துலயும் மனுஷனை வீழ்த்தும். ஒவ்வொரு வயசுல ஒவ்வொரு மாதிரியா அடிச்சுத் தள்ளுங்கீழ. இதுலருந்து தப்பிக்க எனக்கு இருந்த ஒரே வழி நிக்ரஹம்

ஜம்னா! ஒன்னோட பொறுமையிலிருந்துதான் நான் அடுத்தடுத்து மாறிக்கிட்டே இருந்தேன். இப்போ நாம ரெண்டு பேருமே மோதிக்கிற நெலைக்கு வந்தாச்சு. சொல்லப் போனா என்னவிட இதெல்லாம் ஒனக்கு முன்னமேயே தெரிஞ்சுடுச்சு. ஆனாலும் நீயி பொண்ணு–பொம்பள–யோனி–கருப்பை–விடுதலை அடையமுடியாத வெலங்கு. ஆனாலும் நான் ஒன்ன விடுதல பண்ணீட்டேன். நாளக்கி நான் இஞ்ச இருக்க மாட்டேன். எஞ்ச இருக்கப் போறேன்னு எனக்கே தெரியாது. எனக்கு எல்லா விடுதலையும் ஒங்கிட்டருந்தான் வாய்ச்சுது. ஒனக்கு ஒரு வாழ்க்கைய பெண்ணே விரும்பற மாதிரியா ஒனக்கு ஏற்படுத்தியுங் கொடுத்துட்டேன். கல்லுஞ் சுண்ணாம்புங் கண்ணாடித் துண்டுகளும் வர்ணமுங் கையில எடுக்குறப்பல்லாம் ஒஞ்ஞாபகம் எனக்கு எப்பவும் இருக்கும். ஒன்னோட ஒடம்பு மனசு அது மட்டுமல்ல. அதத்தாண்டி ஒன்னோட அந்தக் கரணத்தயும் நாஞ் சாதனையாப் பண்ணீருக்கேன். நம்ம ஊரு ஆளுங்க பொண்ண பூஜ பண்ணீருக்கான். என்னால அது முடியல்ல. ஆனா என்னப் போல விடுதலைய ஒனக்கும் எனங் காட்டி இருக்கேன். எடுத்துக்றதும் அத அநுபவிக்றதும் அதுக்காக வாழ்றதும் அவுங்கவுங்களோட நெலைமையைப் பொறுத்தது. ராமலக்ஷ்மி ஒரு கோடின்னா சிப்பி வெள்ளக்கி இன்னொரு கோடி. இது ஒரு விதமா அவிங்க எல்லாரையுமே. இந்த ஆர்ட்டுக்குள்ற கொண்டு வந்து சேத்து ஒவ்வொருத்தியையுமே ஒரு தனி ஆர்ட்டிஸ்ட்டா

வளர்த்துக் கொண்டு வந்துடும். ஜம்னாவுக்கு இனிமே யாரோட வழிகாட்டலுந் தேவையில்ல. ஏதோ ஒரு பயணம். எப்டியோ தொடங்கி இப்படி வந்து முடிஞ்சிருச்சு. இப்ப முடியும்னு கொஞ்ச நேரத்துக்கு மின்னாடிகூட எனக்குத் தெரியாது. வாழ்க்கை இனிமே என்னை ஏமாத்த முடியாது. பொருளாதாரம் எங் கொலைய அறுக்க முடியாது. பெண்கள் இனிமே–இனிமேலயும் உத்தமமான ஸ்னேகிதகளாத்தான் இருப்பாங்க. இன்னும் நெறைய ஜம்னாக்களையும் நாங் கண்டுபுடிச்சுக் கொண்டு வரப் போறதில்ல. அவுங்களாவே அவுங்கள விடுதலை செஞ்சுக்குவாங்க. அதுக்கு என்னோட வெறுங் கண்ணாடிகளும் சுண்ணாம்பும் பசையும்போதும். நீங்க ரெண்டு பேரும் இனிமேலயும் இது மாதிரியே ஓர்த்தரை ஓர்த்தர் கவ்வி, ஓர்த்தரை ஓர்த்தர் கலந்து இருக்கமுடியும். ஒரே ஒரு விஷயந்தான் எனக்கு வருத்தம். பாபிய என்னோட இந்த ஏழை ஜனங்களுக்கு மத்தியில கொண்டு வந்து சேக்க முடியலையே... அப்புடிங்கறதுதான். நெறையப் பேசிட்டேன். புரிஞ்சதும் புரியாததுமா... எனக்குத் தெரிஞ்சதுந் தெரியாததுமா–நெறையவே சொல்லீட்டேன். அதெல்லாம் உண்மைக்குள்ற போகப் போவுதா? பொய்க்குள்ற இல்லாமப் போகுதாங்குறது? அததுபோன வழி பலன்–எனக்கு ஒண்ணுமில்ல."

நீண்ட நேரம் விட்டு, விட்டு பதறியும், உதறியும், உணர்ச்சியில் மூழ்கி, கண்ணீரால் கலங்கியும், வாய் ஓயாமல் அவன் புலம்பிய சொற்களை பீதியுடன் அந்த அபலைகள் இருவரும் பதறிக் கேட்டுக் கொண்டிருந்தனர். இடையில் அவர்களால் குறுக்கே ஒரு வார்த்தை தானும் பேச முடியவில்லை. எளிமையான அந்த சித்திரப் பள்ளியின் தோற்றமும், அதற்கெல்லாம் மூலகாரணமானவனுமான அவன், தங்களிடம் இருந்து எத்தனை அகாதமான தூரத்திலிருக்கிறான்? என்றெண்ணிய அவ்விரு அபலைகளும் தாங்கமுடியாமல் குமுறினார்கள். வெளியில் சாரலும் மழையும் ஆரம்பித்தது. தவளைகளின் குரல். தொடர்ந்து மழையின் பேரோசை. 'ஹோ' என்று பெய்தது மழை. அவனைத் தடுக்க வேண்டுமென்றும் , மறுக்க வேண்டுமென்றும் அவனை அடித்துத் துவைத்துக் கிழித்தெறிய வேண்டுமென்றும் அந்த இரு பெண்களும் ஒரே நேரத்தில் கர்வம் கொண்டார்கள். அது அவர்கள் இருவருக்குமே ஆச்சர்யமாகப் புரிந்தது. அவனைக் கிடக்க வேண்டும்–அவனைப் போகவிடக்கூடாது–அவனை இனி யாருக்கும் விடக்கூடாது–அவனுக்கு வயிற்றைக் கிழித்து பிள்ளைகளைப் பெற்றுத் தர வேண்டும் என்று அடியாழத்தின் பேராசை ஒருகணம் அவர்கள் இருவரையும் அலைக்கழித்தது.

அவனை மிக நன்றாய் அறிந்த ஜம்னாவும் இப்போது வெந்தாள். சரளா அவளையும், அவள் சரளாவையும் உற்றுப் பார்த்துக் கொண்டனர். மழை பேய் மழையாக அடித்தது. சாரல் நாலு புறங்களிலும் உள்ளே விசிறி அடித்தது. அவன் இன்னும் ஏதாவது சொல்லுவானோ என்பதுபோல் இருவரும் காத்திருந்தார்கள். ஆனால் அவன் தலைகுனிந்தபடி சம்மணமிட்டு அப்படியே உட்கார்ந்திருந்தான். யாருக்கும் எதுவும் பேச ஒன்றுமிருக்கவில்லை. மெதுவாக அவன் எழுந்து அந்தப் பெண்களிடம் ஏதும் வார்த்தையாடாமல், திறந்திருந்த கதவுகள் அவனை ஆவென்றிழுக்க இதற்காகவே காத்திருந்தவன்போல் மழையில் இறங்கி அந்த அபலைகளின் கூக்குரல் பின்னால் துரத்த, திரும்பியும் பாராமல் மழையின் பள்ளத்தில் வழுக்கும் தரையில் காலூன்றி மேட்டில் ஏறிக் கடந்துபோனான் பரந்தாமராஜு.

# 16

'ஜோ'வென்று பெய்து கொண்டிருந்தது பேய் மழை. மழையின் ஒவ்வொரு துளியும் ஊசிச் சாட்டையாய் உடலெங்கும் பாய பரந்தாம ராஜூ குடிசைகளின் வழியே மேடேறி பூக்கார ரெண்டாந் தெருவுக்கு வந்துவிட்டான். மழை கூடிக் கொண்டிருந்தது. பேய்க் காற்று வேறு சுழன்றடித்தது. பனிக்கட்டியாய் ஜில்லிட்டது. மழை வெள்ளம் ஒரு மின்னல் பயங்கரமாக வீசி, இடி ஒன்று சொடேலிட்டபோது மழையில் அந்த சேரி முழுதும் ஒரு முறை மின்னல் ஒளி வெள்ளத்தில் மூழுகி மறுபடியும் இருண்டபோது—அந்தத் தெரு முழுதுமிருந்த மின் விளக்குகளும் அணைந்து எங்கும்—கருமை பூசிக் கொண்டது.தனக்கென இனி யாருமில்லை. இங்கிருக்கும் எல்லோரையும் அவர்களுக்கே தந்துவிட்டுப் புறப்படும் நேரம். இந்த மழை வந்து மறித்தால் நின்றுவிடப் போகிறானா? மறுபடியும் சொடேரிட்ட மின்னல் எதிரே அவன் குடிசை தெரிந்தது.

வழக்கம்போல் குடிசை பூட்டாமல் இருளோவென்று திறந்து கிடந்தது. இனி அதைப் பூட்டி விடுவார்கள். இனி என்ன செய்வது? நிச்சயமாக இனி என்ன செய்ய வேண்டுமென்று கடந்த ஒரு வருஷ காலத்தில் அவன் எப்போதும் எண்ணியவன் அல்ல. ஜம்னா! நீ கற்றுக் கொடுத்தாய். அதேபோல் வெட்டிப் பிரித்துவிட்டாய். திறந்து கிடந்த வாசலின்

திண்ணையிலும் மழைச் சாரல் ஈரப்பாட்டம் போட்டிருந்தது. குடிசையில் யாருமில்லை! குடிசையின் உள்ளே நுழைந்தபோது அங்கிருந்தது யார்? இருட்டு இருட்டுடன் எப்பொழுதுமே ஓர் இணக்கம் உண்டு பரந்தாமராஜூவுக்கு. ஆனாலும் இருட்டில் ஏதோ அசைவுகள் தென்பட்டன யாராக இருக்கும்?

"யாரது?" என்றான்.

"வாங்க மச்சான். கூப்டுவீங்களான்னு பாத்தேன்" என்றாள் கருப்பு.

அவன் அயர்ந்துபோனான். கடந்த சில வாரங்களாகவே விலக்கியும், ஒதுக்கியும் வந்த பெண் அவள். எல்லோரைவிடவும் ரொம்பவும் விலகி இருந்தே அவனுடன்கூட ஒட்டியவள் கருப்பு. மிகவும் சஞ்சலத்துடன்.

"என்னடி கருப்பு, என்ன விஷயம்?" என்றான்.

"சாயங்காலத்துலேருந்து தெருவே குபாரா கெடக்கு. என்னா விசயம்னு கேக்கறீங்க?"

"என்னது? எனக்கொண்ணுந் தெரியாதே!" என்றான் பரந்தாமராஜூ.

"நம்ம சுலோச்சனா அரளி வெதைய அரச்சுக் குடிச்சிப்புட்டு மல்லாந்துட்டா"

"என்னாது? நம்ம சுலோச்சனாவா?" கத்தினான் பரந்தாமராஜூ.

தன்னுடன் ஓடி ஓடி கலையுணர்வு மிக்க பெண். பெண்களே கலையுணர்வு மிக்கவர்கள். ஆனால் கலையுணர்வு மட்டும் தனியே வெளியே வராது. லேசில் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். காமத்தோடோ காதலோடோ-அர்த்தமில்லாத அசட்டுத் தனத்தோடோதான்-அவர்களிடமிருந்து வெளிக் கொணர வேண்டும். சுலோச்சனாவை பல முறை பயங்கர விளையாட்டுக்கு உட்படுத்தி இருக்கிறான் பரந்தாமராஜூ. ஒவ்வொரு முறையும் அவள் குற்ற உணர்வோடுதான் அவனிடமிருந்து பிரிந்து செல்வாள். பரந்தாமராஜூவின் கைபடும் போதெல்லாம் அவள் வெகுவாகவே நெளிந்து குழைந்து வழுவப் பார்ப்பாள். அதனாலேயே அவனது வட்டத்தில் கடைசி ஆளாய் நின்றாள். இப்படி ஒரு அசட்டுத்தனமான சாவு எல்லோருக்குமே காத்திருந்தபோதும் சுலோச்சனா ஏன் ஒரு அர்த்தத்தை தேடினாள்? கருப்பு அவன் தோள்களில் கைகளைப் போட்டபடியே பயத்துடன் சொன்னாள்.

“பதினஞ்சு நாளா சுலோச்சனா மேல முனியாண்டவரு வந்திருக்காரு. பெரம்பாலயே அடி கொன்னு எடுத்துட்டாங்க. செல பேரு அது முனியாண்டவரு இல்ல. பேய் புடுச்சிடுச்சி அப்படிங்கறாங்க. ஆடாடுன்னு ஆடி இன்னக்கிக் காலைலை குளுந்துட்டா. சுலோச்சனா” என்று சொல்லியபடியே அவன் மார்பில் சாய்ந்து தன் ஸ்தன பாரத்தால் உந்தி “எனக்கு பயமாருக்கு மச்சான்” என்ற படியே ஈரத்தில் குளிர்ந்து ஜில்லிட்டிருந்த அவனைத் தீ கொண்டு வலையம் செய்தாள் கருப்பு.

ஒரு கணம் அவளுடலில் இருந்து வீசிய க்ராம்பு மணம் அவனை அச்சுறுத்தியது. “என்னத்த எடுத்துப் பூசியிருக்க” என்றான் சட்டையை அவிழ்த்தபடியே.

சாவு ஒரு சாதாரணமாய் சுலோச்சனா என்ற சடலமாய் வெறும் நினைவாய்–அவர்கள் இருவரின் உடல்களிடையே கிராம்பு மணமாய் எழுந்தது.

“ஜம்னாக்கா பூசிக்கும்ல்ல அதுதான். இஞ்ச சும்மா ஒக்காந்துருந்தேனா! இந்த மாடக்குளீல இந்த பாட்டில்ல இருந்திச்சு. என்னான்னு எடுத்துப் பாத்தேன். வாசனையா இருந்திச்சு. அக்கா பூசிக்குறதப் பாத்துருக்கேன்ல”

“சரீ. வூட்டுக்குப் போ. நேரமாச்சு. இஞ்சருந்த அவ்வளவுதான்.”

“இஞ்சதான் இருப்பேன். என்ன ஏம் போச் சொல்ற? நெத்திலிப் பொடி கொளம்புஞ் சொறாப் புட்டும் செஞ்சு வச்சிருக்கேன். அக்காளும் வந்துரும். இருந்து ஓங்க ரெண்டு பேருக்குஞ் சோத்தப் போட்டுட்டு நானும் ரெண்டு வாயி போட்டுக்கிட்டு இஞ்சயே படுக்கப் போறேன். எங்க வூட்ல படுக்கவே எடமில்ல. மனைல குடிசயே அவரப் பந்தலாருக்கு. வீட்ல எல்லாந் திண்ணையில மட்டுந் தாம் படுக்கும். நா வேற போனா தெருவுலத்தான் நிக்கனும். ஆமா! இன்னக்கி ஏம் போ போன்னூ தொறத்துற. ஒன்ன வுட்டுட்டு எஞ்சியும் போமாட்டேன்”

“ந்த பாரு நான் நல்லவன் இல்ல. நல்லாவுமில்ல. நீ பண்றது சரியுமில்ல. ஒனக்கு ரொம்ப எடங்குடுத்துட்டேன். ஒன் இஷ்ட்டத்துக்கு ஆடலான்னு நெனச்ச களுத்த நெறிச்சுப் போட்டுடுவேன். ஆமா பாத்துக்க”

“அடப்போ மச்சான். கொன்னுடுவேங் கொன்னுடுவேன்னு கிட்டு–எல்லா செறுக்கிகளுந்தான் ஒன்ன நல்லா ஏமாத்திப்புட்டுப் போயிட்டாளுவ! ஒம் பொண்டாட்டி மாத்திரம் என்ன?

இந்த வூட்டுக்கு அவளக் கூட்டியாந்தியே நீயி ஒரு நாளாவது அவளோட... அக்காளோடதாஞ் சொல்றேன்... பாவம் நீயி! பொம்புளயா அவ! இந்நேரம் 'ம்ன்'னு சொல்லீரிந்தீன்னா நாம் பெத்துக் குடுத்துருப்பேன். அவளச் சுத்திச் சுத்தி வந்த. எல்லாச் செறுக்கிவளும் வுன்ன நல்லா பராக்குக் காட்டீட்டுப் போயிட்டாளுவ. யேன் ராசா... நா ஒங் கண்ணுல படலயா? கருப்பீன்னு முண்டயத் தள்ளீட்டுப் போயிட்ட. நீயி என்னத் தள்ளி வெக்யலாம். இந்தச் செறுக்கி மனசுல ஒரே நெனப்புத்தான். நாம் பாண்டிக்காரி. படுக்குறது ஓர்த்தனோட–முளிக்கிறது இன்னொருத்தம் மூஞ்சிலேன்னு என்னால முடியாது. நீயி என்ன வேணாச் செஞ்சுக்க. யார வேணாலுங் கட்டிக்க. ஆனா இந்த மதுரக்காரி கருப்பு எப்பவும் ஒனக்குத்தான். நீயி கீள தள்ளி மிதிச்சிட்டுப் போ, ராசா. ஆனாலுங் கருப்பிவிடமாட்டா. ஒங் காலக் கட்டிக்கிட்டேதாந் திரியுவா"

"ச்சீ நாயே–இந்தப் பேச்செல்லாம் பேசாத. நாளக்கிக் காலையில நா இஞ்ச இருக்க மாட்டேன். எஞ்ச் போறேன்னு எனக்கே தெரியாது. ஒங்களுக்கெல்லாம் எந் தொழிலக் கத்துக் குடுத்துட்டேன். அது ஒங்களக் காப்பாத்தும். எங்க ராஜூ ஜாதில ஒரு பயலும் இந்தத் தொழிலக் கத்துக்கறதில்ல. எல்லாஞ் சோத்தத் தின்னுட்டு சாவுறதுக்குப் போயிட்டானுங்க. நீயும் அழிஞ்சு போய்டாத. இஞ்சருந்து சரளாக்கும் ஜம்னாக்கும் தொணையா நில்லு. தஞ்சாவூர் சித்ரப்படம் இனிமே சாவாது. சாவடிச்சுடாதீங்க. நாச்சி–சிப்பி வெள்ள எல்லாம் பெரிய பெரிய ஆளுங்கள்ளாம் மண்ணக் கவ்வுற மாதிரி அபாரமாப் படம் பண்றாங்க. நீயி ஏன்ட்ட மொமொதத் தயாரானவ. ஒனக்கு இதோட ரகசிய மெல்லாந் தெரியும். நீ இருந்தீன்னா தொழிலுக்கு நல்லது. ஏம் பின்னால சுத்தறது ஆத்துத் தண்ணீல எறங்குற மாதிரி. சொன்னா ஒனக்குப் புரியாது. மரியாதையா கௌம்பற வழியப் பாரு. ஒங்க எல்லாரயும் வுட்டுட்ப் போறது எனக்கு ரொம்பத் திருப்த்தியா இருக்கு. அதக் கெடுத்துடாத" என்று தழுதழுத்தான் பரந்தாமராஜூ.

வெளியில் மழை நின்று பெய்தது. அவன் அவளையே பார்த்து கொண்டு நிற்க, அவனுக்குள் ஏதோ ஒன்று புகுந்து அவனை ஆட்டியது. ஜம்னாவின் தேகத்தின் ஸ்பர்ஸ நினைவுதான் அது.

"சத்தியமாச் சொல்லு மச்சான். ஓம் பொண்டாட்டிகூட சந்தோசமா தானிருக்கியா? என்னாலத் தாங்க முடியல்ல. ராசா. ஒவ்வொரு நாளும் வயிறெரிய இஞ்ச சமயப்

பண்ணிக்கிட்டே-பொட்டச் செறுக்கி-ம்மிராட்டித் தேவிடியா-ஒன்னக் கிட்ட அண்டவுடாம-ஆம்புள நீயி-நாய இளுத்துப் போட்டு நாலு சாத்துச் சாத்தி... பாத்துக்கிட்டுத்தான் இருந்தேன். எல்லாக் கண்றாவியையும்-நீயி மதுர வீரன்யா. ஓம் ம்ராட்டிச்சிக்கு ஒன்னத் தெரியுமா? ஒவ்வொரு நாளும் பாத்துப் பாத்தே செத்தேன். போதுஞ் சாமீ... போதும். இனிமே ஒன்னவுட மாட்டேன். நீயி போற எடந்தான் எனக்கு சொர்க்கம். ஒன்னவுட்டா இந்த நாயிக்கி போக்கெடங் கெடயாது. இந்த நாயி ஓங் காலச் சுத்திக்கிட்டுதாம் மண்டயப் போடும். நீயி போய்க்கிட்டே இரு. பின்னால நா இருப்பேன்."

"மிதிக்கப் போறேன் ஒன்ன. மரியாதையா எந்திருச்சுப் போ, தேவிடியா முண்ட"

"மிதிய்யா நல்லா மிதி. ஒன்ன நெனச்ச இந்த நெஞ்சுலியே மிதி" என்று கத்தினாள் கருப்பு.

வெளியில் பயங்கரமான இடியோசையுடன் மின்னியது. அத வெளிச்சத்தின் ஒரு கணத்தில் யாரிடமும் காணாத பேருருவைக் கண்டான் பரந்தாமராஜூ. கண்களில் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. அவளது முரட்டுத் தலைமுடி அவிழ்ந்து இடுப்புக்கு கீழே வரை தொங்கியது. அவளது மார்புகள் ஏங்கலடித்து விம்மின. கடைசல் பிடித்த கருங்காலி சிற்பம்போல் ஒருவிதத் தெற்கத்தியச் சாயலுடன் அந்த மின்னல் ஒளியின் ஒரு கணத்து வெட்டில் அவள் கருவறையிலிருந்து இறங்கிய அவனது அம்மன்போல் பேருருக் கொண்டு அவனைத் தாக்குவாளாகி நின்றாள். குடிசையின் இருபுறமும் மழையின் 'ஜோ'வெனப் பெய்யும் ஓசை முழவதிர இருபுறமும் பீடாலங்கார ப்ரதிமைகள் எழுந்து நின்றன. அவள் நெற்றிச் சுடர்த் திலகம் அங்காள பரமேச்வரியின் நெற்றிச் சுடர் பூண்டது. கறுத்த உடலும்-தாமரை இதழ்களும் செவ்வரி படர்ந்த பால் விழிகளும்-அபய ஹஸ்தமும்-பூரணமும்-சூலமும்-கொவ்வைச் செவ்வாயின் இருபுறம் சிங்கப் பற்களின் வளைவும் கருப்பியிடம் பிறந்து சடைத்து வளர்ந்தன. பட்டை பட்டையான கண்ணாடிகளின் கருப்பி உருக்கொண்டாள். பீடங்களும் பாதங்களும் தாமரை மலர்களும் அசுரனின் தலையறுத்த முண்டமும் செந்நிறக் கண்ணாடிகளில் சிற்ப சாதுர்யம் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாய்ப் பேரழகு பூண்டன. மராட்டிய பவானியம்மன் சாயலிலிருந்து வழிந்து ச்யாமளா தேவியாகி டமருஹு குந்தளம் போன்ற வாத்யங்களின் பேரோசையுடன் அம்மனின் சிலை வைரங்களால்-தங்க

ரேக்குகளால்—ஆபரணக் கூட்டங்களால் எழுந்த அம்மன் இப்போது கருப்பியாய் கன்னங் கரேலென்று மகேச்வரியாய்—உமையாய்—இருண்டு காளியாய் மண்ணிற்கு இறங்கி மனிதர்களுடன் கலந்த வியப்பாய் கருப்பி பேருருக் கொண்டாள். விச்வரூபம்! பெறும் பேறு.

பரந்தாமராஜுவின் முதுகுத் தண்டு சிலிர்த்தது.

சவுக்குபோல் தண்டுவடம் சுருண்டு நெளிந்தது. அவன் உடம்பெல்லாம் அனல்! மனதில் தமிர் வாசித்தது. உடுக்கு, பேரிகை, 'ஜண்டை—திமிறித்திமிறி திமிறி நாயனம்—ஜங்கார ஸ்ருதி—எங்கும் நாதஸ்வரத்தின் ராஜபாட்டை கருப்பி ஒருத்தியே. அண்டம் முழுதும் அவனை அழைக்கிறாள். மழை—மீண்டும் மீண்டும் மின்னல்! மீண்டும் மீண்டும் பேருருக் காட்சி!

அம்மனின் கைகளைப் பிடித்தபோது அம்மன் அவனோடு உந்தித் தாவிய உமா மகேச்வரனுடன் ப்ரண்ய வெறி கொண்டாள்.

வெண்ணிறப் புகை எங்கும் படர்ந்தது. ஜில்லிட்ட உடல் முழுவதும் பரவிய அனல்—அம்மன் மூட்டிய தீ! நாலு கால்களால் அங்காள பரமேச்வரி பரமன்மீது படர்ந்தாள்! இருட்டு பிளந்தது. ஒளி நொறுங்கி அங்காள பரமேச்வரியின் சுடர் கண்களாயின! பரமனின் கண்ணிதழ்கள் அங்காள பரமேச்வரியின் கண்ணிதழ்க் களைக் கவ்வி மூடிக் கொண்டு ஆயிரத்தெட்டு முக்கோணங்களும் சுடர—ஈச்வரப் ப்ரியா லயத்துடன் முக்கோணங்களுடன் முக்கோணங்களாய் சுழன்று பொருந்தின. கருப்பீ—ஈச்வரம் பரந்தாம ஈச்வரீ ஈச்வரீயம்... இரண்டற்று பேருருவாய் அந்தக் குடிசைக்குள்ளே ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவி இரண்டற்று இருளின் ஆழத்தில் அமிழ்ந்துபோனது.

இப்போது அவள் முறை.

அவனை எழுப்பினாள். உடல் முழுவதையும் துடைத்துவிட்டாள். ஈரம் இப்போது வியர்வையாகியிருந்தது. வியர்வையை அவள் வாங்கியிருந்தாள். அவளுக்கு இது எந்தச் சலனமும் இல்லை. அவனுக்கோ அவள் விதி. வாசலில் யாரோ அழைக்கும் சப்தம் கேட்டது. அவன் எழும்பவே இல்லை. அப்படியே கிடந்தான். வாசலில் யார்? கருப்பி எழுந்து, சீராகி தலையைக் கோதி ஒதுக்கி முடிச்சிட்டு வெளியே போய் "யாரது?" என்றாள்.

மழை அப்போதும் நிற்காது தொடர்ந்து பெய்து கொண்டே இருந்தது. மழையில் நனைந்தபடி ஓடி வந்திருந்த நாச்சி. முழுக்கவும்

மழையில் ஊறிய பாவாடையை திண்ணையில் நின்று குனிந்து பிழிந்து விட்டுக் கொண்டாள்.

"என்னாடி நாச்சீ! இந்த நேரத்துல?"

"ஒனக்கு விசயந் தெரியுமா? வெள்ளயம்மா அந்த சங்கரு பயலோட... ஊர வுட்டே ஓடுறா... பொம்மவுத்து புட்டு பஸ்ஸுல வந்து எறங்குனன்னா? சங்கரும் அவளும் பஸ்ஸுல ஏறுறாங்க. என்னாடின்னு கேக்குறேன். மெட்ராசுக்குப் போறாளாம். நாந் திரும்பி வரமாட்டேன். அப்புடி இப்புடிங்கிறா. மச்சானுக்குத் தெரியுமாடின்னு கேட்டேன். மச்சான் யாருங்குறா? என்ன யாரு கேக்குங்குறா? அதாம் மச்சாங்கிட்ட சொல்லலாம்னு ஓடியாந்தேன்."

"எவ எவனோட போனா அவருக்கென்னாடி ! நீயி ஒன் வேலயப் பாத்துக்கிட்டுப் போ. வந்துட்டா சொல்றதுக்கு. பொம்ம வித்த காசக் குடுத்துட்டுப் போய்ச் சேரு" என்றாள் கருப்பு.

நாச்சி அவளையே உற்றுப் பார்த்தாள். ஒரு நிமிஷத்தில் கருப்பு அவளுக்கு எல்லாம் தெரிந்துவிட்டது என்பதை உணர்ந்து பயந்தாள்.

"மச்சான் உள்ள இருக்கா? இல்லியா?" என்று கேட்டபடியே உள்ளே நுழைந்த நாச்சியைத் தடுக்க கருப்பியால் முடியவில்லை. நாச்சி தீவிரமான பெண். ஆரம்பத்திலிருந்தே அவன் கட்டளையில் வளர்ந்த பெண். இந்த ஓராண்டுக் காலத்தில் அவன் சொல்லாத எதையும் செய்தவளே அல்ல. அங்கு நிகழ்ந்த சூறையை சரியாக இனங்கண்டுவிட்டாள். அந்தச் சின்னஞ்சிறிய பெண். உள்ளே சுவரோரமாகச் சாய்ந்து லேசாகத் தலை கலைந்து அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பரந்தாமராஜுவை மேலுங் கீழுமாகப் பார்த்தபடி "அக்கா—எங்க மச்சான்? வூட்ல இல்லன்னுதான இந்த ஆட்டம் போடுறீங்க?" என்றாள்.

தலையைக் கோதியபடியே என்ன நிகழ்ந்தது என்பதைப் பற்றி கவலை இல்லாது அவளை அருகில் இழுத்து "பணம் எவ்வளவு கொண்டு வந்துருக்க?" என்று கேட்டான் பரந்தாமராஜு.

"ஒரு வாரமாத்தாம் பணத்த வச்சுகிட்டு அலையிறேன். ஒன்னத்தாம் பாக்க முடியல்ல. எஞ்ச போயிடுற நீயி? புடி இந்தக் காச—கிட்டத்தட்ட அறுநூறு ரூவாருக்கு" என்றாள் நாச்சி. அவன் கைகளில் வைத்தாள்.

அவள் கண்களுக்குள்ளே அவனைப் பார்த்தபடி—

“நாளக்கிக் காலையில இஞ்ச எல்லாத்தயும் விட்டுப்புட்டு ஊர வுட்டே போப்போறேன். அப்புறஞ் சொல்லிக்க முடியாது. இப்பவே சொல்லிக்கிறேன்”

“எஞ்ச போற மச்சான்”

“எஞ்சயாயிருந்தா என்ன?”

“ஏம் போறியாம்?”

“போகனூன்னுதான்—இஞ்சருந்து அஞ்ச”

“இஞ்சருந்து அஞ்சியா, அதான் எஞ்சன்னு கேக்குறேன்”

“ஏன்? ஏங்கேக்குற? எஞ்சியா இருந்தா ஒனக்கென்ன? ஜம்னா கேக்கல. சரளா கேக்கல—யாருங் கேக்கல. நீயி கேட்டு என்னா பண்ணப் போற?

“எப்பப் பொறப்புடுற நீயி?”

“காலையில—விடியக் காலம்பர—இருட்டோட”

“தனியாவா போற? தனியாப் போயி என்னா பண்ணப் போற?”

“தனியாத்தான் போகணும். ஆனா தனியாப் போகமுடியாது”

“நானும் வருவேன். ஒன்ன வுட்டுட்டு என்னால இருக்க முடியாது”

“கருப்பும் இப்பிடியே சொல்றா. நீயும் பைத்தியம் புடிச்சப் பேசாத”

பரந்தாமராஜூ அவர்கள் இரண்டு பேரையும் தப்ப முடியாது என்றுணர்ந்தான். ஜம்னாவுக்கும், சரளாவுக்கும் இது முடியவில்லை. இது இளமையில்தான்முடியும். பரிசுத்தம்தான் அதன் உரிமை. கேள்வி கேட்காத—எதையும் எதிர்பாராத நிவேதனம். வழக்கம்போல் அவன் தப்பிக்க விரும்பவில்லை. வழக்கம்போல் வேஷங்களை மாற்ற அவன் விரும்பவில்லை. விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் யாதானும் ஓர் வேஷம் நிச்சயம். வேண்டுமானால் சத்யமான வேஷம் என்று பொய் சந்தோஷம் கொள்ளலாம். ஆனாலும் வேஷம் வேஷம்தான். வேஷங்கள் மாறினாலும் மூலத் த்ரிகோணம் மாறாது. எங்கும்—எப்போதும் வேஷங்களே மீண்டும் மீண்டும் நித்யம். இதில் யார் வேஷம் இல்லை. நிஜம் நிஜமென்று தேடி பொய்யையே நிஜமென்று சந்தோஷப்படுவதில் எல்லோருக்குமே திருப்தி. வேஷத்தை—நாச்சிக்கு அல்லது கருப்புக்கு—இளங்காட்டி வேஷத்தின்

பொய்ம்மையை உடைத்தால் மீண்டும் மிஞ்சப் போவதொரு வேஷம். பரந்தாமராஜூ என்ற வேஷம், கலைக்கமுடியாத வேஷமல்ல "இங்கிருந்து 'அங்கே' போகும்போது தானாய் கழன்று விழும் அந்த வேஷம். அப்போதும் மிச்சமிருக்கப் போவதொரு வேஷம். எல்லா முகமூடிகளுக்குள்ளும் மிச்சமிருக்கிறது. ஒரு முகமூடி. எல்லா கேள்விகளுக்கும் அரிவாளாய் வளைந்து காத்திருக்குது ஒரு கொலைக் கேள்வி. கேள்விகளெங்காவது பதிலாவதுண்டா? அழுக்கும்–வறுமையும் பசிப்பிணியும்–மேலும் தொடர்ந்து வரும். மானுட இன்னல்களெல்லாம் கேள்விகளாகவே நீடிக்கின்ற அதிசயத்தை என்னவென்று சொல்ல?

கருப்பி பலியாகிறாள். ஆனால் அவள் வீடு அவள் இல்லாமல் பலியாகும். நாச்சி சிதைகிறாள். யாருக்கு பலியாவாள்?

நான் விரும்பிச் செய்தவை–விரும்பாமல் செய்தவை எல்லாமே என்னைத் தொடர்ந்து வரத்தான் போகின்றன.

எனது நிக்ரஹங்கள் யாவும் இதோ சிதைகின்றன. எல்லாம் மறுபடியும் என்னைச் சூழ்கின்றன.

மறுபடியும் மறுபடியும் எனக்குள்–இவைகள் பேருருக் கொள்கின்றன.

"இங்கிருந்து 'எங்கே' எப்போதுமே 'அங்கே' என்பது மட்டும் பதிலாகும் கேள்வியும் ஆகும்.

மறுபடி மறுபடி அதுவே தொடரும்.

'இதிலிருந்து 'எது' என்கிறாள் நாச்சி 'அது' என்பதுதான் பதிலாகும், கேள்வியும் ஆகும். நாச்சியும் கருப்பும் மீண்டும் மீண்டும் எனக்குக் கேள்வியும் பதிலும் ஆனார்கள்.

வானத்தே பறக்கும் அசுரனும்–வாளுயரத்தில் நிற்கும் மதுரை வீரனும் காடனும்–மாடனும்–இருளனும்–பாவாடைராயனும் எல்லாம் எல்லாரும் எல்லாமும் 'நான்' ... 'நான்' ...

நாச்சி உனக்கு இது புரியும் வேளை.

கருப்பு நீயும் 'அது'வாவாய்.

உடல்–இதற்கொரு சாதனம்–மனம் இதற்கொரு வாஹனம். புத்தி இதற்கொரு வழி–சித்தம்–இதற்கொரு நிலையம் அதற்குப்பின்னே? பின்னேயும்–எனக்கு வழி தெரியும்–உனக்குக் காட்ட எனக்குத் துணிச்சலும் உண்டு. நீ நம்ப மாட்டாய்

மனசுக்கும் புத்திக்கும் அப்பால் வழி சொல்ல இன்றைய உலகின் எந்த அறிவுக்கும் விஞ்ஞானத்துக்கும், நிரூபணத்துக்கும் திராணி இல்லை.

அடீ பெண்ணே! கருப்பு-ஜம்னாவிடமிருந்து கற்றதுபோல் இந்த மண்ணின் புழுதியிலிருந்து நாச்சி! உன் குருதியிலிருந்து உன் மூலையின் ஆழத்திலிருந்து அவற்றை நான் கற்பேன். இப்போது உனக்குப் புரியாது. உன் தலைமுறைக்கும் புரியாது. இதை போகமாகவும், லீலையாகவும் பெண்ணின் யோனி முடுக்காகவும், உடலின் அசிங்கமாகவும் சொல்லிக் கொடுத்து உங்களை மூலை இருட்டில் நிறுத்தி உங்களைப் பாரம்பர்யமாகவே வெறும் உடம்பாக்கி இருக்கிற தத்துவங்களையும் மதங்களையும் விசாரகர்களையும் ஹதம் செய்ய யாருக்கும் திறனில்லை.

பெண்ணே! நாச்சி–நீ வெறும் பெண்ணல்ல. உன் பேருருவை உனக்குள் கண்டு கொள்ள–கருப்பீ–உன்னைப்போல் உன்னையே வெட்டி பலி தர உன்னைப்போல் முயலும் பலரை இம்மண்ணிலிருந்தே எழுப்பத்தான் நான் புறப்பட்டிருக்கிறேன்.

சுடலை மாடனும்–இருளனும்–சூரனும்–பாவாடை ராயனும் இன்னும் என்று பவத்தின் இம்மண்ணின் கோடிக் கணக்கான தெய்வங்களும் இதற்காகவே புறப்பட்டன. சிலைகளாகி நின்றுபோயின. நான் அவற்றை மீண்டும் எழுப்ப வந்திருக்கிறதுலேயே உங்களையும் அதற்கழைக்கவே என் கைகளில் இவைகளை எடுத்துக் கொண்டேன். இவைகள் வெறும் சுண்ணாம்பும் பசையும், ரசாயனக் கலவையும், பல வர்ணக் கண்ணாடிகளும் மட்டுமல்ல. இவைகளைச் சொல்ல இன்னும் எத்தனை பேரையும் நான் அனுகித் தீர்வேன். அதுவரை எனது மண்ணின் பெருமை தொடரும். இதற்கு ஒரு முடிவில்லை. 'இங்கிருந்து' 'அங்கே'

இருளில் இருந்து ஒளிக்கு

சேய்மையிலிருந்து அண்மைக்கு

சிறிதிலிருந்து பெரிதிற்கு

பெரிதிலிருந்து உண்மைக்கு

உண்மையிலிருந்து நுண்மைக்கு

இந்தப் பயணம்–

என்னிலிருந்து உனக்கு

ஏதொன்றைக் கேட்டால்–மற்றெல்லாவற்றையும் கேட்டாயிற்றோ–ஏதொன்றைச் சிந்தித்தால் மற்றெல்லா வற்றையும் சிந்தித்துத் தீர்ந்ததோ–ஏதொன்றினை அறிந்தால் மற்றெல்லாவற்றையும் அறிந்து முடிந்ததோ–'அதனை' நீ அறிந்து கொண்டாயா? நீ அஃதாவாய். அஃதே உன்னை வழி நடத்துக. நீயே உனக்கு வழி, உன் வழி நீயே!

தூரத்தே எரியும் சுடர் உன்னை வழி நடத்துக. கடுகிக் காற்று வீசும்போதும்–புயலுன்னை சுழற்றும்போதும் 'நீ' 'நீயல்லாது' போகும்போது அஃதே உன்னைத் தொடர்ந்து இட்டுச் செல்க. அதனை நீ தொடர்வாயா? அல்லது அது உன்னை இழுத்துச் செல்லுமா? துணிந்து செல்.

பூர்ண மத; பூர்ண மிதம்

பூர்ணாத் பூரணமுதச்யதே

பூர்ணஸ்ய பூர்ண மாதாயே

பூர்ணமேவா வசிஷ்யதே

"எல்லாம் எதுவும் எப்படியும் பூர்ணமாகும் பூரணமே!"

* * *

**வி**டியற்காலை. இருள் பிரியும் புலர் – இரவெல்லாம் மழை பெய்து ஓய்ந்திருந்த கங்குலின் இருளில் மூவர் எதைப்பற்றியும் யாரைப் பற்றியும் கவலைப்படாது அந்த மேட்டிலேறி தண்டவாளத்தின் வழியே நடந்து கொண்டிருக்கிறார்கள். கிழக்கே வெகு தூரத்தில் சிவப்புக் கரைகள் வானத்தின் கோடுகள் இழுக்கத் தொடங்கிவிட்டன. முன்னிரவு மேகங்கள் மழையால் கூடியவை இன்னம் பூரணமாய் விலகாததால் வானம் இன்னும் மழை வானமாகவே ஆங்காங்கே சிதிலம் அடைந்து கரி பூசிக் கொண்டிருந்தது.

ஒரு கையில் நாச்சியும் மறு தோளில் கருப்புமாய் நீண்ட தண்டவாளத்தின் லீவர்க் கட்டைகளின்மீது கால் பதித்து மெள்ள மெள்ள நடந்து கொண்டிருந்தான் பரந்தாமராஜூ. தஞ் சாவூர்ச் சித்ரப் படமொன்று அவன் கண்ணெதிரே புத்துருக் கொண்டு படர்ந்து கொண்டிருந்தது. . வறுமை, பசி, பிணி போன்ற எண்ணற்ற துன்பங்களாலும் கோடிக்கணக்கான அவநம்பிக்கைகளாலும் அது சிதிலமடைந்து நொறுங்கி அவலமாகி

இருந்தாலும் வெறும் புத்தியினால் மட்டும் தீர்ந்துவிட முடிகிற ஒரு கலைப் படைப்பல்ல அது. அதனைப் புதிதாகப் புதிதாகத் தன் உடைந்த நம்பிக்கைகளினாலும் நொறுங்கிய கனவுகளினாலும் தூளான ஆசைகளினாலும் நசுங்கிய நெஞ்சகளினாலும் ஒட்டி ஒட்டிப் புதிதிற்குப் புதிதாய் அறிவிற்கு அறிவாய்—விஞ்ஞானத்திற்கு விஞ்ஞானமாய்—சத்யத்திற்கு சத்யமாய் பரந்தாமராஜூ தஞ்சாவூர்ச் சித்ரப்படமாய் எழுப்பி நிறுத்தாமலா இருக்கப் போகிறான்? என்றும் புதுவதாய் அது நீங்களாகும்.

●

மின்னூலாக்கம்
முரளிதரன்



தஞ்சாவூர் – கள்ளத்தை கலைநயத்துடன் கூடிய உயர் தொழில் நுட்பமாக்கி உலகத்தரத்திற்கு தந்த கலைகளின் கலைக்களஞ்சியம். இன்று எல்லாம் தூர்ந்து போய், வறண்டு, புழுதி பறக்க பெருமைகளின் எச்சமாய் இருண்டு போய்ப் பயமளிக்கிறது. தொலைந்துபோன பெருமையை வரலாற்றுப் பதிவாக 'கள்ளம்' நாவலில் தந்திருக்கிறார் ப்ரகாஷ். உலகச் சந்தையில் பொருள் மதிப்புமிக்க வணிகமாய் கலை கள்ள ஒப்பனை புனைவதை எதிர்க்கும் ஓர் உயரிய கலைஞனின் அப்பட்டமான வாழ்வை கள்ளம் குடித்து காவியமாக்கி தந்திருக்கிறார் ப்ரகாஷ். கலை பரிமாணம் கொள்ள வேண்டும். விதவிதமாய் வெளிப்பட்டு கலைஞனின் தனித்துவ பிழிவாய் தன் தரத்தை மெய்ப்பிக்க வேண்டும். தேங்கி, முடங்கி, மழுங்கிவிடக் கூடாது. இந்த அற்புதக் கலை ஆயத்த நகலாகும் ஆபத்தான கள்ளத்திற்கெதிராய் கலக வடிவமெடுத்திருக்கும் இந்த நாவலை, ப்ரகாஷ் தவிர வேறெந்த கொம்பனாலும் நினைத்துக்கூடப் பார்த்திருக்க முடியாது என்பதை வாசிக்கிறவர்கள் உணர்ந்து கொள்ளும் அனுபவத்தை தருவதே இந்தக் 'கள்ளம்' நாவலின் உன்னதம்.

- **சுகன்**

₹ 200




www.discoverybookpalace.com